த்தவுணர்வொளிநெஞ்சமுலகிவற்றினறிவதுவாய்ப் புகலலாகும், பருத்தொழிற்செய்யினுங்கற்போலிருக்குநிலையதுவாய்ப் பகரலாகும். (௬௨)

முடிவுகனவஞ்ஞானமில்லாநீடுயிலதுவாமும்மையாகி, யடர்தருஞாதுருஞானஞேயமெழுந்தொடுங்குமிடமதுவேயாகுந், திடவிசும்பன்றுயிருந்தும்விசும்பானநிலையதுவாஞ் சித்தம்புந்தி, படர்மனம்போய்த்தாவரம்போற்பெறுமுளறிவொப்பாமப்பரமரூபம். (௬௩)

அயனெடுமால்சங்கரனுஞ்சதாசிவனுமிந்திரனுமருக்கன்றானும்
வியனிலுபசாந்தராம்வேலையினிலுபாதியெலாம்விட்டுநீங்கிப்
பயனில்சகமென்கின்றபற்றகன்றுசின்மயமாம்பரமரூப
முயர்விகற்பமிலாவடிவாயெங்குநிறைசிவமாகியொன்றாய்நிற்கும்.

ஞானவிண்மகன்கதை முற்றிற்று.

ஆ திருவிருத்தம்- ௨௩௩.

## லீலைகதை.

இந்தப்பொருளையமறுத்திளைப்பாறுமாறோர்
முந்தக்கதைகேள்குணமுற்றிவிவேகமுற்றோன்
விந்தைப்புயத்தோன்பதுமப்பெயர்வேந்தன்மண்மேற்
சிந்தைக்கினிதாங்குணலீலையச்செம்மறேவி. (௧)

அன்னனிழல்போன்மனம்போலயலற்றவன்னா
ணன்னாயகன்மூப்பிறப்பின்றிநற்காளையாகி
யெந்நாளுமொத்தின்புறவென்கொலுபாயமென்னத்
தொன்னூன்மறையோர்க்குரைத்தாளவர்சொல்லலுற்றார். ()

செபமுந்தவமுமுதலியாவையுஞ்சித்திநல்கும்
புவனங்களிற்பொன்றுதல்போக்கரிதியார்க்குமென்ன
விவள்சிந்தைசெய்வாளிறைவற்குமுன்யாமிறந்தாற்
கவலொன்றறத்தற்பதவாழ்வுகைகூடலாகும். (௩)



இறைவன்முதற்சாகிலச்சீவனையிந்தவீட்டி
லுறையும்படிசெய்ததுவென்னையுவந்துகாண்க
நிறையின்பமெய்தியிருப்பேனிதுநேருமாறு
மறைதந்தவாணிபதமேத்துவன்வாழ்த்தியன்றே. (௪)

மன்னற்குரையாதுநன்மந்திரங்கற்பம்வல்லோர்
சொன்னத்தினின்றுசுரர்பூசுரர்பூசைபண்ணி
யன்னத்தைநாணன்கினுக்கோர்பகலற்பமாயுண்
டின்னிட்டையாலேமதிபத்துநடந்தவெல்லை. (௫)

வானார்மதிபோனிறவாணிமகிழ்ந்துதோன்றி
நீநாடியதென்னெனநீள்பவமாநெருப்புக்
கானாவமுதக்கதிரோயகத்துன்பமென்னும்
பாநாளகற்றுங்கதிரோயெனப்பாதமேத்தி. (௬)

என்னாயகன்றுஞ்சிலச்சீவனிவ்வில்லினிற்க
முன்னாகவுன்னைநினைபோதிலென்முன்புதோன்ற
வன்னாயவரங்களிரண்டுமளித்தியென்ன
நன்னாமகளன்பொடுநல்கிநயந்துபோனாள். (௭)

பக்கத்தொடுதிங்களுறும்பருவங்கடேர்க்காற்
றொக்கிச்செறிநாளதிற்கூம்புதொடர்ந்தவாண்டு
புக்குற்றதோரச்சிமைப்போததினுபியாதி
மிக்குத்திரிகாலவன்றேர்விளைந்தோடலோடும். (௮)

இன்பங்களையற்றிடலீலையிருந்தவெல்லை
யன்பன்சிலநாளிலிறந்தனனன்னமன்னா
டுன்பஞ்சுடும்வெம்மைபொறாதுயிர்துஞ்சுமுன்னே
முன்பின்றிவிண்ணினின்றுசொன்மாதிவண்மோகமாற்றி. (௯)

மாய்வுற்றவேந்தைமலரான்மறைவித்துவைப்பா
யேய்வுற்றபூவுலராமெய்யழியாதுசீவன்
பாய்வுற்றகலாதுபொன்மண்டபம்பற்றிநிற்குந்
தோய்வுற்றிவன்றோள்விளைவிற்றுயர்தீர்தியென்றாள். (௧௦)

வாடாவசரீரிதன்சொற்படிமன்னை வைத்தா
ளோடாதவாவியுடையாளுளத்துன்னவாணி
நீடாதுவந்தாளெனதன்பனைநீங்கிவாழ்தல்
கூடாதவன்சேர்வழிகூட்டுதிவல்லையென்றாள். (௧௧)

மனவானமும்வானமுமாசறுஞானவானு
மெனவானமூன்றின்முதல்வானமிரண்டுமின்றிக்
கனஞானவானெய்துதல்கண்டதைவிட்டுப்போத
நனவாயபலொன்றையுற்றனடுஞானவானும். (௧௨)

சங்கற்பசாலந்தவிர்ந்தாலுபசாந்தமாகித்
துங்கப்புவியாவையுமாகியசோதிதோன்று
மிங்கற்பமுங்காண்பனவில்லைவெறும்பொய்யென்று
லங்கப்பொழுதவ்வறிவாலதுசேர்தலாகும். (௧௩)

நம்மாலதுசேர்கெனநாமகணல்கியேக
விம்மாதுவிகற்பமிறந்தசமாதியெய்தித்
தம்மாலுறைகூடகல்புள்ளெனத்தாவுநெஞ்ச
மைம்மாலுறுகூட்டினைமாற்றினளக்கணத்தில். (௧௪)

மங்காதஞானவிசும்பூடொருமாநகர்க்கே
வெங்காதலனெட்டிரண்டாண்டுளவீரனாகிச்
சிங்காதனமேற்செறிவேந்தருஞ்சேனைநாலும்
பொங்காதரமாதரும்போற்றவிருத்தலோடும். (௧௫)

வேறு.

தன்னுயிர்க்கேள்வனையந்தலீலைநோக்கிச்சபைபுகுந்தாண்மிகவியந்தாள்சபையைச்சூழ்ந்த, மன்னவருமுனிவருமறைவல்லோருமங்கையருநாற்படையுமற்றுளோரு, நன்னிலமுங்குன்றுகளுமூருநாடுநதித்திரளும்பலபொருளுநண்ணிநோக்கி, மின்னனையாண்மீண்டுதனதிடத்தின்மேவிவெண்ணிறவாணியை நினைத்தாள்விருப்பினோடும். (௧௬)

வந்துபராதனத்திருந்தவாணிதன்னைவணங்கியெனதன்பனுக்குமரித்தபின்பு, பந்தமுறுமயக்கமேவடிவாய்நிற்கப்பழையபடிபிறப்



புற்றபடியீதென்ன, விந்தவுலகுறுமயக்கம்போகச்சொல்வாயெனலீலைகேட்டலுமேயிறைவிசொல்வா, ளுந்துசிருட்டியின்முன்புமயக்கமட்டேயுருவாமிச்சிருட்டிவேறுதித்ததாகும். (௧௭)

அப்படியேயுன்கணவற்கிரண்டாஞ்சென்மமாயினதாலீதுனைப்பவறிந்துகேட்பாய், மைப்படிவிலாவிமலஞானவிண்ணின்மற்றொருபொன்மாயாமண்டபமொன்றுண்டாஞ், செப்பரிய விசும்பென்னுமயூரப்பீலித்திரையாலே மறைத்திருக்குஞ் செம்பொற்குன்றுங், கப்புறுபொற்றூணிலுறையுலகபாலர்காரிகையாரொனும்பொறிகள்கலந்துநிற்கும். (௧௮)

ஒருகோணந்தனிற்பூதப்புற்றுமாங்கேயுறைகின்றமலைகளெனுமோடுமுண்டாம்,வருகாதற்புத்திரர்சூழ்விருத்தவாலமறையவனுங்கொருவனுறைமனையதாகுங், குருவானவாயுவின்மார்க்கத்துலாவுகோலவிமானப்புழுவின்குழுவைமேவு, மருகானவிண்ணிலுறைசித்தர்கூட்டமானகொதுகினாகின்றவரவாநண்ணும். (௧௯)

வானவர்தானவரொன்னுந் தீயமக்கண்மதர்த்தவிளையாட்டோசைமாறாதாகு, மானதொருமாமாயாமண்டபத்திலாங்கொருபாலொருகோணத்தகத்தினுள்ளே, மானமிகுமலையென்னுமோட்டிலொன்றின்மலைகளினுலாறுகளால்வனங்கடன்னுன், மேனலமார்நகரொன்றுண்டதனில்வாழ்வோன்வெங்கனலோன்வேதியரின்மிகவுமிக்கோன். (௨௦)

வடிவுபொருள்வயதொடுக்கஞ்சேட்டைவிஞ்சைவசிட்டனுக்கொப்போனந்தவசிட்டனென்றே, படியுமுணர்வினனல்லன்பெயராலிந்தப்பனவனையும் வசிட்டனெனப்பகரலாகு, மடிபரவுமருந்ததியையொப்பாளந்தவருந்ததியினுணர்வினளன்றமைந்தபேரா,னெடியவருந்ததியாகுமிவற்குத் தேவிநிலத்தி லிவள்விண்ணிலவணிகர்வேறில்லை. (௨௧)

இந்தவருந்ததிகணவனென்றுசொன்னவிவ்வசிட்டனம்மலையினிலங்குசாரன், முந்தியொருநாளிருப்பவேட்டைக் காங்கோர்முடிநிருபன்சேனையொடுமுன்வந்தெய்த, வந்தநிருபனைநோக்கி வசிட்டன்றேர்வானகோவகோமன்னவர்வாழ்வறவுநன்றாஞ்,சுந்தரமாம்புவிக்கரசாய்ச்சேனைசூழத்துணைக்கவரிபரிமாறச் சுகிப்பமென்றாள்.

கொடிகுடையினிழனெருங்கவாழ்ந்துமாதர்குங்குமக்கொங்கையின்மூழ்கிக்குளிப்போமெங்ஙாண், முடிவறுமிப்பயனென்றுபெறுவமென்றேமொய்காதலன்றுமுதன்முளைத்தநெஞ்சன், மடியறுதன்கருமத்தினின்றான்மூப்புவனசஞ் சேர்பனியின்வரமனைவிநிற்போலடிபரவியெனைவேட்டும்வரமுமீந் தேனந்தணனுமிறப்புற்றானுசையோடும். (௨௩)

அவன்மனையாகாசத்திற்சிவாகாசமாய் நின்றானுகாசவடிவானேனே, கவருறுமுன்னுளமூந்துசங்கற்பத்தாற் காவலன்றானேயாகிக்கலந்துநின்றான், றவமறையோன்சவமாகமனைவிசோர்ந்துதன்னிதயத்திரண்டாகிச்சரீரந்தனை, யுவமையுறுகணவனுடன்சவமாய்ப்போக்கியுயர்சூக்கவுடலொடவனுடன்போயுற்றாள். (௨௪)

ஆயமறையோன்மக்கண்மனையும்பூமியடவிகடாவரங்களெலாமங்கேயுண்டாய், மேயவுயிர்போயவற்குநாளெட்டாகும்விண்வடிவாஞ்சீவனுமவ்வீட்டினிற்கும், போயபவத்துனக்கன்பனவந்தப்பூசுரன்பூபதியாகிப்புணர்ந்தானன்று, தூயவருந்ததிப்பெயர்கொள்பனவியாகித்துணைவியாமந்தமடத்தோகைநீயே. (௨௫)

புதியனசக்கரவாகந்துணையதென்னப்பூதலஞ்சேருமையொடுபுராரியென்ன, வதிகலத்துணைவராமிருவராயிங்கரசுசெயுநீரவரோயாதலாலே, மதிநுதலாய்முதற்பிறப்பின்மயக்கஞ் சொன்னேமற்றிதுதான்மயக்கமாத்திரமதாகு, முதிதமுறுமாகாயவுடலாஞ்சென்மமொளிபெறத்தோன்றியதென்றாளுலகிலன்னை. (௨௬)

இந்தவுரைகேட்டலுமேலீலைசொல்வாளிறைவிபொய்யேயியம்பினையீதெங்ஙன்கூடு, மந்தணன்வீட்டுறைசீவனதுவெங்கேயோவன்னியமாயிருந்தயாமடைந்ததெங்கே, முந்துறுமவ்வேற்றுலகத்திருப்பாரந்தமொய்கிரிகடசதிசைகண்முற்றுஞ்சேர,வந்தினிதிங்கியாங்களுறைமனையினூடேமருவுமடைவெப்படியோமாசிலாளே. (௨௭)

மத்தவயிராவதமோர்கடுகினேர்பான்மறிபடுமோவடமேருவந்தோர்கஞ்ச,வித்தினிடைப்புகுந்திருந்தோர்வண்டின்குஞ்சான்மிகநெரியுமோகொதுகுவெகுண்டுமோதி,யுத்தமியற்றிடச்சிங்கமனேக





மத்தோடோரணுவினிடைப்புகுமோவுரைத்தநின்சொல், வித்திறமேயொன்றுக்குமிசையாதாகுமென லீலைசொல்லுதலு மிறைவிசொல்வாள். (௨௮)

பொய்யாகவுரைத்திலம்யாமிதனினுண்மைபுகலக்கேளெனைப்போல்வார்புத்தேணீதி, மெய்யாகக்கொள்வதலாற்பேதியார்கள் வேதியன்றன்சீவனவனூரில்வீட்டி, லெய்யாமையுறைகின்றதிந்தநாடுமிவ்வரசும்விண்வடிவேயிவற்றையெல்லா, மையாரும்விழிமடவாயந்தவிண்ணேவடிவானவவன்றானேமகிழ்ந்துபார்க்கும். (௨௯)

தொன்மையாமந்நினைவுங்களுக்குத்தோன்றாதுவேறாகித்தோன்றுங்கண்டாய், பன்மையாநனினைவுகனவிற்றோன்றாப்பரிசெனவம்மரணத்தின்பான்மைதோன்றாத், தன்மயமாஞ்சத்ததினால்விளங்குமந்தத்தடஞானவிசும்பிடையோர்தனிமூலைக்கே, வன்மையாமிப்பூமிதோன்றிநிற்குமனநினைவிற்கண்ணடியில்வயங்குமாபோல்.

தெளிபரமவணுவாஞ்சிற்சொரூபத்தொன்றுஞ்செகமெலாமொளியுருவாய்ச்செறிந்திருக்கு, மொளிபெறவுள்ளேயுள்ளேயாதலான்முன்னுரைசெய்தபூமியுஞ்சித்துள்ளேதோன்றும்,வெளிபெறவீதறியென்றேவாணிகூறவேதியனெட்டாம்பகலில்வீந்தானென்றா, யெளிதிலெமக்கநேகவருடங்கள்போனதென்னெனலீலைக்குமீண்டிறைவிசொல்வாள். (௩௧)

தேயநீடியில்லாமைபோற்காலமுஞ்சிறிதுநீளியதல்ல
மாயபேதமிற்சிற்சுடர்தோன்றிடுமாத்திரமொழிந்தில்லை
மேயபொய்மரணத்தினாலொருகணமெய்ம்மறந்திடச்சீவன்
போயதன்னபாவனைமறந்திப்பவம்பொருந்துபாவனையெய்தும். ()

தாங்குகின்றதிங்கிதுவிதனான்மிகத்தாங்கிடப்படுவோநாம்
வீங்குகின்றநம்மெய்யிதுபிதாவிவன்வீந்ததித்தனையாண்டிங்
கோங்குகின்றநஞ்சுற்றமீதின்பமாயுறைவிடமிதுவென்றே
தேங்குகின்றபொய்மரணமூர்ச்சைத்திறந்தெளிந்தபின்சிந்திக்கும்.

ஆதலான்முதற்பவமறைந்திப்பவமறியலாயினதென்னப்
போதமாம்விழிநீதரவகோவகோபுரணமாய்த்தெளிவுற்றேன்

காதறீர்வுறவனையவருறைவிடங்காட்டெனவிவளோத
வேதநாயகியுரைசெய்வாளதற்கிந்தவினையுடல்விலங்காகும். (௩௪)

இந்தயாக்கையைமறந்துவேறறிவதற்றிலங்குசிற்சுடர்மெய்யா
மந்தநல்லறிவேவடிவாய்மலமறுத்தியேலதுகூடுந்
தந்தமக்கொருவடிவிலாவுலகங்கடமனியம்பணியாகி
வந்தவாறெனவுங்கண்மோகத்தினுன்மதித்திடப்படுமென்றே. (௩௫)

தத்துவம்பயில்வாதனையன்றியேசகங்கடன்மயமாகா
மெத்துசெய்தொழில்விட்டிலையாதலான்மேவுதற்கரிதுன்னுற்
சுத்ததற்பதமெம்மனோர்நிற்பதுதொடர்மனவடிவாக
வைத்தசூக்கமெய்தீர்க்கபாவனையினுல்வளர்ந்துபேருடலாகும். ()

கட்டியாம்பனிவெம்மையாற் கரைந்துபோங்கணக்கெனமெய்ஞ் ஞானஞ், சுட்டிநோக்கலும்வாதனைவிடுதலுந் தூலமாமுடல்விட்டுத், திட்டமாகியசூக்கமெய்நிலைபெறுஞ்சீவன்முத்தியுமாகு, முட்டஞானமேநிறையுமுன்னிவ்வுடனிறுத்திமுற்பவங்காண்பாய்.

என்றவாணியையத்திறனியற்றுமாறென்னெனவிவள்கேட்கத்
துன்றுசிந்தையும்வசனமுமுசாவுமத்தொல்பொருட்பொருட்டாகி
நின்றவின்பமுமுதாரமும்விராகமுநிறைந்துநீள்சகமென்று
மொன்றுமில்லெனக்கலைவழியூகமாயுணர்வர்சாதகரானோர். (௩௮)

அகமிதங்களிச்சிருட்டியின்முன்வருமபாவமாதலினென்று
மிகவுமில்லெனத்தெளிதருபோதமும்வேறுகாண்பனவற்று
நிகழுஞானத்தாற்காமமேமுதற்பகைநீங்கிடவந்தெய்துஞ்
சுகமுமென்றிவைசாதகமாகவேதொடர்வர்சாதகரானோர். (௩௯)

ஞேயமின்றியஞானமேஞானமுநினைத்துமேற்பெறும்பேறு
மாயவந்நிலைப்பரிசயமுத்தியென்றதிற்பரிசயம்பண்ணற்
றூயதோற்றரவென்றந்தவிரவிலேசொன்னவிருவோருங்
காயவாதனையறிவறச்சமாதியைக்கலந்தசைவறநின்றார். (௪௦)

அங்குலங்கள்பத்தளவெனவறிவினுலாகியவடிவுற்ற
மங்கைதன்னெடுமுன்னுளஞானத்தால்வயங்கியகலைமாதுந்



துங்கவிண்ணிடையெழுந்தனரளவறுதூரநீங்கிடவேகிப்
பொங்குமூழியினெடுங்கடலனையவான்புகுந்திவையிவைகண்டார்.

மட்டிலாததாய்த்தெளிந்துகோமளமதாய்மந்தமாருதத்தின்ப
முட்டிலாததாம்விசும்பிடைமனத்தினுமுடுகுசித்தர்கடுன்றி
பட்டமெங்கணுமரக்கரும்பிசாசருமளவின்றிநாய்காக
மொட்டகங்கரம்போன்முகயோகினியொழுங்குவிண்ணுழல்வுற்று.

களிகொணுடகத்திடாகினித்திரள்களுங்காற்றினுற்றிரிகின்ற
வெளிறுகங்கையுஞ்சுவரிலாமனையிடைமேவிவீணையின்பாட
றெளியுநாரதர்தும்புருகானமுஞ்சித்திரத்தினிற்கோட்டுந்
துளிகொள்கற்பத்தின்முகில்களுமாதர்தக்தொகுதியுமுளதாகி. ()

எல்லையின்றியயோசனைதூரங்களியார்க்குமெய்தரிதாகிக்
கல்லையொத்தறவிறுகுறத்திரண்டநீள்காரிருளுடைத்தாகி
யொல்லையோடுதேரிரவியுங்கனலுமேயொப்பதாமொளியுண்டாய்ச்
சொல்லுமித்திரளியாவையும்பற்பலவிடந்தொறுந்தொடர்வுற்று.

கொதுகினீடிரளத்தியின்காயிடைக்குமுறுவதெனவெங்குஞ்
சதுமுகன்றருமுயிரொலாமணைவுறுந்தன்மைமூன்றுலகுண்டா
மதுலவானகங்கடந்தனர்மீட்டுமோரவனியின்வரவெண்ணிப்
பதுமவண்டத்தைநீக்கிவேறண்டத்திற்பருப்பதநகர்புக்கார். (௪௫)

வினையர்சுற்றமுந்தனையருந்துக்கமாய்வெம்பு
மனையவேதியன்மனைபுகுந்தார்கண்ணிலனுகா
ரினையபோதின்மெய்ச்சங்கற்பமெய்தியலீலை
மனையுளோரெமைக்காண்கெனச்சங்கற்பம்வகுத்தாள். (௪௬)

பூமகளுமலைமகளும் போல்வாரைவனதெய்வம் போலுமென்றே, தாமவர்கண்டருச்சித்தார்தலைமகன்பார்த்தெமதன்னைதாதைமாய, யாமணுகுந்துயரொழிப்பீருயர்ந்தோரையெதிர்ந்தோருக்கெய்தாதுண்டோ,மாமதியினீரொன்னத்தலைதடவித்துயரொழித்தாள்வயங்குலீலை. (௪௭)

இருவருமவ்வயின்மறைந்தாருலகத்தின்சற்பாவமிவ்வாறுருகுங்,கருதியதுமுடித்தனமேற் கருத்தென்கொலென்றுகலைக்கன்னிகேட்ப,

மருவு சமாதியிற்கண்டமன்னவையோரெனைக்காணுவகையுமிந்தத், திருமனையோர்கண்டமையு மென்கொலெனச்செப்பென்றுடெய்வமன்னுள். (௪௮)

சாதகத்தா லன்றியிரண் டொன்றுகாதகம்பாவந் தனைநீங்காமற், போதமடைந் தனையதனாற் சத்தியமாஞ்சங்கற்பம் பொருந்திற்றில்லை, யாதலினாலவர்காணாரகம்பாவமற்றவறிவறிதலாலே, பேதமறநீவிதிக்கவிவர்கண்டாரெனவாணிபேசலோடும். (௪௯)

பெருவெளியாயுன்னருளான்முழுதுணர்ந்தேன்முக்குணத்தின் பிறப்புமற்றே, னிருவடிவாய்ப்பிரமத்திலகன்றெண்ணூற்றுடல்பலவாயெடுத்தேன்முன்ன, மொருதனிமாயாவிகற்பத்தோருலகாந்தாமனைமேலுறைவண்டாக,மருவியவிஞ்சையர்மகளாய்வாதனை தீதான்மனிதவடிவுமானேன். (௫௦)

வேறொருமாயாவிகற்பத்தரமகளாய்த்தழையுடுக்கும்வேடப்பெண்ணாய்ச், சூறைவலைப்புள்ளரசாய்க்கொதுகுமுதற்பலப்பிறப்பிற்சுழன்றுசோர்ந்து, சீறுகடற்றிரையிலசைதிரணம்போன்மாயையிலேதியங்கினேனை, யேறுவித்தாய்கரையென்னவிவள்சொன்னாளிருவரும்விண்ணெழுந்துபோனார். (௫௧)

யோகநெறியால்விண்போய்ப்பதுமனிடஞ்சேர்ந்துசவவுடல்கண்டப்பா, லேகியிவன்மறுபிறப்பாம்வேந்தனையெய்தலுமவன்மேலெதிர்ந்துவந்து, வேகவினையாகியொருவேல்வேந்தனமர்துடங்கிமிகவுமோத, மாகமயிலனையார்கணோக்கினாிருபடையுமலைந்தவன்றே. ()

மட்டிலாவிருபடையுமறவிநடுக்குறவெம்போர்மலைக்குங்காலை, யெட்டிலோர் கூறுக வெதிர்ந்தவனு லிவன்சேனை யிறத்தலோடும், பட்டுளோர்பிணக்குன்றுன் மறைந்தனனேசமர்கண்டுபெயப்பட்டானே, தட்டிலாவெய்யவன்போயிருணிறைந்ததிருபடையுந்தணந்துபோன. (௫௩)

பகைவேந்தன்படைவாங்கப்படாதசிறுபடையோடும்பரிந்துமீண்டு, தகைவேந்தனரமியத்திற்றுயிலுதலுமிவர்களுமத்தலத்திலெய்த,நகையார்ந்தநிலவனையவிவரொளியாலிளைப்பாறிநயனக்கஞ்ச,



முகைதோன்றவிழித்தெழுந்துபுகழ்ந்திறைஞ்சியருச்சித்தான்முன்னின்றோனை. (௫௪)

இவனதுநற்குலப்பழமைலீலைக்குவிளம்புவிப்பவெண்ணிவாணி, யவ னருகிற் றுயிலமைச்சன் விழிக்க வென வெண்ணுதலு மவனப்போதே, கவர்துயில்விட்டெழுந்திறைஞ்சக்கண்டகலைமகளவனைக்கருணைகூர்ந்து, புவனபதிகுலத்தொன்மைபுகலென்றாளமைச்சனிவைபுகலலுற்றான். (௫௫)

மன்னவவொண்மனுகுலத்தின்மன்னவனுங்கும்பரதன்மன்னர்மன்ன,னன்னவன்பத்திரரதனையளித்தான்மற்றவனகிலரதனைத்தந்தா,னின்னவன்பேரிரதனைத்தா னீன்றானிங்கிவன் சிந்துரதனைப்பெற்றான், சொன்னவ்வன்சேய்சைலரதனவனுக்குக்காமரதன்றோன்றலானான். (௫௬)

இனையவன்சேய்மகாரதன்மற்றிவன்சிறுவன்விண்டுரதனிவன்குமாரன், வினையமிகுமனோதரனிங்கிவனளித்தவிடூரதனிவ்வேந்தர்வேந்த, னனையிவற்குச்சுமுத்திரையாமையிரண்டுவயதிலிவற்கரசுநல்கி, நினைவொடுங்கும்பிதாவனமேனீங்கினனிவன்செங்கோனெறியினின்றான். (௫௭)

என்பளவில்வேந்தனைநின்முதற்பிறவிஞானத்தாலெளிதுகாண்கென், றன்பினொடுகையினாலவன்முடியைநாமகடொட்டருளலோடுந், தன்பகையாமனவிருள்போய்லீலையுடன்வாழ்பதுமன்றானாய்க்கண்டா, னின்பமுறவியப்புற்றான்மாமாயையிருந்தபடியென்னேயென்றான். (௫௮)

தாயரிவராற்றெளிந்தேனெனநாடியவர்சரணந்தலைமேற்சூடிப், போயபவத்துடனீங்கிநாளொன்றுமிவ்வுடலிற்புக்கபின்னைச், சேயவெழுபதுவருடஞ் சென்றதாற்செய்ததெலாந் தெளியாநின்றேன், மாயமிதுவென்கொலெனமன்னவன்கேட்டலுங்கருணைவாணிசொல்வாள். (௫௯)

இறப்பென்னுமாமூர்ச்சையெய்தியபின்னப்பொழுதவ்விடத்திற்றானே, பிறப்பென்னுமாமோகம்பெரிதுண்டாம்விண்போலப்பிறங்

கித்தூய்தாஞ், சிறப்புள்ளவுன்மனதிற்செய்தொழிலாமயக்கமேதெரியாநின்ற, துறத்துன்னுமெழுபதாண்டுனக்ககன்றதென்பதனையுணர்ந்துநோக்காய். (௬0)

கடிகையிரண்டினினெடியகாலமுறுங்கனவொக்குங்கழிந்தவாணாட், படியுறுமாபாவிகற்பனவிலேவெகுவிதமாய்ப்பரந்துதோன்று, நெடியபிறப்பிறப்பென்றுநினக்கில்லைமெய்ஞ்ஞானநினக்குரூப, முடிவில்பதத் திருக்கின்றாய் சகமெல்லாங் கண்டிருந்துமுழுதுங்காணாய். (௬௧)

எல்லாமாமியல்பினாலுன்னாலுன்னிடத்திலிருந்திலங்காநின்றாய், சொல்லாமைந்தைப்பிடித்ததொட்டிலிற்பேய்சுடலையிற்போந்தொன்மைபோலப், பொல்லாதமூகர்க்குப்புவியுறுதியாய்த்தோன்றும்பொன்காணாதோ,ரல்லாதுபணியென்பர்தற்பரத்தைக்காணாதோரகிலமென்பார். (௬௨)

தனைமுதலாய்க்காண்கின்றசகமெல்லாநீள்கனவாஞ்சகத்திற்றோன்று, மினையபொருள்களுங்கனவிற்காண்கின்றபொருள்களாமென்றுதேர்வா,யனையபொருள்களுங்காணுவறிவுமாத்திரம்வடிவாயனைத்துமேவி, வினையில்செறிவாய்க்கனமாய்ச்சுத்தமாகிப்பிரமவிண்ணேயுண்டாம். (௬௩)

முழுதுமாய்முழுதுடைத்தாய்ச்சத்திமுழுதுமுள்ளமூர்த்திதானே, பழுதிலாதெவ்விடத்தெப்படிதோன்றுமவ்விடத் தப்படியேதோன்றும், வழுவிலாமெய்ஞ்ஞானநிலைலீலைபொருட்டாணும்வழங்கப்பெற்றாய், நழுவிலாவுண்மையொடுந்தெளிந்தனையாம்போதுமெனநவிலலோடும். (௬௪)

இதுபுகலக்கேட்டரசனெனையடைந்தோர்களும்வேண்டிற்றெய்தாநிற்பர், புதுமணிநேருமைப்பணிந்துபுகழ்ந்தேன்வேண்டியதெய்தல்புதுமைத்தாமோ, பதுமவுடனுனடைவதென்றென்னவிப்போரிற்படுவைபட்டா, லதுபுகுவையெனக்கலைமாதளித்தலுமேற்றலத்தொருவனறைவதானான். (௬௫)

அப்புமழைசொரிந்துவருமடர்சேனைக்கடலெங்குமடர்ந்துநிற்க, இ
வெப்புடையகனற்கொழுந்தாலிந்நகரஞ்சாம்பராய்வேகாநின்ற, இ



புதுமைகண்டிலைகொ லிகல்வேந்தேயென்பளவி லிறைஞ்சார்சேனை, முப்புவனங்களுநடுங்கமோகரிக்குமோசைசெவிமுடுகக்கேட்டான். (௬௬)

ஒட்டலர்சேனையின்முழக்குமுலைந்தலறுநகரொலியுமுருமேறென, முட்டியெழவடவனல்போன்முழங்கனலின்புகையெங்குமூடக்கொள்ளக், கெட்டனகண்களுஞ்செவியுங்கிளர்நகரமழிந்ததுபிக்கேடியாவுந், திட்டமுறலீலையும்வாணியும்வேந்துமந்திரியுந்தெரியக்கண்டார். (௬௭)

செருவிறல்வேந்தன்றேவிதெருமந்துநடுங்கிவந்தாள்
வருமிவள்பாங்கிமன்னுமாளிகைமகளிர்யாரும்
பெருகியநிதியுங்கொண்டார்பேணலாரொன்னக்கேட்டா
னருகுறுதேவியுங்களடைக்கலமென்றுபோனான். (௬௮)

எதிர்நிழல்போலவந்தலீலையையிந்தலீலை
யதிசயமெய்திநோக்கியருங்கலைமாதைநோக்கிப்
புதிதுநானிங்குவந்தபொருளென்கொலென்றலோடு
மதிநிறவாணியந்தமயக்கந்தீர்த்துரைப்பதானாள். (௬௯)

நின்னைநீங்காதுவாழநினைத்தனன்மரணகாலத்
தன்னதவ்விடத்தேபெற்றானன்பினாலனதுகாந்த
னின்னல்கூர்மரணந்தன்னிலெண்ணியதெய்துமியார்க்குந்
தன்னெதிருற்றதன்றித்தோன்றுமோதருப்பணத்தில். (௭0)

நாசமுற்பத்திமூர்ச்சைநனுக்கனுச்சுழுத்தியெல்லா
மேசுறவொன்றினுள்ளொன்றில்லையாவிலதுண்டென்ன
மாசுறுமயக்கமட்டேமட்டறவளராநின்ற
தாசறுமனுபவங்களிருவகையவற்றைக்கேட்பாய். (௭௧)

முன்னனுபவத்துக்கேற்றமுறைமையாய்ச்சிலவைதோன்றும்
பின்னுறுபுதுமைத்தாகிப்பேதமாய்ச்சிலவைதோன்றும்
நின்னுடனின்னுசாரநின்குலநின்னொழுக்க
மென்னவேறன்றிநின்றாளெதிர்நிழல்போலலீலை. (௭௨)

புரவலனினைவாலுன்னைப்போலிவடோன்றிநின்றாள்
விரவுமிப்போரிற்பட்டுவிடூரதன்பதுமனென்னு

நரபதியாகுமென்றநாமகள்வசனங்கேட்டுப்
பரவினபுதியலீலைபணிந்திதுபகர்வதானாள். (எரு

பண்டுநான்பூசைசெய்தபாமகள்போனுநீயே
விண்டவராலென்காந்தன்வீடினுலுறைவதெங்கே
கண்டுநானங்கேயிந்தக்காயத்தோடெய்திவாழத்
தண்டலில்வரநல்கென்னத்தந்தனமென்றலோடும். (எசு

புகன்றநாமகளைநோக்கிப்புராதனலீலைசொல்வா
ணிகழ்ந்தவென்னுடலோடன்றிநின்றவேற்றுடலைமேவி
யுகந்தலோகாந்தரத்துமுயர்கிரிநகரினூடு
மகன்றவாறென்கொலென்னவாரணத்தன்னைசொல்வாள். (

வேறு.

ஒருவருக்குநாமொன்றுநல்கலமுணர்வின்வண்ணமேயுயிர்களெ
ய்துமாற், கருதிமுந்திநீகதிவிரும்பினுய்காதலித்தசிற்கண்ணளித்
னம், பெருகுகாதலாலிந்தவண்ணமிப்பேதைவேண்டவிப்பேறுநல்
கின, மிருதயத்திலேநினைந்ததெய்திடுமெமதுபார்வையாலியார்க்கு
மென்றனள். (எகூ)

திறல்விடூரதன்சினமிகுத்தனன்றேரிலேறினன்சேனையோடுசே
ய், மறலியூர்புகும்வழிநெருக்கமாய்மருவலாரொலாமடியமோதி
னிறலுறுங்கொலென்றெண்ணி யன்பருலீலைவாணிதாளேத்திய
னையே, விறன்மிகுந்துநின்கருணைமேவியும்வினையின்மாளுமோ
ந்தனென்னவே. (எ

கதிவிரும்பலாற்கலைவிடூரதன்கப்பிலாப்பதங்கலப்பதாயினு,னெதி
ரியானவிச்சிந்துவென் பவனிகலில்வெல்லவென்றெனை யிறைஞ்ச
லால், விதியில்வென்றவன்வேந்தனுமெனவிளம்புபோதிலேவிடிய
ஞேன்றலு, மதிரமோதிமேலடர்ந்தவெங்களத்தனிகமொன்றுமற
றழிந்துபோனதே. (எஅ)

சிந்துநாமனுந்திறல்விடூரதச்செல்வவேந்தனுஞ்சிலைகளேந்தினு, ரிந்
துபானுவுந்திசைகள்வானமுமெய்யும்வாளியாலெங்குமூடினுர், மு
ந்துவெங்கணைத்திரளெரிந்துதீமுடுகியூழியின் முடிவையொத்தலு,
மூந்துபாகனுந்தேரும்வில்லுமற்றுயர்விடூரதனொருவனுயினுன். (



பிறைநெடுஞ்சரங்கவசம்வீழ்வுறப்பிரித்துமெய்யெலாம்பிளந்து
சிந்தலும், பொறையழிந்துவீழ்ந்தவனைநோக்கிவெண்புண்டரீகை
யைப்புதியலீலைபார்த்,திறைவனுவிபோமெல்லையாயினுனிவனைநண்
ணநானேகநல்கெனு, வறைதலோடுமவ்வன்னைநல்கினுளவளும்வி
ண்ணினெய்தாகியேகினுள். (அ0)

கருமுகிற்றலங்கடந் துவாயுவின்கதிகடந்துவெங்கதிரினெல்லை
விட், டருகுதாரகர்பதமகன்றுமே லயனையாதியாமமரர்நாடொரீஇ,
முருவுமிந்தவண்டம்பிளந்துபோய் வாரியாதியாய்வளைந்தயாவையு,
முருவியெல்லையுமுடிவுமற்றதாமுண்மைஞானவிண்ணெல்லையெய்
தினுள். (அக)

கற்பகோடிவெங்கருடனேடினுங்கடக்கொணுவத்திக்காடுகாய்
ந்தபோ, லுற்பவங்களாமண்டகோடியொன்றென்றைநோக்குறு
துளவவற்றினு, ளற்பமின்றியாவரணபேதமேயயல்வளைப்புறுமண்
டமொன்றனுட், டற்பதங்கடந்தெய்தியம்புயச்சவங்கிடந்தமண்டப
முடைந்தனள். (அஉ)

தமரவண்டுசூழ்மலரின்மூடுமிச்சவசரீரமாந்தரணிபாலனே, யெ
மதுநாயகன் கருணைவாணியாலென்கொன்முன்னமிங் கெய்தினே
மெனு, வமரவெண்ணிவெண்கவரிவீசியங்கன்பனோர்புறத்தவளிரு
ந்தபின், விமலஞானியாம்விறல்வீடூரதன்மேவுசீவன்வீண்மீதுபோ
யதே. (அரு)

ஞானநோக்கினுலவனைநோக்கிவிண்ணடந்துபின்வருநங்கைமார்
நமைத், தானறிந்திடாதகன்றசீவன்போய்ச் சவமிருந்தமண்டபம
டைந்திடப், போனமாதரும்புதியலீலையைப்புரிந்துநோக்கினுர்பொ
ன்செய்மண்டபத், தானசீவனைத்தகைந்துமீளவுமம்புயாசனத்தவ
ணிறுத்தினுள். (அசு)

பண்டைலீலைதன்மேனிகண்டிலாள்பாமடந்தையைப்பணிந்துகே
ட்டலு, மண்டுசிந்தைபோய்நிறைசமாதியான்மறிந்துவீழ்ந்தமெய்
மாண்டதாமெனக், கொண்டமைச்சர்வெங்கனல்கொளுத்தினுர்
தரம்பையோடுநீகுவலயத்துறி, லண்டர்வானினின்றுடலொடேகி
னுளந்தலீலையென்றதிசயிப்பரால். (அரு)

சூக்கமெய்யினேடிருந்துவாதனைத்தோற்றமாற்றலாற்றூலகாய
போக்கலாயதென்றிவளுக்கோதியப்புதியலீலையிப்போதுகாண்கெ
ளு, வாக்கின்செல்வியுண்ணினைந்தவெல்லையின்மறைந்துநின்றவ
நிறைந்துதோன்றலும், பாக்கியங்கள்போற்கண்டலீலையப்பாவை
மார்பதம்பணிந்திறைஞ்சினாள். (அகூ

போதவாணியும்பழையலீலையும்புதியலீலையும்புணர்ந்திருந்துழி
சாதிமென்மலர்வாசம்விட்டெனச் சலசமாதுயிர்த்தடைவிடுத்தலு
ம், வாதரூபமாய்நாசியூடுபோய்வறந்தமெய்யெலாநிறைந்துலாவி
ச், சீதமாகிநெய்த்துளிபரந்துகண்டிறந்தெழுந்தனன்செத்தமன்ன
வன். (அ

இங்குநின்றுளாரெவர்கொலென்றுவானிடிமுழக்கமொத்திவலு
ளைத்தலு, மங்குநின்றுளாள்வணங்கியிப்பவத்தடுத்ததேவிநான
குதாழ்ந்தவிம்,மங்கையாரெனவென்னையொப்பநீமனத்திலெண்ண
லான்மகிழவந்துளா, டுங்கவாணியிங்கிருந்துளாளெனத்தொல்
லீலையேதோன்றவோதினாள். (அ

பகருமெல்லையிற்பதமிறைஞ்சுமிப்பதுமவேந்தனைப்பாமடர்
தன், நிகழுமங்கையாற் சென்னிதீண்டிநீதேவிமாரொடுஞ் சிறந்
வாழ்வுறப், புகழுஞ்செல்வமும்பெருகவையகம்பொலிகதீதெலா
போகவெங்கணு, நிகழுமேன்மையோர்நிறைகநீடெனுநிமலவான
தன்னிலயமேவினாள். (அகூ

வாழிவாணிநாமங்கைவாழிசொன்மாதுவாழ்தியென்றினிதுவ
ழ்த்தியே,யாழிமன்னனுந்தேவிமார்களுமயுதமெட்டியாண்டரசு
ய்தபின், னேழிரும்பவந்துடைத்துவாணிமுன்னியம்புசீவன்முத்
யிலிருந்துபே, ரூழிபேரினுஞ்சிறிதுபேர்விலாவுடலிறந்தவீடொ
றிமேவினார். (கூ

லீலைகதை முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௩௨௩.

# கற்கடிகதை.

ாட்சியென்னுங்குற்றமறக்கதித்தலீலைகதையாலே
ாட்சியானசகமென்னுமதிபாரத்தையறவிடுவாய்
ட்சியானவுலகமெனுக்தோற்றமுடைத்தாய்ப்பேதமற
ாட்சிஞானசுகவடிவாய்வயங்கும்பிரமமேயுளதே. (௧)

தனுக்கிணையாய்ப்புகலரிதாயகன்றுநிறைந்தாழ்ந்தமலமதாய்ச்
தமதறிந்தோர்களுமியல்புசாற்றற்கரிதாய்ச்சாந்தமதாய்த்
ருதமுற்றசையாக்கடலென்னத்தீபமென்னத்திகழ்கின்ற
தன்மைப்பிரமத்தொளிதானேமுடிவில்பரமாகியசீவன். (௨)

னையுண்டாக்குநீள்விறகாற்சற்றுநெருப்புத்தடிப்பதுபோ
னையசீவன்கனவறிவாலியானென்றுணர்ந்துசங்கற்ப
னவினுலேயகங்கரிக்குநிறைந்தசீவன்காரணமாய்
னையுஞ்சித்தமனம்பகுதிமாயையெனும்பேர்வகுத்துரைப்ப. (௩)

னத்தாற்படருமனம்பரமனேதுவாயிப்படித்தோன்று
னத்தால்விரிந்தசகமெல்லாமனவடிவேமற்றில்லை
னத்தாற்கரைதீர்பலவறிவாங்கல்லோலச்சிற்கடல்பொங்குந்
னத்தானீண்டகனவொப்பச்சித்தவசத்தாற்சகந்திரமாம். (௪)

தரியாத்தறியிற்கள்வனெனத்தெளியாமையினுலகுண்டா
ரியாப்பிரமத்தொடுசீவன்மறந்தும்பேதமிலாததுபோற்
ரியாச்சீவசித்தங்கள்பேதமில்லையிதுபோலத்
ரியாச்சித்தஞ்சகங்களுக்குச்சற்றும்பேதமுளதாகா. (௫)

இதுகாரணமாமொருகதைபண்டிகலாரரக்கியியம்பியது
துவாம்வினுவாலறிபொருள்கண்முழுதுந்தெளியத்தெளிவிப்ப
துநீகேட்பாயிமவானுக்கயலுத்தரபாலமர்கிற்பாள்
இதுவாமெயிற்றுக்கற்கடிப்பேர்பேழ்வாயரக்கிமின்கண்ணாள். (௬)

கருமேருவைப்பெண்வடிவாகக்கைகால்வகுத்ததெனத்திரிவா
ளுருமேறனையசிறுநகையாளோடாமீன்போலுழல்கண்ணாள்

பெருமேனியைத்தாங்கிருகுறங்கும்பேரீச்சென்னப்பெரிதுடைய
வருமேகத்தைப்பிளக்குநகம்வயிரேரியத்தின்சுளகொப்பாள். [

பாழிப்புவிமேலுயிரையெலாம்பகலுமிரவுஞ்சொரிந்திடவு
மூழிக்கனல்போலவியாதவுதரக்கனலாலுள்ளழிந்து
காழிக்கிளர்நாவலன்றீவிற்காணப்படுமன்னுயிரெல்லா
மாழிக்கிடைவீழ்நதித்திரள்போலருந்திற்சிறிதாருயிர்நிற்கும். (

மழையாலவியுங்கானலெனவயிற்றிலெரியுஞ்சிறிதவியும்
பிழையாதிதனைத்தவம்புரிந்துபிரமனருளாற்பெறுதுமெனு
முழையாரிமயகிரிமேவிமூழ்கியொருகாலுறநின்று
புழையார்விழியானவொனிற்பொலியுங்கதிரையெதிர்நோக்கி. (ச

வருந்திநின்றுவுயர்தவத்தில்வருடமோராயிரஞ்செலுத்தத்
திருந்துகமலத்தயன்வந்தான்றீயோரெனினுமருந்தவத்தாற்
பொருந்துருதபொருளுண்டோபுண்டரீகன்போதவுமுன்
னிருந்தபடியேயிருந்தரக்கியிதயத்திறைஞ்சியிதுகினைந்தாள். (க

தாவுமுதரக்கனறணியச்சற்றுமிரும்பாற்சமைந்தவொரு
சீவசூசிவடிவானுற்சகத்தோருடலங்களிற்புகுந்து
மேவுமிரைகள்வேண்டியதுவிழுங்கலாமென்றுணர்வாளை
யாவதெண்ணமுனக்கென்னவிசைத்தவயனுக்கிவளிசைப்பாள்.

துதிப்பார்துணையேநான்சிவசூசியாகவேண்டுமென
விதிப்பான்விகாரபூருவமாம்விசேயாகமெய்க்கொண்டு [றைவே
குதிப்பாய்துர்ச்சேட்டையர்மூர்க்கர்கொடியோர்கொடியதலத்து
கதிப்பால்விரும்பாவுணவுண்போர்கருத்திற்சுவாசத்துடன்கலந்து

கல்லாரிடத்தினீயெய்தினுமேவிதித்தமந்திரத்தாற்
கொல்லாதொழிவாய்தீயோரைக்கொன்றுதின்பாயெனமலரோன்
சொல்லாமுன்னமலைபோல்வாள்சூசியுருவாஞ்சிவனுமாய்ப் [ள். (
பொல்லாதவரஞ்சினத்தடித்தோர்பொன்றும்படியுள்ளுறப்புகுந்த

வாயுவடிவாயுட்புகுந்துமண்ணில்விண்ணிற்பல்லுயிர்க
ளாயுவெல்லாமிருவடிவாயநேககாலமருந்தியபின்
னேயுமனத்தாளாயவமேயுழன்றுவருந்தியூசியுமாய்த்
தேயும்படியேகெடுத்ததெமைச்சீசீபாசையெனத்திகைத்தாள். (



வேறு.

யமனத்தொடயாமவமேபலசீவனருந்தினமா
லயதுவிட்டனமென்றிமவானிடையெய்தரிதானதவ
மயினளொன்றுகினைப்பிலள்சஞ்சலம்விட்டுணவற்றொருமித்
ாயிரமாவருடங்கள்செலுத்தலுமற்றதுவல்வினையே. (கடு)

ாவமகன்றுமனந்தெளியப்பரபாவனைதன்வயமே
மவலுமிவ்வுலகத்தையிகழ்ந்துவிருப்புவெறுப்பிலளாய்
வருடங்களொராயிரநின்றபின்மன்னுணர்வுற்றதெனக்
தவலம்வந்திவளுக்கொருவாய்மைகிளத்தினன்மாமலரோன். ( )

வனின்முத்தியடைந்தனைசிந்தைதெளிந்தனைதொல்வடிவாய்ப்
லயத்தறிவில்லவர்தியவர்பூரியர்மெய்யினையா
விவளர்த்துறைகென்றயனேகலுமத்துவிதப்பரமே
வனையுற்றொருசெய்தொழிலற்றபதத்திலிருந்தனளால். (கஎ)

கற்பமிறந்தசமாதிநெடும்பகன்மேவினண்மீளவிடா
தப்பொடுநெஞ்சொடுகூடினடொல்பசியுன்னினணுனெனுமா
த்துளமட்டுமுடற்குளதானவியற்கைவிடாததனற்
ந்திலரக்கர்குலத்தொழிலானதசைப்பலிகொள்வனெனு. (கஅ)

னுரைசெய்ததுமப்படியாதலிலந்தவுரைப்படியே
வருடற்பலிகொள்ளுவனென்றுகளித்திமவானயல்போய்
மிகுவேடுவர்மண்டலமேவிவனத்திலுறைந்திடுநா
யமுறுமந்திரிதன்னொடுமெங்கொருநரபதிநண்ணினனுல். (கக)

ச்சுடர்வந்துறினுங்கருகத்தகுமுற்றிருண்மூடிரவூ
ச்சமுறுரவர்சோதனைசெய்தலுமங்கவள்கண்டளவே
ச்சினையாமிவர்மெய்யறிவில்லவர்பாமரராகியுளா
ச்சகமேலுயிர்வாழிலிகம்பரமெங்குமிடும்பையெனு. (உ0)

ளவுநின்றுணர்வாளயன்முன்னம்விதித்ததுமிப்படியே
காளறவந்தபயன்கவராதவர்கொச்சைமனத்தினரோ
ளகினைந்துணர்புந்தியுநற்குணநீர்மையுமெய்தியுளார்
ளவதஞ்செயநெஞ்செழுமோவிவர்வன்றுயர்மேவுவரோ. (உக)

வேறு.

வஞ்சமினீள்புகழ்வாணுள்வகுப்பரியசுகமமர்ந்தோர்வணங்கல
வா, ரொஞ்சலிலாவாவியினுமினியவராதலி னவருக்கிடரேவந்தா
லஞ்சலெனவுயிர்கொடுத்துவளித்திடவேண்டினராவரன்பானேர்
குத், தஞ்சமுறக் காலனையுமுறவாக்குந் தன்மையினர்தக்க சா
ரேர்.
(உ

அரக்கியெனுமியாமுதலாயுயர்ந்தோரையாதரிக்குமன்புகண்ட
விரக்கமுறப்பொன்போலயாவரோவிரும்பாதாரிகலோகத்திற், பு
கவருநிறைமதிபோற்புணர்ந்தோரைக்குளிர்விப்பர்புணராதோ
பரக்கழியாவிறந்தோராம் புணர்ந்தோரே முத்திமுதற்பயன்பெ
ரேரே.
(உ

ஆதலினுலிவர்தம்மையறிஞரோவறிவிலரோயார்கொலென்ன
சோதனையாம் வினுவுரைகள் சொல்வோமென் றுருமேறுந் துணு
கென்றஞ்ச, மீதுறநின்ருற்பரித்துவெவ்விடிக்குப்பின்னுலிவீழ்
குங்கார்போ, லோதரியகொடியவனவிசும்புக்குமதியிரவியொப்
ரொன்னு.
(உ

மீட்டுரைப்பாண்மாயையெனும்வெவ் விருட்பாறையின்கீழ்
ளிர்ந்துமாயு, மீட்டமுறுபுழுப்போல்வீரொனக்கிரையாயிக்கண
யிறக்கவந்தீர், சேட்டமுளார்போலிருந்தீர் தீயவர்போன்றீரொ
நீர்செப்புமென்னக், கேட்டளவேகொலையரக்கிகேளென்னத்திற
வேந்தன்கிளத்தலுற்ருன்.
(உ

எவ்வுழிநின்றனைநீயிங்கிசைத்தவெலாமிளவண்டினிரைச்சல்பே
லச், செவ்விதுகேட்டனமென்னவரக்கியுநன்றென்றெதிரேசிரித்
லோடும், வெவ்வியபல்லொளியாலேவெளியாகக்கண்டிறையும்
ருவலின்றி, மைவரைபோல்வாய்திறந்துவாளாநீவருந்தலெனுமெ
னன்சொல்வான்.
(உ

எய்தாநின்றுளபயனுக்கியற்ருதாரில்லையாமென்றபோது,
தானகருமத்தினெய்தானேர்விளைந்திடுவேர்ரொய்மைதோன்ற,
தானபுந்தியினுலாறுதலாலறிவுடையோரனைத்துஞ்செய்வர்,
தாவுன்போல்வாரைக்கொதுகெனவீசிடுமெங்கள்வீரக்காற்று.
()



ஆதலால்விரைவையொழியுன்கருத்தையுரையெங்களருகுவந்
தார், காதலாலிரந்தபொருள்கனவிலுநல்குவமென்றுகழறலோடு
போதமுங்கல்வியும்வலியும்பொறையுமளவிலரென்றே புந்திசெ
தாண், மேதகமாமவருரையை மிகவியந்தாளிழிவிலாமெய்ம்மை
ண்டாள்.
(உஅ)

ாக்குமுகங்கண்களான்மாறுபடாதுயர்ந்தோர்தம்மறுவில்சித்த
ுமக்குயருமிவற்ருலேயுண்ணினைவுமறியலாமேலோர்தாமே
க்கியம்போல்வந்தெய்திற்சந்தேகந்தெளியாதார்பதகராகுந்
க்குமுரையாலிவரையறிதுமெனுயாவர்நீர்சாற்றுமென்ருள். ()

வினையமுறவரக்கியிதுவிளம்பிடமந்திரிவிளம்பும்வேடர்க்கெல்
ா,மினையவன்மன்னவனமைச்சனுனுகுமிருட்போதிலெங்குநாடி,
ணநிகர்வாளச்சோதித் தொறுக்கவுயிரொடுக்கவுயிர்நிறுத் தவந்
தாம், நினைவிதுவந்ததற்கென்னுவிவன்கூறமீண்டந்தநிருதிகூறும்.

பவனுமந்திரியானல்வேந்துந் தீவேந்தாந்தீமையில்லாத்
யவனுமந்திரியாற்றீவேந்துநல்வேந்தாந்தொடர்ச்சிபோல
ரயர்நெறிமன்னவராலமைச்சருமப்படியாகுமாதலாலே
றவிவேகத்தமைச்சனுண்டாகிலெப்பயனுநிருபர்க்குண்டாம். ()

னவனெப்படியுலகின்மன்னுயிருமப்படியாமகிமைதானு
ன்னடுவுநிலைமையு மெய்ஞ்ஞானநூறெளிந்தவர்க்கேநண்ணுநிற்கு
ன்னதுகற்றிலரொன்னிலரசரமைச்சர்களென்போரபத்தராகு
ன்னகலையிலதாகிலெனக்கிரையாயிளமைநலமிழந்தீரின்றே(௩உ)

சிங்கமெனுமுங்களையான்செப்புகின்றவினுக்கூட்டிற் சிறைசெய்
ன்றே, னுங்கண்மதியாற்றிறந்தாலுயிர்வாழ்வீரொனவகுத்தென்
ரைசெய்கென்னுத், துங்கநரபதியுரைப்பத்தொல்லரக்கிநல்லமுத
துளிகள்போல, வங்கவருக்குரைத்தவெலாமிராகவகேளென வசி
டனருளலுற்ருன்.
(௩௩)

அண்டநிரைபலகோடிபலவாயுமொன்ருமெவ்வணுவினுள்ளே,
ண்டகடற்குமிழிகள்போல்விரிந் தொடுங்கும்விண்ணுயும்விண்ண
றேது, தண்டறவுண்டாயிருந்துமிலாததெதுசரித்தேயுஞ்சரியா
தது, கண்டிடநில்லாதாயுநிற்பதெதுசித்தாயுங்கல்லாமேது.(௩௪)

வானிடையோவியமெழுதுகின்றதெதுவித்திடையின்மரங்க
போல, வீனமிலாவெவ்வணுவிலுலகமெலாமிருக்கின்றதியா தி
ன்று, மானகடற்றினைநுனைபோலொருபொருளும்பிரிவாகாத
ந்தநீரு, மீனமறுநெகிழ்ச்சியும்போலேதோன்றியிருமையுமெங்கெ
ருமையாகும்.
(ருடு

இந்தவினைவின்பயனை நும்முணர்வாலேதோன்றவியம்புவீரேற்
கந்தமுறவென்குழன்மேலெப்போதுமிருக்கின்றகமழ்போதாவீர்
மந்தமுறுபுந்தியினல்வகுத்துரைக்கமாட்டாதுமயங்குவீரேல்
வெந்தவயிற்றெரிகனற்குவிறகாவீரொன்றரக்கிவிளம்பலோடும்.

மந்திரிமுன்னுரைசெய்வான்மாசிலாப்பரம்பொருளைவகுத்து
சொன்னாய், சிந்தைமுதலாம்பொறிகளாறுலுமெட்டரிதாந்திறத்
னாலே, யந்தமில்சின்மாத்திரமாய்விண்ணிலுநொய்தாம்பரமம
வேயாகு, முந்துபிரமாண்டமெலாமவ்வணுவிலேதோன்றிமுதி
துமாயும்.
(ருஎ

தடமானவதன்புறமில்லாமையினல்விண்ணாகுந்தனிப்போத
தா, விடமானவிண்ணன்றுமின்னதெனத்தெரிவரியவியல்பினா
திடமாகவிலதாகுஞ்சற்பாவத்தாலுளதாய்ச்செப்பலாகும், பு
கவிளங்குதலாற்சித்தாகுமறிவதிலாப்பொருட்டாற்கல்லாம். (ரு

தானாகுமிகநொய்தாமாகாயத்திற்சகத்திரளாஞ்சித்திரத்
தானேகோட்டு, மானுதவுலகமெலாந்தனதுசோதியாதலினாலதற்
வேறயலொன்றில்லை,நீகாணுஞ்சகபேதவடிவந்தானுநிற்கின்றவத
வடிவாய்நீங்காதென்றும், நாநாவாம்பொருட்புணர்வானடந்தத
நடக்கவிடமிலாமையினடவாதாகும்.
(ருகூ

அடைவதற்கொன்றிலாமையினுவில்லையாகுமனவரதஞ்சத்
யிலுண்டாகுமென்று, புடைபெயர்நன்மதியமைச்சன்புகலக்கே
டுப்போதவியந்ததற்பின்புபூபனேயுன்,னுடையவுணர்வுரையென்
வவனுஞ்சொல்வானுலகத்திலுறுதியிலாவுறுதிதானே, தடையற
ற்பரம்பொருளினுறுதியாகுந் தற்பரத்தினியல்பின்னஞ்சாற்றக்
ளாய்.
(சு

கருத்ததனற்சங்கற்பவிகற்பமெல்லாங்கைவிடுதல்கைக்கொள்
ப்படுவதாகுந்,திருத்தமுறுதன்விரிவுங்குவிவுதானுஞ்சிருட்டியுங்க



முமாகுந்திரள்வேதாந்தத், தருத்தமுறுவாக்கியத்தினிட்டையா
மவ்வேதவாக்கியத்துக்கயலுமாகு, முருத்திகழுமுள்ளதிலதிரண்
னுக்குமுள்ளாகுமவையிரண்டினுருவுமாகும். (சுக)

சராசரமாமுலகனைத்துமனரூபத்தாற்றன்செய்யும்விளையாட்
ஞ்சகமாய்நின்றும், புராதனமாமொருமையினிற்பிரியாதாகும்பூ
னசின்மாத்திரமாம்பொருளேசொன்னாய், நிராசையுளத்தவரறியு
ரமீதென்றுநிருபனுரைத்திடநிருதிநெஞ்சுட்கொண்டு,விராவமு
மழைசொரியக்குளிர்ந்தவாபோன்மிகக்குளிர்ந்தாள்சாந்தமுறவி
பலுற்றாள். (சுஉ)

அற்புதமாயமுதமாயறிவேயாகியத்தமனமுதயமிலாவருக்கன்
ாலாய்ப், பொற்புமிகும்புந்தியுளவும்மைப்போல்வார்பொன்னடி
முடியாகப் புனைந்தாரன்றே, தற்பரமாமுலகாளும்வேந்தரா
ார்தமையுணர்ந்தோரைச்சேர்ந்தாற்றளர்வுண்டாமோ, நற்பய
போல்வருமுமக்கிங்கரிதின்றேனுநான்செய்யுங் கைம்மாறுநவிலு
ன்றாள். (சுங)

சிலையரக்கர்குலமென்னுமெட்டிக்காட்டிற்செறிகனித்தேமாவ
யாய்சகத்திலொன்றும், கொலைபுரியாதொழியென்றுவேந்தன்
றக்கொலையொழிந்தேனென்றரக்கிகூறலோடுங், தொலைவருமூ
ணவாநீசெய்யுமாறென் சொல்லென மன்னவன் கேட்பத்தொல்
ளி, லலைவில்சமாதியிலிருந்துபசியைவென்றேனவ்வகையேயி
ிருந்தாற்றலுற்றேன். (சுச)

தெள்ளமுததாரணையால்வேண்டுங்காலந்தேகமுடனிருந்தப்பா
றகந்தீர்வே, னுள்ளநிறையுணர்வுடையேனென்றுங்கொல்லே
ண்மையெனவுரைத்தேகவுன்னுவாளைக், கொள்ளரியநட்பெளி
ற்கொண்டேம்நீயெங்குலமகளாயெம்பதிக்குக்கூடவேகிற்,கள்ள
ினைதருதுமுடல்போமட்டுங் கருதுமுடல்வாதனைகள்கழலா
ாய். (சுரு)

ஆதலினற்பதகருடவினையைக்கைக்கொண்டரும்பசிபோய்ச்சு
திதனையடையிவ்வாறு, காதலுடன்பலகாலுஞ்செய்தியென்று
வலன்கூறவுமரக்கிகளிகூர்ந்தேகப், போதகமன்னார்தமதுநகா
விப்பொன்மனைபுக்காரிரவிபொலியவந்தான், பாதகர்மூவாயிர
யாறுநாளிற்பார்த்திபனீந்தானரக்கிபற்றிக்கொண்டாள். (சுசு)

பூமகள்போலங்கிருந்தவடிவைக்கங்குற்போதிலொழித்தரக்
குலப்பூவையாகிப், பாமரராம்பாதகனைத்தோண்மேற்கொண்டு
ர்த்திபனேடமைச்சனுக்கும்பண்புகூறி, யேமமுறுமிமகிரியிற்ச
திமேவவேகினுளின்றளவுமிந்தவாறே, கோமகனுமரக்கியுநட்பா
சென்றுகுரிசிலுக்குவசிட்டமுனிகூறினனல். (ச

கற்கடிகதை முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௩௭0.

## அயிந்தவர்கதை.

உரைசெயூசிகதையாலேயுண்மையாகிப்பரமான
கரையில்பிரமமேயுளதாங்காணப்படுவதொன்றில்லை
வரையில்சிருட்டிகளின்முதலாய்மனமேவிளங்குமிதுபொருட்
புரையில்கதைகேளெனவசிட்டன்புயன்மேனியற்குப்புகல்கின்

மேவுகதையாற்சிற்சத்திவிரிவேயுலகென்றறுதிவரும்
வாவுமனமாஞ்சிறுமகவுமடமையாலேவெறும்பொய்யே
தாவுசகப்பேய்வரக்காணுந்தணப்போதிக்கிலறிந்திடர்போம்
பாவும்விகாரம்பலசேரிற்பவமாமவற்றைவிடல்விடாம்.

ஒருகால்விரிஞ்சன்சிருட்டியெலாமொடுக்கியிரவிலுறங்கியபி
வருகாலையின்மீண்டுலகளிப்பான்வானேக்குதலுமனத்தாலே
பெருகாநின்றவிண்ணிடையேபேதமானபலசிருட்டி
யருகாநின்றபடிகண்டானுர்செய்தனனென்றதிசயித்தான்.

அதிலோரிரவிவருகென்னயாரோயளித்தானெனக்கேட்பக்
கதிரோன்வணங்கியுரைசெய்வான்கரைதீருலகின்காரணமாட
விதியாநீயீதறிந்திலையேல்விளம்பக்கேட்பாய்வெண்கயிலைப்
பதியாகியகாவலர்தீவிற்பரப்பாமிடத்தோர்பக்கத்தில்.

சிறக்குஞ்சுவணசடமென்னுந்தேசமொன்றுன்னமைந்தர்களா
னிறக்குஞ்சிருட்டிபடைத்ததிெனடுங்காசிபன்றன்குலத்திடை
பிறக்குமறையோனிந்துவெனும்பெரியோன்மக்கட்பேறின்றி
பறக்குங்கருத்தாற்றேவியொடும்பரமன்கயிலைப்பதிமேவி.



மேற்கொண்டபாதவம்போற்சலமேயருந்திவருந்திநோட்
னுமகிழ்ந்துவேண்டியதென்செப்புமென்னச்சிரம்பணிந்து
லைதீரவீரைவர்கலைதேர்புதல்வர்வேண்டுமென
னங்களிப்பவிவர்களிப்போடகன்றூர்புதல்வரவதரித்தார். (சூ)

ந்தவொருபதுளராகிமறைநூனிறைந்துவளர்ந்ததற்பின்
தைதாயரிறந்தேகத்தனயர்கயிலைத்தலமெய்திச்
தைசெய்வார்நல்குரவுதீரவுயர்வன்னியராவோ
தகிலைசற்றுதலினலதிகிலைமன்னவராவோம். (எ)

புஞ்சிறிதாம்புவியனைத்துக்கரசராவோமதுசற்று
ன்னியவிந்திரராவோநிகழ்த்துமதுவுநெடிதல்ல
மஞ்செறியுமயனுதல்பழுதில்பதவியெனத்துணிந்தா
ந்தமனத்துப்பதின்மருமொத்துயரும்பதுமாதனத்திருந்து. (அ)

மனுமேசிருட்டியெலாம்பிறப்பதெம்பாலென்றுள்ளே
கூதானமனத்தாலேசிந்தித்துடலிற்சிந்தையற
னமதென்னவிருத்தலுமேவருநாட்பலபோய்மனேபாவ
ரமதாகியயனுனுவொருபதுலகமுளதான. (சூ)

ரவானகத்திலிவர்பத்துவகையிற்சிருட்டிதந்தனரா
னமாமவற்றிலோரிரவியானுமென்னுவேகினனற்
ரமாமனத்தின்விரிவாலேகாணுஞ்சகங்களுளவாமென்
வாகனத்தோன்மனத்தாலேயளித்தானிராமற்கருள்செய்தான்

அயிந்தவர்கதை முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௩அ0.

## வஞ்சவிந்திரன்கதை.

பாருவில்சகத்தையளிப்போனும்புருடன்றானும்புகன்மனமே
ந்துமனத்தின்செயல்செயலாங்காயச்செயல்கள்செயலன்றாம்
ந்தியுரைசெய்புதுமறையோர்பதுமாதனராய்ப்பார்படைத்தார்
பருமாமனத்தினுயர்சத்திபிறராலறிதற்கெளிதாமோ. (க)

உள்ளமுடலைப்பாவிக்கவுடலாயதனு லுள்ளயரும்
வெள்ளஞானத்தவருள்ளேமேவாநின்றபாவனையாற்
பொள்ளவுடலினலந்தீதுபுந்திசெய்யார்புராதனநாட்
கள்ளவினைசெயகலிகையுங்கரவிந்திரனுமிதற்கொப்பாம்.

என்னவிவர்களாரென்னுவிராமன்கேட்பமுனிசொல்வான்
முன்னர்மகதநாடுடையோன்மொழியிந்திரத்துய்ம்மனென்றோர்
மன்னனவனுக்குயிர்போலமகிழுந்தேவியகலிகையாஞ்
சொன்னநகரிலொருவனுளன்றூர்த்தனவன்பேரிந்திரனும்.

அன்னாளந்தவகலிகையுமவ்விந்திரனுஞ்செறிகதைகேட்
டின்னாளிந்தவகலிகையுமிவ்விந்திரனையினிதணைந்தா
டொன்னாட்பிரிந்தோர்கூட்டமெனத்தூர்த்தசூடாமணியுடனே
சின்னாண்மகிழ்ந்தொன்றாமளவிற்செங்கோலரசன்செவிப்படுத்

கேட்டவேந்தன்மிகமுனிந்துகிளருநீரிலமிழ்வித்துங்
கோட்டுமதமாவெதிரிட்டுங்கொடுந்தீக்கொழுந்திற்குளிப்பித்து
வாட்டுங்கசையான்மோதுவித்தும்வருத்தஞ்செய்யவருந்தாம
னாட்டமெதிர்பார்த்துளமொன்றிநகைசெய்திருந்தார்நலிவுண ரா

அரசனேக்கிமிகவியப்புற்றறவும்வருத்தவருந்தாவா
றுனாசெய்திடுமினென்றலுமேயுள்ளங்களிப்பாருனாசெய்வார்
வனாசெய்புயத்தாயெங்கண்முகமதியினமுதம்விழியருந்தக்
கனாசெய்யரியகளிப்பான்மெய்காணேம்வருத்தங்காண்பேமே

அரிந்தபொழுதுமுடற்றுன்பமறியேமொன்றிலன்பாகிப்
புரிந்துபற்றுமனத்தினுடல்பொன்றவரினுந்துயர்தோன்றுத் [ப
தெரிந்தபொருளின்மனமழுந்திற்றேகத்தொழில்வேறெவர்காண்
விரிந்தமுனிவர்சாபமும்பல்வினையுமதனைமீட்பரிதாம்.

மாண்டுவொளாபோனவுடன்மட்டொன்றில்லையவையெல்லாந்
தாண்டுமனத்தாலுண்டாகுஞ்சலத்தாலன்றிக்காடுண்டோ
தூண்டுமனமேமுதல்வடிவாய்த்தூலவுடலம்போனாலும்
வேண்டுமுடல்கள்விளாந்தெடுக்கும்விரியுங்கனவிற்செயல்போ



மேனமேயொடுங்கிலுடலேதுமறியாதெனக்கேட்ட
திருபன்பரதனெனுமருகின்முனியைமுகநோக்கிச்
தமயலுற்றிருந்துமிவர்சிற்பாவனைசெப்பினரொன்னு
மகிழ்ந்துபுறநாட்டிற்போமென்றவனைப்போக்கினனால். (கூ)

வஞ்சவிந்திரன்கதை முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-நஅகூ.

## மனத்தின்கதை.

இந்தக்கதையைவிளையாட்டென்னவிசைத்தோமெவர்க்கு
மந்தத்தமதாமுடலொன்றயலாமுடலொன்றவற்றிற்
சிந்தைச்சரீரம்விளைவிற்செயல்களெல்லாஞ்செய்து
தொந்தித்தலையுமற்றுதூலவுடலொன்றறியா. (க)

என்றான்வசிட்டனவனையிந்தச்சடமாமனத்துக்
கொன்றாவடிவமிலதாமுள்ளவடிவைவிரித்து
நன்றாயுரைப்பாயென்றுஞானக்குரிசில்கேட்பப்
பொன்றாவிதிசொற்படியேபோதமுனிவன்புகல்வான். (உ)

அகிலசத்தியுடைத்தாயநந்தமானபரமம்
புகல்சங்கற்பத்தோடேபொருந்தும்வடிவேமனமா
மிகலுஞ்சத்தோடசத்தாயிரண்டினுள்ளுந்தோன்றிப்
பகருந்தொழில்களோடேபயில்பாவனையுமஃதே. (ங)

எங்கேயெனினுந்தோன்றுமிந்தமனத்தைமுத்திச்
சங்கேதத்தாலாகந்தன்னிற்கூட்டினன்றாம்
பங்கேருகனேதியதோர்பழையகதைநீகேட்பாய்
வெங்கேதமுமச்சமுமாய்வெறும்பொய்யாமோர்வனமே. (ச)

அதினோர்கோடிநீளமநந்தகோடிகாத
மிதிலோர்புருடன்கண்கையெண்ணிலாததுடையோன்
சிதறாநின்றநினைவோன்சேனையகன்றவடிவோன்
பதறாநின்றகணையம்பலவுங்கரத்தாற்பற்றி. (ரு)

தனைத்தான்சிதறமோதித்தகர்ந்தேபுலறியலறி
யனைத்தாந்திசையுமோடியவசமாகியடிபட்
டனைத்தாமுறுப்புந்தூளாயிருளாய்நடுக்கமிகுந்த
வினைத்தாழ்வுறுபாழ்ங்கிணற்றில்வீழ்ந்துநெடுநோண்மெலி

மீட்டுமெழுந்துவந்துமெய்யின்மோதிக்கதறி
யோட்டந்தனிலேசுழலுமுயர்முண்ணிறைந்தகருவேற்
காட்டின்முறியவிழுந்துகனலிற்புழுப்போற்பதைக்கும்
வாட்டந்தவிர்ந்துகதலிவனத்தின்மகிழ்வுற்றிருக்கும்.

கதலிவனத்தைவிட்டுகருவேல்வனத்திற்சுழலும்
பதறிக்கிணற்றில்வீழும்பலகாலுழலக்கண்டு
விதருவகையாம்பற்றிவீணேவருந்துநீயா
ரெதுசெய்கின்றாய்நினைவென்னென்னவவனீதிசைத்தன

யானென்றொருவனில்லையிங்கோர்செயலுங்காணே
னீநின்றுணாக்கநினைந்துநின்னுற்றளராநின்றே
னூனென்றியவெம்பகைநீயுன்னாலின்பதுன்ப
நானின்றறிந்தேனென்றுநல்குந்தன்னைநோக்கி.

இடிக்குமுகிலின்மழைபோலிரங்கிக்கதறியழுதா
னெடிக்குளழுகைவிட்டுநுணுக்கந்தன்னைநோக்கி
வெடிக்கநகைத்தானெடிதாமீளவெமதுமுன்னே
தடிக்குமங்கமனைத்துந்தானேயடைவேதவிர்ந்தான்.

விதியின்வசத்தாலிவனோரிடமேமேவலுற்றா
னெதிர்வந்தொருவனயலேயிவன்போலடியுண்டேக
முதல்வந்தவனைப்போனுமொய்ம்பாயுணர்த்தவந்தப்
பதிகன்றானும்போனான்பழையவடிவமொழிய.

பிறிதுமொருவன்வந்தப்பெரியகிணற்றில்வீழ்ந்தான்
சிறிதல்லாதகாலந்திரும்பியேறக்காணேம்
வெறிதுன்றியவவ்வனத்தில்வேறுமொருவன்வரலும்
மறிதுமென்னத்தகைந்தேயானதெல்லாமுரைத்தேன்.

ஓதிற்றென்றுங்கேளாதுரப்பியிகழ்ந்துமேன்மேன்
மோதிக்கொண்டுபோனான்மூர்க்கரவனைப்போல்வார்





வோதிப்புறுவார்நிறைந்துவயிரமுள்ளாற்செறிந்து
பீதிக்கிடமாயிருள்சூழ்பெருங்காடின்றுமுளதால். (கரு)

அறவேகொடிதாய்வெந்தவடவியெனினுமறிஞர்
நறவேகமழ்ந்துகுளிர்ந்தநந்தவனம்போன்மகிழ்வர்
மறவேலரசேயென்றவசிட்டமுனியைநோக்கித்
துறவேபுரிவாயிவற்றைத்தோன்றச்சொல்வாயென்றான். ()

கேட்டகுரிசிலறியக்கிளர்மாமுனிவனுரைப்பா
ஞட்டவடியுமுடியுநடுவுமின்றிப்பொய்யாங்
கூட்டமாகியாழ்ந்துகொடிதாய்விகற்பநெடிதா
மீட்டவுலகத்தியல்பேயாமுன்சொன்னவனமே. (கரு)

புகையார்வனத்திற்புருடன்புலம்பிச்சுழலுமனமே
தகையாநின்றநாமுந்தனிவிவேகந்தானே
பகையாமிதனுளுள்ளம்பரத்தையறிந்தாறினதான்
மிகையாா ாங்களிகழ்ந்துவேட்கைவசத்தோடினவால். ()

விதறியோடுமனங்கண்மேவுநரகங்கிணறு
கதலிவனம்விண்ணுலகாங்கருவேல்வனமண்ணுலகாஞ்
சிதறிவிழுந்தகிணற்றிற்றிரும்பியேறுதொழிந்தோன்
பதறிநரகம்புகுந்துபாவந்தொலையாததுவாம். (கஎ)

முனையார்முள்ளென்றதுதான்மோகமனிதர்மடவார்
நினையாவின்பதுன்பநின்னாலடைந்தேனீயே
வினையாமென்றதுணர்வால்வீயுமனநொந்துரைத்த
தனையாரழுததென்றதாசையறுக்குமலக்கண். (கஅ)

போதம்பாதியாகிப்புரணமாகாமனந்தான்
காதல்விடினுந்தயர்தல்கதறியழுததுவாஞ்
சீதமாகமகிழ்ந்துசிரித்துநின்றதென்ற
தேதமில்லாஞானத்தேகமானமகிழ்ச்சி. (கக)

முடிவின்ஞானத்தாலேமோகம்விட்டமனந்தான்
வடிவைமாய்க்கும்பொழுதுமகிழுமதுவேமகிழ்வாம்
நெடியமொய்ம்பினாலேநிறுத்திக்கேட்டேமென்ற
தொடிவின்ஞானவலியாலுள்ளமொருப்பட்டதுவே. (உ०)

அங்கத்தறைந்துகொண்டதடர்கற்பனைகளாலே
பங்கப்படுவன்றுயராம்பரந்தோடினதென்றதுதான்
மங்கத்தகுவாதனையான்மருண்டுசுழல்வதாகுஞ்
சங்கற்பமும்வாதனையுந்தனைத்தான்வலைபோற்றளைக்கு

கோசகாரப்புழுப்போற்கொடுங்கற்பனைவாதனையாற்
பாசமடைவரியாரும்பகர்ந்தமனத்தின்கதையை
மாசிலாதமனத்தான்மதித்துமனத்தைமாய்ப்பாய்
தேசமுடையாயென்றுதெளிந்தவசிட்டனுரைத்தான்.

மனத்தின்கதை முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௪௧௧.

## பாலன்கதை.

முழுதுசத்தியுமாய்ப்புரணமாயென்றுமுடிவறுபிரமமாவதுதா
பழுதின்ஞானிகடம்மனமலாதில்லைப்பரமமாமிதிவிலாதில்லை
யெழுதருஞ்சத்தியாவுமாயிலங்குமிவைகளோர்காலமொன்று
வழுவிலாப்பிரமமுடையசிற்சத்திமறிதருமுடல்களிற்றோன்று

காற்றிலேயசைவுங்கல்லிலேதிடமுங்கனலிலேசூடும்வான்றனி
தோற்றலாமையுநன்னீரிலேநெகிழ்வுந்தொலைவுறுமாய்விலேமா
மூற்றமாம்விதையின்மரங்களும்போலவுள்ளுறைபிரமசத்திகட
மாற்றல்சால்காலதேசசித்திரத்தாலவனியிற்சாலிபோற்றோன்

பரமமேயெங்குமென்றுமுண்டாகும்பயின்மனனத்தினன்மனமா
தரமறுபந்தமுத்திபேருலகாஞ்சத்திகளனைத்துமாய்கிற்குந்[திரம
திரமறுதனையர்க்கன்னைசொற்கதைபோற்செப்பியவிவையெல
கரமலர்முகிலேயென்றலுமந்தக்கதையினையிராகவன்வினவ.

சித்தவஞ்சனையின்மூலமாங்கதையைச்செல்வனுக்கருந்தவ
ணைப்பான், மெய்த்தகவிலாதோர்சிறுவனீயன்னைவிரும்பியே
தைவிளம்பென்னச், சத்தியம்போலவெறும்பொய்யேயுரைப்ப
ரணிபன்குமரரோர்மூவர், சுத்தவீரமுகற்குணங்களுஞ்சிறந்
சூனியநகரிலேயுறைவோர்.



மூவரிலிருவர்பிறந்திலரொருவன்மூலமாங்கருவினுமில்லை, யா
வதுங்கருதித்திரிபவர்விண்ணிலளவறுபழமரச்சோலை, மேவலுமத
னிற்செழுங்கனிதுய்த்துவெம்பசிதணிந்துமேற்சென்றார், காவரு
காகமூன்றுநன்னதிகள்கரைபொருதிரையொடுங்கண்டார். (ரு)

ஓடுநன்னதியிலிரண்டுநீரில்லையொன்றுவெண்மணலதாமிதனி
ரீர்துளைந்துபருகிநரந்தியாகிமேல்வருநகரடைந்தார்
க்கட ன்றெதிர்ந்தாரதிலிரண்டில்லைமேன்மரஞ்சுவரிலாதொன்று
னிர வவற்றிற்சுவரிலாவீட்டிற்குடிபுகுந்திருந்தனர்குமரர். (௬)

வருங்காணுநகரிலேவெளிவீட்டுறைபவர்கனகபாத்திரமூன்,
ஒரு றக் கண்டாரதி லிரண்டோடா மறவிலுந் தூளியா மொன்று,
ருபமில்கடத்திற் றுரோணமூன்றதனிற் றுரோணமூன்றகன்று
ருந்த, பருவரிசியைத்தாஞ்சமைத்துவாயில்லாப்பனவரொண்
ர்க்குமுன்படைத்தார். (எ)

ொலாகிரம்பவுண்டபின்மிகுந்ததருந்தினர்வேட்டைகளாடி
கண்மூவருமங்கிருந்தனரொன்னவிளமையானம்பினன்சிறுவன்
னமுமிவ்வாறறிவிலோர்காண்பர்புகன்மனவிரிவுசங்கற்பம்
ரமாமிதனுலுலகமாமிதனைவிடுநிருவிகற்பமாயிடுநீ. (அ)

பாலன்கதை முற்றிற்

ஆ திருவிருத்தம் - ௪௧௬.

## சித்தன்கதை.

ங்கள்சங்கற்பத்தாலறிவில்லோர்சாலமோகிப்பர்நல்லறிஞர், பொ
குநல்விசாரமதியினன்மயங்கார் புந்தியாற்பொய்ம்மையையொழி
த்துத், துங்கமெய்யுணர்வாய்பந்தமற்றிருந்துந்தொடர்புறுபந்தமு
ன்டென்று, பங்கமுற்றயரோலமலமாயழியாப்பரம்பொருள்பந்தமுற்
விடுமோ. (க)

அந்தமற்றொன்றாய்விகற்பமற்றறிவாயழிவிலாப்பரம்பொருளிரு
க்கப், பந்தமுற்றவராரர்முத்திபெற்றவராரர்பாவனைவிகற்பமேயனை
த்துஞ், சிந்தனைவிரிவுபந்தமாமதனைத்தீர்ந்திடன்முத்தியாமனத்தி

ன், றெருந்தலீலையினுற்றூரமாமணித்துந்தூரமுமண்ணிதாய்த்தோ
ன்றும். (உ)

கருத்தின்வல்லமையாற்கற்பமோர்கணமாங்கணமொருகற்பமா
மிவற்றைத், திருத்தமாயுணர்த்துமொருகதையதனைற்செகமெனுமி
ந்திரசாலங், குருத்துவமானமனத்தினுளிருக்குங்கொள்கைதோற்
றிடுமெனவுரைப்பா, னெருத்தனிங்கரிச்சந்திரகுலத்துள்ளானுத்த
ரபாண்டவநாட்டோன்.

செந்திருவாணிபுகழ்மகன்விந்தைசெறிபுயன்லவணனும்பெ
ன், மந்திரநிறைந்தவமைச்சர்தற்சூழமணிகொள்சிங்காதன
ப்ப,விந்திரசாலவல்லவனொருவனெய்தினனிறைஞ்சிநின்றே
சந்திரனனையபீலிகையேந்தித்தராபதிகாண்கெனச்சுழற்ற.

சுத்தமாம்பரத்தாற்பலவிதசிருட்டிதோற்றிடமாயைதோற்
போற், சித்தனுற்காட்டிச்சுழற்றுறுபீலித்திகிரியைமன்னவன்
த்தா,னத்தலத்தனிலேசயிந்தவதேசத்ததிபதிவிடுத்தவோர்தூ
றத்துறுபுரவியொன்றுகொண்டெய்திச்சதமகன்பரிக்குநேரொ

மன்னவவுனக்கென்றெங்கள்கோன்விடுத்தவயப்பரியென்றது
சித்த, னின்னதுபோல்வதில்லை நீயிதனிலேறுவாயென்றன
யோன், சொன்னவைகேட்டுச்சித்திரம்போலத்துரகமேநாட்ட
ய்வேந்தன், கன்னலீரிரண்டங்கிருந்தனனறிஞர்கவலைதீர்சம
ற்றென்ன.

வேத்தவையிருந்தோரையமும்வியப்புமிகுந்தனரரும்பியகமல
பூத்திரளோடைபோற்குவிந்திருந்தார்போதமோருபாதியோட
து,மூர்த்தமோரிரண்டுசென்றபின்றவிசின்முன்னுறவீழ்வுறுகின்
பார்த்திபன் றன்னையயலுளோர்தாங்கிப்பரந்துழன்மனந்தெளி
ணர்ந்தான்.

அனையவன்றன்னையமலநெஞ்சினனீயயர்வுறவந்ததென்னென்
வினையமந்திரியர் வினவலும்வேந்தன் விழித்திதுகேளுமென்று
பான், றுனையுறப்பீலி சுழற்றியிச்சித்தன் சொல்லிடமயங்கியி
மே, னினைவுறவேறிவேட்டையின்பொருட்டானீணெறிகடித
சென்றேன்.



அறிவறுமனத்தாலயர்வுறுபோகத்தறிவிலார்மருண்டுபோவது
போற், செறிநெடுந்தூரம்பரியினுற்சென்றுதீயினுவியாவையும்வெ
ந்து,பொறியெழும்பாலைவனத்திலேபுகுந்துபுரவியுமியானுமெய்வரு
ந்தி, யெறிசுடர்மேற்பாலெய்துறுமளவுமிடருறமயங்கிநெஞ்சிளைத்
தேன். (௯)

குடும்பபாரத்தைவிவேகிகள்கடக்குங்கொள்கைபோற்பாலையை
க்கடந்து, நெடும்பணைநாவற்கடம்பெலுமிச்சநிறைந்துபுட்குரலினு
னிரம்பி, யிடும்பைதீர்சோலையெய்தலுமாங்கோரிளங்கொடிபிணித்
ததென்கழுத்திற், கடும்பரியெனைவிட்டகன்றதுகங்கைகலந்தவர்பா
வமேயென்ன. (௧௦)

கழுத்துறுகொடியானூசல்போற்றூங்கிக்காவுறைதென்றலாற்கு
ளிர்ந்து, முழுத்திறமோகத்தழுந்திநெஞ்சயர்ந்தேன்முழுக்குநற்பூ
சனைநியமம், விழுத்தகுநல்லூணின்றியேசிசியாம்வீண்பொழுதணை
யவப்பொழுதிற், பழுத்தவல்லிருளுந்துன்பமுங்குளிரும்பல்லறை
யோசையுந்துணையாய். (௧௧)

மனத்திருளகற்றுமறிவுபோலந்தவல்லிருளிரவிவந்தகற்றப், புனை
த்துறுகொடியையறுத்தவணிறங்கிப்பொழில்புகுந்தொருவனாக்கா
ணேன், கனத்ததோர்பகலிலெட்டிலொன்றனகடிகையங்ககன்ற
தற்பின்ன,ரினத்தலாளொருத்திதன்னைமுன்னெதிர்ந்தேனிரவினை
மதியெதிர்ந்தன்ன. (௧௨)

கருகியநிறமுங்கருநிறத்துகிலுங்கைத்தலத்தன்னமுமாகி, யருகு
வந்துறலும்பசிப்பிணியாற்றுதவளைநானன்னமேயன்னந்,தருதியெ
ன்றிரந்தேன்பசியினுலெவர்க்குந்தாழ்வுவந்துறுமெனல்கண்டேன்,
வருதவஞ்செயாதோர்விரும்பியபொருட்போன்மற்றவளளித்திலள
ன்னம். (௧௩)

சோலைதோறுழலுமவள்பிறகேகிச்சோருமென்பசித்துயர்சொ
ல்ல, நீலநின்றுரைப்பாணீசர்கன்னிகையானினக்கெனதன்னமா
மென்னின், மாலையிட்டெங்கள்சேரியிற்பிதாமுன்வந்தெனைப்புண
ர்தியேலிந்த, வேலையிலளிப்பேனென்றலுமியைந்தேன்விருப்பொ
மெளித்தனளன்னம். (௧௪)

நல்கியபாதியன்னமுமருந்திநாவலின்கனிச்சுவைபருகி, யொல்
கிய துயர்போயிருத்தலும் புறத்திலுலாவுநல்லுயிரென வென்னைப்,
புல்கியகரத்தாற்பற்றினள்பிதாமுன்போயினள்யாதனுசரீர, மல்கிய
பபஞ்செய்நரகிலேகொடுபோய்மறுக்கமேசெய்யுமாறென்ன. (கரு)

நண்புறுமிவனென்னுயகனுகநல்கெனத்தாதையும்பொருந்திப்,
பண்புறவிருவர்தமையும்வேதாளபந்தனவனத்தினின்றகன்று, கண்
புகத்தோன்றுங் காலதூதனைப்போற்கருநிறத்தவன் கொடுபோகி,
யுண்புலால் வீசுஞ்சேரியி லடைந்தானெருப்படுமணஞ்செய்வானு
ன்னி. (கசு)

வானரம்புரவிகுக்குடங்காகம்வராகமென்பனவரிந்தெடுப்ப,வூன
ரம்புணங்கப்பறவைவீழ்ந்தலைப்பவுலவியசிறுவர்கைத்தசையி, லீன
வியினைப்பவுதிரமுமென்புமெல்லையில்சேரியிலெய்திக், கானரம்பை
களேநாட்டியகுடிலிற்கடிமணந்தொடங்கினர்களிப்பால். (கஎ)

மலினவூன்றுன்னுஞ்சிறுகனுநோக்கிமருகனல்லவனெனமகிழ்ந்
தாள், கலியினுங்கறுத்தகூன்கிழமாமிகடையர்மற்றியாவருங்கூடி,
யொலிபடுபறைகண் முழக்கினர் மதுவூன்களுஞ் சமைத்தனரவ
ளை, நலிதருபாவம்யாதனுசரீரநல்குமாறெனவவனளித்தான். ()

கடியபாதகங்களுருவுகொண்டனையகடையர்கல்யாணநாளேழி
ன், முடிதலுமவளோடெண்மதிகழித்தேன்முகிண்முலைபூத்தவள்
வாணுள், கொடியதோர்விபத்துதருந்துயர்போலோர்குழந்தையை
யளிக்கவக்குழந்தை, வடிவறவெந்தகட்டைபோனிறத்துவளர்ந்த
துமூர்க்கர்தம்மனம்போல். (கஅ)

பின்னர்மூவாண்டிற்பேதைமையளிக்கும்பிறப்பெனவொருமகப்
பெற்று, ளன்னவண்மீட்டுமாசையிற்றூன்றுமனர்த்தமேயென்ன
வோர்குழவி, தன்னையுமளித்தாளிவரொடுநெடுநாட்டங்கினன்குடு
ம்பபாரத்தி, னின்னலாலவர்தாபத்தினல் வருந்துமிடும்பையாற்ச
ளாத்ததென்யாக்கை. (உ௦)

வெம்புறுமூப்பான்மெலியுநாளந்தவிந்தவெற்பருகுறுசாரற், பை
ம்புயன்மறுத்துமண்ணினீர்சுண்டிப்பசியினுலுயிரெலாம்பதைப்பக்,



கொம்பொடுகொடியும்புல்லும்வெந்தெங்குங்கோடையாற்பொடிப
டவரலு, மெம்புதுக்கிளைஞரிறந்தவரநேகரெங்கணுமேகினரநேகர்.

தனையரிலிருவர்தோள்களிலிருப்பத்தலையின்மீதொருவனைத்தா
ங்கி, மனைவியோடேகிமெய்யெரிகொளுத்தமாய்வுறுதந்தநாடகன்
றோர், பனையடிநிழலின்மைந்தரையிறக்கிப்பதைப்பொருசிறிதொ
ழிந்திருந்தேன், வினைநரகேறிப்பழவினையோடேமேவியவின்பமதெ
ன்ன. (உஉ)

வளைதருமூப்பால்வழிவருந்துயரான்மைந்தர்களிருவரையணைக்
கக், களைகொலோதுயிலோசாய்ந்தனண்மனைவிகண்டுளங்கரைந்து
நானிருந்தே, னிளையவன்றுயிலாதென்மடியேறியிருந்துநீர்சொரித
ரவழுது, விளைபசியாற்றேனுதிரமுமூனும்வேண்டுமிப்போதுதாவெ
ன்ன. (உங)

இட்டமாமிளவலென்னெதிர்பதைப்பவென்செயலேதுமற்றுயிர்
போய்க், கட்டைபோலிருந்தேன்விடாதவனழுதகண்ணினீர்கண்
டறக்கரைந்து, மட்டிவன்வாரானென்றுயிர்விடுவான்வனக்கனல்வ
ளர்த்ததில்வீழக், கிட்டிநின்றுகைத்தேனிந்தவாசனத்தின்கீழ்வுறவீ
ழ்வுறுமளவில். (உச)

தாங்கினீர்பலருஞ்சயசயவென்னத்தாக்குறுபல்லியமுழக்க,வீங்
குணர்வுற்றேனீசனன்றுகிலவணனுமன்னவனுனேன், றீங்குறுசி
த்தன்செயலின்மோகித்தேன்சிவனுக்கவத்தைகளநேகம், பாங்குற
வுளவென்றறிந்தனனென்றுபகர்வுழியொளித்தனன்சித்தன். (உரு)

இருந்தமந்திரிகள்சித்தனன்றிவனென்றேற்றிலனிமைப்பினுண்ம
றைந்தான், பொருந்தியவுலகமனவிரிவென்றேபுலப்படக்காட்டுவா
ன்விடுத்த, திருந்தியதெய்வமாயையீதாகுஞ்செப்புமிச்செயலினற்
றீரப், பெருந்தகைபரத்தின்விகாரமேமனமாம்பேருலகென்றனரொ
ன்றூன். (உசு)

சித்தன்கதை முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - சுசரு.

# உற்பத்திப்பிரகரணம்.

ஆயமனத்தின்செயல்செயலாமதனாலொழிந்ததொழிந்துளதா
மேயமனத்தினலைவொழித்தோர்மிகவுநல்லதியானத்தோர்
தூயமனமாயிடில்வெற்பாற்சுழலாக்கடல்போற்பிறப்பிறப்பா
மாயைமயக்கங்கெடுமென்னாவசிட்டன்மீண்டுமுரைசெய்வான். ()

தளையாநிற்கும்பலபோகச்சங்கற்பஞ்சேர்மனவிருத்தி
முளையால்வளருமாமாயைமோகமென்னுநச்சுமரம்
விளையாநின்றமனநோய்க்குமேலோர்விதித்தபரிகார
மிளையாதெளிதாயதனாலேயியற்றலாகுமிதுகேட்பாய். (௨)

மிகமாலுறுபல்பொருள்களையுமேவாதொழித்தோர்மனம்வென்றே
சுகமாயெளிதாய்த்தனக்குரித்தாந்துயர்தீர்நிராசையறிவரியோர்[ர்
சகமார்மனிதபுழுவொப்பார்சான்றோருரைத்தநூற்பழகி
யகமாநினைவுதீர்மனத்தாலயருமனதைத்திருப்பிடலாம். (௩)

இரும்பாலிரும்புதிருந்துவபோலியற்றுமனத்தான்மனந்திருந்துந்
திரும்பாநிராசைவடிவாகிச்செறியுந்தன்னாலியற்றுவதாய்
விரும்பாநின்றோர்க்கெளிதானவெய்யமனத்தினுபசாந்தி
பெரும்பாரந்தீர்நற்கதியாம்பிறிதோர்கதியுநன்றாகா. (௪)

வாவுமனத்தையசங்கற்பவாளாலறுக்கினிறைந்தெங்கு
மியாவுமதுவாம்பொருடோன்றுமிந்தவழிநின்றறிவாலே
மேவுமனதைவிழுங்கியதின்மேலாமாயாவிகற்பமெலா
மோவுமதியாலறிவுகடந்துளத்தைவிழுங்கும்பொருளுணர்வாய். ()

வருந்திமுயன்றுமனந்தன்னைமாற்றியில்லையுண்டென்னு
திருந்தபதத்திலிருந்திடுவாயிடர்தீர்செல்வமிடரின்றிப்
பொருந்தவேண்டுமனம்வென்றாற்புவனமூன்றுந்துரும்பாகுந்
திருந்தவினிதென்றனவெல்லாந்தீதாய்த்தோன்றின்மனமாளும். ()

சித்தவிண்ணிற்றிகழறிவாந்தியானத்தாலேயறிவென்னு
மொத்தபடையாலையமறவுளத்தையறுப்பாயறுத்ததற்பின்
மெத்துதுயர்போமவனிவனென்மேவுமென்னததுவிதுவாய்
வைத்தவிவையேமனமிதனைமறப்பாம்வாளாலறுத்திடுவாய். (௭)



பெருகத்திரண்டமுகிலெல்லாம்பெருங்காற்றாலேயொருவுதல்போ
வருகற்பனைநாசத்தாலேமனம்போயிறக்குமனமிறந்தாற் [ல்
பொருகற்பாந்தமாருதமும்பொங்குகடலும்புவியனைத்து
முருகச்சுடுபன்னிருகதிருமொருகால்வரினுமிடருண்டோ. (௮)

தன்னைக்கொண்டேதனையறுக்கிற்றானாய்ச்சகலபூமிக்கு
முன்னைத்தலைமைபோலின்பமுதிரநிறைந்துவகற்பனைக்கே
துன்னித்திகழ்தற்பதம்பற்றிச்சுகத்தையடைவாய்பலவாக
வுன்னிப்படர்கற்பனைச்செல்வமுடையமனமேயுயிர்ப்பகையாம். ()

உள்ளப்பகைவன்பலவிதமாயுறுகாட்சிகளால்வெல்லாமற்
றெள்ளத்தகுசந்தோடமெனுஞ்செல்வமுடையநிராசையினாற்
கள்ளத்தனிநெஞ்சினைவெல்வாய்கற்றோர்க்கன்பாய்நின்மலமாய்க்
குள்ளக்குளிர்ந்தாங்காரத்தாற்கூறாகாதுசமபாவம். (௧௦)

தாழ்வுமுயர்வுமில்லாதசமபாவனையாற்பிறப்பில்லா
வாழ்வுநல்கும்பரமபதமாறாப்பதமாமலைவாலே
வீழ்வுறாதமனமரிதாம்வெம்மைகனலைவிடாததுபோ
லாழ்வுசெய்யுமலைவுமனமகலாவறிவினலைவுமனம். (௧௧)

அலையுமந்தமனமுலகாமலைவுபோகின்மனங்கெடுமிந்
நிலையேதவமுநூற்கருத்துநிமலவீடுந்துணிபொருளுந்
துலைவிலலைவேமனமாயைதொடர்வாதனையுமதன்பெயரா
மலையுமனமுமதுவதனைமாறாவிசாரத்தான்மாய்ப்பாய். (௧௨)

மெத்துகின்றவாதனையைவிட்டான்மேலாநலமுளதாஞ்
சத்தினசத்தினிடைநின்றுசைதன்னியத்திற்சாட்டியத்தி
லொத்துநடுநின்றலைவதுவேயுள்ளமாகுமிவ்வுள்ளஞ்
சித்தின்முயல்வாற்சித்தாகுஞ்சடத்தின்முயல்வாற்சடமாகும். ()

ஊக்கமுளதாய்மனமொன்றிலுறைக்கிலதுவாமாதலினாற்
றாக்குமனத்தைமனத்தாலேதள்ளியேறித்தளர்வின்றி
யாக்கமழிவில்பதம்விளைவிலடைவாய்மனத்தைமனத்தாலே
நீக்கவலதாந்தகைமைத்தாநிருபனிறுத்துநெறிபோல. (௧௪)

பிறவிக்கடலிற்காதலெனும்பெருவாய்முதலைபிடித்தீர்க்க
விறவுச்சுழியாற்சுழலுமவர்க்கிதயநாவாயெட்டாவா

மறமுற்றுளத்தையுளத்தாலேமாய்த்துப்பிறப்பில்வருந்தாம
லுறவுற்றனைநீயுய்விப்பாயுயிர்க்குப்பிறராலுய்வுண்டோ. (கரு)

எந்தவெந்தவாதனைகளிதயத்தெழுந்தவவையெல்லா
மந்தவந்தவிடத்தழிக்கிலதுவேமாயைக்கழிவாகு
முந்துபோகபேதமெனமொழிந்தவிருவாதனைவிட்டு
வந்தபாவாபாவங்கண்மாற்றிவிகற்பமறமகிழ்வாய். (கசு)

வேறு.

அறிபவற்றசையறிலதுதானேயவித்தையுமனமுமாண்டதுவாம்,
பொறிபயிலாசைதுன்பமாநிராசைபுகலருமுத்தியாமின்பம், பிறிவ
றுதனதுமுயற்சியாலுண்டாம்பேதையருண்டெனுமவித்தை, செறி
தருபொய்யாய்நாமமாத்திரமாய்ச்சித்தெனத்தேர்ந்திடிவிலதாம். ()

என்றலுமிராமனவித்தையின்செல்வத்தெழுந்தறநெருங்குமிவ்வி
ருடா, னென்றுமிங்கின்றியெவ்வகைநீங்குமுறைத்தருளின்னநீயெ
ன்ன, வன்றவனுரைப்பான்வன்றுயர்முட்சேர்வன்பவக்குழியின்ம
ன்னுயிரா, யொன்றவீழ்த்ததனேடொக்கவீழ்மாயையுண்டெனி
னுண்மைநோக்கில்லை. (கஅ)

பிறப்பெனுமாயைக்களையதாயெங்கும்பிறிவறுபெரும்பொருடோ
ன்றி, விறப்புறுமாயைக் கிச்சையேவடிவா மிதனுடைநாசமேவீடு,
சிறப்பில்சங்கற்பஞ்சிதைந்திடி லிதுதான்றேய்ந்திடுஞ்சித்தெனுங்க
திரோன், புறப்படிலிதயவிசும்பில்வாதனையாம்பொங்கிருள்போமெ
னப்புகல. (கசு)

கண்டனவனைத்துமாயையேயென்றாய்கண்ணெனுந்தத்துவத்தா
லே, தண்டறவதுதான்களைந்துபோமென்றாய்தத்துவமாவதேதெ
ன்ன, வெண்டவனுரைப்பான்காண்பவற்றிடைசென்றெய்திடாதெ
ங்கணுஞ்சமமா, யுண்டெனலாகிநாமமற்றுயர்ந்தவுணர்வுதற்பரம
மாமுணர்வே. (உ0)

இவையெனுமனைத்துஞ்சிற்கனமாகிபிறப்பிலாப்பிரமமேயென்று
நவையுறுமனமாங்கற்பனையில்லைநாசமும்பிறவியுமென்னு
மவையெலாம்புவனமூன்றினுமில்லையறுவகைவிகாரமுமில்லைக்
கவையறுசமமாங்குறிபெறுமறிவுமாத்திரங்காணநின்றுளதால். ()



கேவலமாகிக்கேவலவொளியாய்க்கேடறுசுத்தமாய்விரிவா
யோவலிலறிவுமாத்திரமாகியுறுதுயரொன்றுமற்றாறி
மேவருமிரதமனைத்தினுக்கொத்துவிகாரமற்றுளபொருளிடத்தே
தாவருந்தனதுநினைவையேவிரும்பித்தன்வயத்தெழுந்ததோரறிவு.

செப்பியவறிவுமுடிவில்சங்கற்பஞ்செய்ததிற்சென்றிடுமிதுதா
னிப்பிரமத்தின்மனமதாமிதனுக்கெண்ணில்சத்திகளுளவாகுங்
கப்பிலாதெங்குநிரந்தரஞ்செய்யுங்கடுமையாமிம்மனந்தனிலே
யப்பிலேதோன்றுந்திரைகள்போற்பேதமாகியவல்லபந்தோன்றும்.

உள்ளுறுசங்கற்பத்தினாற்றோன்றுமுள்ளமற்றதனினாலொடுங்குந்
தள்ளுறுகாற்றாலெழுந்ததீக்கொழுந்துசமிப்பதுங்காற்றினாற்போல
நள்ளுறுபிரமமன்றுநானென்றுநாடுதன்மனத்துறுபந்த
மெள்ளுறுமிடமும்பிரிவிலாப்பொருளேயாமெனுமழுத்தமேவீடாம்

மடமையுந்துயருமவயவநிறைந்தவடிவமுமுடையனானென்றே,
படர்தருமவற்றிற்கேற்றபன்னடையாற்பாசமும்பந்தமுமுளதாஞ்,
சடமுறு மிவற்றிலேது மொன்றல்லேன் றசைநரம்பென்புநீரல்லே,
னுடலின்மேலானபரமநானென்னுமுறுதியோர்மாயைசெற்றுணர்
ந்தோர். (உரு)

தானலாதானவுடன்முதற்பொருளிற்றானெனும்பாவனையாய,
வூனமாமாயை யுணர்விலோர் விதிக்கவுள்ளதா முணர்வுளோர்க்கில
தா, மானதநினைத்ததைம்பொறியியற்றுமன்னவர்க்கமைச்சர்போல்
வினைவி, லானநன்மதியான்முயற்சியாற்போகத்தாசைவாதனையை
வேரறுப்பாய். (உசு)

என்னுடைமைந்தனென்னுடைநிதிநானிவனவனிதுவதுவென்னு,
மின்னுடை நிலைமை யிந்த்ரசாலத்தால் வீங்கியவாதனை யோங்கும்,
நன்னுடைநிலையஞ்ஞானமாநிலைபோய் நாசமாயையிற்கருத்தொழி
வாய், நின்னுடைவடிவிலவற்றைநீயென்றேநினைவிலார்போல்வரு
ந்துவதென். (உஎ)

மூகமாய்ச்சடமாய்ச்சுகாசுகங்களிலேமூழ்கியோர்பயனறவருந்
துந், தேகமார்நீயாரகோவகோவீதோர்சித்திரமிருந்தவாகாணு, யே
கமாய்மெய்யாயிலங்கியபிரமமெங்குமாயிருக்கவுந்தோன்றாச், சோ

கமாய்ப்பொய்யாய்விளங்குரு மாயைதோன்றுருதிருக்கவுந்தோன்
றும். (உஅ)

படிகநன்மணிகள்பற்றிபாய்நிறங்கள்பற்றறப்பற்றுறும்படிபோன்,
முடிவறுதொழிலிற்பின்விருப்பின்றிமுடித்தியென்றருந்தவவசிட்ட,
னெடிதுரைத்தலுமேபரத்துவகேளாய்நிறைகுணத்திராகவன்கேட்
டு, மடியறுவிதயபங்கயமலர்ந்துவசிட்டனைநோக்கியீதுரைத்தான்.

அற்புதமீதொன்றிருந்தவாறென்னேயம்புயஞாளநூலாலே,வெற்
பினம்பிணிப்புண்டறநெரிவதுபோல்வெறும்பொய்யாமாயையாலு
லகம், பற்பலதுயரம்பயில்வதாந்திரணம்பருவயிரத்தின்வன்புறல்
போ, லுற்பவமிலங்குமதனினுலேற்குமுறுதியையென்றுமீட்டுரை
ப்பான். (௩௦)

ஈதுமோனாயமென்மனத்துளதாலியம்பியலவணனுமன்னன் [பான்
மாதுயரடைந்ததென்னெனக்கேட்பவசிட்டமாமுனியதற்குரைப்
நீதகன்மனத்தாலியற்றலாலந்தச்செயல்பயனுடல்புசித்திலதா
லோதுறுமந்தமன்னனேர்நாளிலுபவனத்தொருவனுயிருந்து.(௩௧)

இருதயத்துணர்வான்பிதாமகன்குருவாமிராசசூயஞ்செய்வோ
மென்னுக், கருதியமனத்தான்மகத்தினுக்குரியகலப்பைகளனைத்து
முண்டாக்கிச், சுருதிநூல்வழியேசாலையிற்புகுந்துதுறவரைவரித்
தருச்சித்து,வருதிரொன்றிமையோர்களைமறைமொழியால்வரவழை
த்தாரழல்கிளப்பி. (௩௨)

கடவுளர்முனிவர்மறையவர்பூசைகடைப்பிடித்தாரொருவருடங்,
தொடர்புறநடத்தித் தன்பொருண்முழுதுந்தொலைவுறத்தானமாவ
ழங்கித், திடமுறுமனத்தான்முடித்தபின்பகலுஞ்சென்றதுவிழித்
தனனிதனு, விடவியமனமேதுன்பவின்பங்களெய்துறப்புசிப்பதெ
ன்றுணர்வாய். (௩௩)

சித்தனதியல்புசெப்பிடக்கேண்மோதிருந்தியலவணன்முன்னெ
ய்தி, வித்தையான்மயக்கஞ்செய்துளசித்தன்மீண்டுபோயொளித்
தனனுங்கே, யித்தனைசெயலுங்கண்டடனிருந்தவெம்மையீதென்
னெனவினவ, வத்திறல்வேந்துமியாவருங்கேட்பவகத்துணர்ந்து
ரைத்தனமனைத்தும். (௩௪)

ஈங்கிதுபுகலவிராகவகேட்டியிராசசூயத்திலேலவணன்,பாங்குறு
மனத்தாற்செருக்குத்தவாயாரும்பன்னிருவருடம்வன்றுயரிற், றீங்கு



றுவருத்தமுறுதலான்மகவான்சேணினின்றொருவனையேவ, வாங்
கவன்சித்தனுகியேலவணற்கருந்துயரளித்துமீண்டகன்றான்.(௩௫)

மற்றுமொன்றுரைக்கவள்ளலேகேட்பாய்மடமையாம்பூமியேழ்ப
தமா, முற்றுளஞானபூமியேழ்பதமாமொழிந்தவிப்பதங்கடம்மிற்று
ம், பற்றுளவாகுமொன்றொடொன்றளாவிப்பயில்வனபதங்கண்மட்
டிலவா, மற்றமில்சொரூபநிலைபெறல்வீடாமதினமூவுறுதனுனென
லே. (௩௬)

அடக்கமாயுரைத்தேமஃதறிந்தவர்க்குமறிகிலாதவர்க்குநற்குறிக
டொடக்கமில்சன்மாத்திரமதாமறிவின்சொரூபநின்றசைவிலாதவ
ரோ, விடற்கருங்காமமுதற்பகைகடந்தோர்மெய்யறிவிலார்கடப்பரி
யோர், நுடக்குறுகாட்சிவிதத்தில்வீழறிவேநோக்கருஞ்சொரூபத்
தினமூவல். (௩௭)

சொருபம்விட்டகலன்மோகமாம்வேறுசொல்லிடமுன்புபின்பில்
லை, யொருபொருணினைவையொழித்துமேலப்பாலொருபொருணி
னைவுறிலந்த, விருபொருணடுவுணினைவறவிருக்குமிதுசொருபத்தி
யல்பிதுதான், மருவுகற்பனைமாண்டசைவில்கற்போலாய்வருநனுச்
சுழுத்திதீர்வடிவாம். (௩அ)

நானெனும்பிரிவும்பேதமுமற்றுநல்லறிவாயசையாத [பா
மானதநிலையேசொருபமாமுன்சொன்மடமையாம்புவிபதங்கேட்
யீனமாம்விந்துநனவுமேனனவுமியன்றமாநனவுமந்நனவி
லானதோர்கனவுங்கனவுமிக்கனவிலடர்நனவுஞ்சுழுத்தியுமே. ()

சித்திலேநின்றோரறிவுபேரின்றிச்செறிமலமின்றிமேல்வந்து
வத்தியாநிற்குஞ்சித்தசீவாதிவருபெயர்செயல்களுக்கிடமாய்
வித்துருபமதாய்நின்றிடுமதனுல்விதைநனவாமுதற்பதமே. (௪௦)

இதுவறிவுக்குமுதலவத்தையதாமிதத்துறப்பிறந்தபின்னிவனு
னிதுவெனதெனப்பண்டிலாமையானெய்தாயெழுந்துளவறுதியோ
நுவா, மிதுதனையொழியவிவனவனேயிதுவதுவென்னதென்றெ
ண்ணு, மிதுமுதற்பிறப்பிற்றொடர்ச்சியாய்ப்பருக்குமிந்தநிச்சயம்
பெருநனுவாம்.

(௪௧)

அறிந்துளதெனினுமறிகிலாதெனினுமழுந்துறத்தானதுவாகிச்
செறிந்துளநனவிற்சித்தராச்சியமேசெய்வதுநனுக்கனுவாகு [ப்
மெறிந்தகானலினீர்சுத்திகைவெள்ளியிருமதியிவைமுதற்பலவாய்
பிறிந்தபேதங்கணனவிலேபழகும்பெற்றியாற்கனவுபல்விதமாம். ()

அற்பகாலத்திலனேகமாஞ்செயல்கண்டறிந்தனமெனுங்கனவழி
ந்து, முற்படுசெயலைநினைவதுகனவாமுந்துகண்டதனைநாளகன்று,
பிற்படக்காணும்பொருள்களைமறந்து பெரும்பொழுதுணர்வுறநோ
க்குஞ், சொற்பனநனவுபோனனவுக்கேதோன்றுமிச்செயல்கனூ
னவே. (சரு)

அறுவகையவத்தையகற்றியசீவனடைந்துளவவத்தையினியற்கை
யுறுசடமாகிமேல்வருந்துயர்கூருணர்வுளதாமிதுசுழுத்தி
துறுபுவனங்களிதனிடையிருளிற்றெலைவுறுமிப்பதமேழும்
பெறுவனபேதமொன்றுநூறுகும்பேதைமையவத்தையிவ்வேழும்.

வேறு.

ஞானபூமியைமுடிவிற்பேதமாகநவிலுவர்வாதியரவற்றினமக்கு
நல்ல, தானதிவையிவையறிதன்ஞானமாகுமறிந்தவிவற்றந்தமேய
ழிவில்வீடா, மானமுறுசுபம்விரும்பல்விசாரமெய்தன்மனஞ்சிறுக
லுண்மையிலேமன்னிநிற்ற, லீனமறுசங்கற்பமறல்பதார்த்தவெண்
ணமறுத்திடறுரியமிவையேழாகும். (சுரு)

இவையறிந்தோர்மோகமெனுமளற்றில்வீழாரிவற்றியலாமுத்திவ
ரிலிடர்மீண்டில்லை, நவையுறுமோகத்தொடுநாமடைவதென்னேநல்
லோரானன்னூலானன்றுஞானச், சுவைபெறுதுநிராசையினுலெ
ன்றுநாடல்சுபம்விரும்பலாகுமிந்தச்சுபேச்சைமுற்றிக், கவையறு
நல்லோரியற்கையாசாரங்கள் கைவருதல்விசாரமாக்கருதல்வேண்
டும். (சுசு)

இனையசுபம்விரும்பலொடுவிசாரமென்றவிரண்டுநிறைதலும்விட
யத்திச்சைமாற்றி,நினைவுகுவிவதுசித்தஞ்சிறுகலாகுநிகழ்த்தியவிம்
மூன்றுலுநெஞ்சந்தன்னில், வனைதருமவ்விரத்தியினுலுண்மைப்
போதமன்னுதலேயுண்மைநிலைமருவலாகு, மனையனவிங்கான்கானு
முண்மைப்போதத்தழுந்தியயற்சங்கமறலசங்கமாகும். (சுள)



அறைந்தபதமைந்தாலுந்தானும்போதத்தழுந்தியவின்பத்தமை
வாற்புறனுமுள்ளு, முறைந்தபதார்த்தங்கண்மறந்தயலோர்வன்பா
லுணர்வதுவேபதார்த்தநினைவொழிதலாகு, நிறைந்தவிவையாறு
லும்பேதம்போக்கிநிலைபெறுதற்சுபாவத்தேநிற்றறுனே, மறைந்த
பொருள்வெளியாக்குந்துரியமாகு மாசறுசீவனின்முத்தர்வழியீதா
கும். (சஅ)

சொன்னதன்மேலுடலிறந்தமுத்தர்மேவுந்துரியாதீதப்பதமாந்து
ரியச்செல்வந், தன்னுணர்வாற்றனையறிந்தபெருமைசான்றதலைவ
னுலெய்தலுறுந்தன்மையாகு, மன்னியவிப்பதமடைந்தசீவன்முத்
தர்மகிழ்ச்சிமறுக்கத்தழுந்தாமரபினுலே, யன்னியர்சொல்வழிதுயி
ல்விட்டெழுந்தார்போலவடுத்தனசெய்குவர்செய்யாராகிவாழ்வார்

இஞ்ஞானபதமேழுமிகவும்புந்தியெய்தினர்க்கல்லதுதோன்றுவி
வற்றையெய்தி, லஞ்ஞானமிலேச்சனேயெனினுந்தேகியதேகியெ
னினும்முத்தனையமில்லை, மெயஞ்ஞானமென்பதுதான்மனத்தின்
கட்டுவிடுதலிதுபெறிலிதுவேவீடுபேறும், பொய்ஞ்ஞானக்கானலி
னீர்முதலாமோகம் பொய்யெனப்போமடமையும் பொய்யென்னிற்
போகும். (௫௦)

தனையறியுநிட்டையுளோர்க்கெய்தலாகுந்தத்துவபூமிகளறிந்தத
லைமைமேலோர், நினையவுந்தாழவுமுரியார்பொறிகளென்னுநெடும்
பகைவென்றோரழியாநிலையினின்றோர், துனைதருபல்லுயிரிறைஞ்
சமேலாய்வாழுஞ்சுரோந்திரருநரோந்திரருந்துரும்பாய்த்தோன்று, ம
னையபெரும்பதம்பெற்றோரவரோயாகுமல்லாதோர்பவக்கடலிலமிழ்
ந்தாநிற்போர். (௫க)

உளமொடுங்குமுபாயமேயோகமாகுமுணர்வுறுபூமிகளிந்தவுபா
யமாகும், வளமிகுமிப்பூமிகளாலன்றியிந்தமாதேவபெரியபதமருவ
லாகா, வளவறநீநான்றுன்வேறென்றுமின்றியபேதமாயநாமயமா
யமூலமாகிக், கிளர்சுகமாய்ச்சாந்தமாயறிவாயொன்றாய்க்கேடின்
றிப்பெயரின்றிக்கீழ்மேலின்றி. (௫உ)

பாவனையுமபாவனையுமுதலுமீறும்பற்றுமுளதும்மிலதும்பலவுந்
தேசு,மேவறிவுமடமையுமென்றிவைகளின்றிவிண்ணிலேயிருப்பதா
ய்விசாலமாகி, யாவதுமாயன்றாகிமனத்தால்வாக்காலெட்டரிதாயி

ன்பத்திலின்பமாகி, யோவரியநிறைவினிறைவாகியாசையொழிவி டமாய்த்தன்னுற்றானுணருமொன்று. (௫௩)

எழுவகையாம்பூமியினுற்பெறும்பிரமமிதுமாயையேற்றங்கேண் மோ, விழுமமுறுலவணன்றான்மெய்ம்மறந்துமுன்கண்டவிந்தச்சா ரற், பழுவமனக்கண்ணுடிபயில்கின்றவுடலொடும்போய்ப்பார்க்கிற் கண்ணிற், றழுவுறுங்கொலெனுமமைச்சருடனெண்ணித்தானையு டன்சமைந்துபோனான். (௫௪)

தென்றிசைசென்றனன்மீட்டுந்திக்குவிசயஞ்செய்யச்செல்வான் போல, முன்றிகழும்விந்தகிரிமுற்பட்டான்வடக்கொழிந்தமூன்று திக்கிற், றுன்றிவளர்வனமெல்லாஞ் சுற்றினானினொந்தான்சூழ லொன்றி, லன்றுகருதியகருத்துவடிவெடுத்ததெனப்பழையவடவி கண்டான். (௫௫)

காலனகர்நிகராமக்கடியவனத்துலாவுதலுங்கடையர்செய்கை, போலவன்முன்சஞ்சரித்ததலங்களு மச்சேரிகளும்பொருந்தக்கண் டான்,சாலவியந்தானந்தக்கடையர்கடைச்சியர்குடில்கடப்பாவண் ண, ஞாலநரபதிநோக்கிவியப்பினுன்மனமயக்கநண்ணிநின்றான்.()

கருத்தயருந்துயர்களைப்பக்கண்களைந்துமெய்களைந்துகதறுநின் ற, விருத்தையர்தங்கூட்டத்தின்மிகமெலிவால்வாய்விட்டுவிம்மிவி ம்மி, யொருத்திமுதனுளிறந்ததன்கிளைஞர்பெயரொல்லாமுரையா நின்று, பெருத்தநெடுங்குரலாலேயிவ்வாறுபுலம்பினுள்பேதமாக.

மாறுனவிதிபாலென்மடிவிட்டுமெடிந்துபோமைந்தர்காளோ
வேறுகியெத்தூரமேகினீர்யார்முகத்தேவிழிக்கின்றீரோ
கூறுனசெங்குன்றின்மணிமாலைத்தோளாலேகுளிரப்புல்வி
யாறுதவென்னெருப்பையாற்றுவாயோமகளேயந்தோவந்தோ.

முன்னஞ்செய்தவத்தினுற்றேடாதமாநிதிபோன்முன்வந்தெய்தி ப், பொன்னனூர்நின்குலத்தோரவர்மயல்விட்டென்மகளேப்புணர்ந் துவாழ்ந்த, மன்னனுமருமகனேமறந்தனையோ [illegible]முகத்தைவந்து காட்டாய், * பின்னைநாயகவுனக்கென்பேதைசெயுஞ்சிறுபிழையா ற்பேதித்தாயோ. (௫௯)

---

* பின்ன மறும்படி என்றும் பாடம்.



வன்பிறவிப்பேராற்றில்வல்வினையாகுந்திரைகள்வந்துகூடித், தன் பிறவிபரசியற்கைதவிர்ந்தெமதுதையலுக்குத்தலைவனாகிப், புன்பிற விப்புலையனைப்போற்பூதலத்துப்புரந்தரனும்புன்மைபூண்டான், மி ன்பிறவிநிற்கரிதுமிகக்கொடிதுமிகக்கொடிதுவிதியேயென்றாள். ௬௦

என்றழுதுவவள்புலம்பியிசைத்தவெலாநனிகேட்டலவணனங் கே,நின்றுளதன்சேடியராலவடியெரந்தனையாற்றிநேயத்தோடுங்,கன் றிபநின்னிடரோதுநீயார்நின்மகளார்நின்காதலோரா, றொன்றுமொ ழிவறமொழியென்றிவன்வினவப்புலைக்கிழத்தியுரைப்பதானாள். ௬௧

ஈதுபுலைச்சேரியிதிலொருபுலையனென்கணவனிவனுக்கிங்கோர், மாதுபிறந்தனளவளையிந்திரன் போலொருமன்னன்வந்துசேர்ந்தா ன், போதுநெடும்புணர்வித்தவிதியாலேயவண்மூன்றுபுதல்வர்ப்பெ ற்று, ளேதுறுநல்வினைபோலத்தீவினைவந்தென்கிளைஞரிறந்துபோ னார். (௬௨)

நெடுங்காலம்வாழ்ந்ததற்பினிலமுகிற்றுளிவறண்டுநிலனீர்சுண் டிக், கடுங்காலனிகர்கலியாற்றிசைதிசைபோய்க்கடையரொலாங்க ழிந்துபோனார், நடுங்காநின்றனதுயருந்தனிமையுமேதுணையானே நாங்களென்ன, வடுங்காலவேல்வேந்தனமைச்சரைப்பார்த்ததிசயி த்தானவசனாகி. (௬௩)

வேண்டுவனகொடுத்திவளைவெந்துயர்தீர்த்தந்நகரின்மீண்டுமேவி, நீண்டவுலகத்தியல்புமாயையின்வல்லபமுமவனெடிதுகண்டான்,கா ண்டகைய பரம்பொருளு நாமுரைப்பவறிந்தமைந்தான் கருணைவள் ளா, லீண்டியவிம்மாமாயைகடப்பரியவன்மோகமியற்றுங்கண்டாய்.

இலதுளதாமுளதிலதாமிம்மாயைவல்லபத்தாலென்னலோடுங், கலனமுறுசொற்பனத்திற்கண்டதெலாஞ்சாக்கிரத்திற்கண்டதென் னே, குலமுனிவவெனக்கேட்டவள்ளலுக்குமுனியுரைப்பான்கொ டியமாயை,யலகறுமோகம்புரியுங்காதிகதையாலிதுமேலறியலாகும்.

காகதாலியம்போல்வாதனையின்வசத்திலுளங்கலந்துநிற்கு
மேகமுறத்தம்மிற்றுமென்றுணர்வினிலைநின்றேரியம்பாநிற்ப
ராகலினுன்முன்னுளிற்சித்தனுற்புலைச்சேரியாகக்கண்ட
மோகமதேபின்னுளுங்கண்டதுவேறன்றுநாமொழிந்தவேந்தன். ()

மன்னவன்கண்டுளகனவின்மதிமயக்கந்தன்னையேமலையின்சார,
லன்னவருநன்னினைவாலறிவுற்ருர்லவணனுமறிவின்ருேற்றந், து
ன்னிவருகடையர் மனங்களிற் ருேற்றக் கடையனெனத் தோன்றும்
போத, மின்னரபதிமனத்திற்ருேன்றியதான்மாமாயையேதுசெ
ய்யா. (சுஎ)

தோன்றியவைவிளக்கத்தாலுண்மையாமைம்பொறிக்குந்தொடர்
பாய்நிற்கு,மான்றபதார்த்தங்களெலாமறிவினுலொழிந்துண்மையா
கமாட்டா, வேன்றறிவானறிபொருளாமிரண்டினிடையறிவானுக்
கியைந்தரூப, மூன்றியறிபொருளறிவானறிவிலிவையுற்றிடுவதுயர்
ந்தவீடு. (சுஅ)

ஓரிடம்விட்டோரிடத்தேயுள்ளமுறிலவற்றினடுவுண்மையாகிப்,
பேரிலதாயுணர்விலதாய்ச்சடமிலதாயது நீயாய்ப்பிரியேலென்றுங்,
கூரியபுந்தியினுலேயூகித்துக்குடும்பியெனுங்குறிப்பைமாற்றித், தூ
ரியதாம்படிமனத்தின்றுவக்கறுத்துவிருந்தபடிதுணிந்துநிற்பாய். ()

பிறப்பிறப்பாம்பூட்டைதனைப்பிணித்துழற்றும்வாதனையாம்பெரி
யபாச, மறப்பெரியமுயற்சியினுலறுத்திடுவாய்பரமமாமறிவின்முன்
னே, புறப்படும்பொய்யாமுள்ளம் புவனவிகற்பங்களெனும்பொய்
யைக்காட்டுஞ், சிறப்புளவிண்ணிலதாயுமிலதானநீலநிறஞ்செறிவ
தேபோல். (எ0)

சோகமுறுசங்கற்பநாசத்தான்மனமாளிற்ருென்றுதொட்ட
மோகமெனுமூடுபனிவிட்டகலுஞ்சரற்காலமுதிரவந்தான்
மாகம்விளங்குவதென்னநல்லறிவுமாத்திரமாய்மாயாதாகி
யேகமாய்வடிவின்றிப்பிறப்பிறப்பிலாப்பிரமமிலங்குநொய்தாய். ()

உற்பத்திப்பிரகரண முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ருகசு.

திதிப்பிரகரணம்.

## சுக்கிரன்கதை.

எழுதுவோனுமெழுதிடமுமெதிர்காண்பொருளுமிலதாகி
வழுவிலாதவிண்ணிடையேவந்துதோன்றுமோவியந்தான்
பழுதின்மேவுந்தனைத்தானேபாராநிற்கும்பலபொறியு
நழுவுதுயிலினுலன்றிநனவான்மேவுங்கனவொக்கும். (க)

கரியாய்ச்சமமாய்நொய்தாகிக்கலந்தவிகற்பந்தீரறிவிற்
பரியாநின்றவுலகமெலாம்பற்றிபாய்தல்கண்ணடியிற்
றெரியாநின்றபொருள்போலாஞ்செறிகாரணகாரியமின்றிப்
புரியாநின்றவுலகெல்லாம்பொலிந்துபிரமத்திடையிருக்கும். (உ)

சொன்னவுலகங்களுக்குருவந்தோன்ருநின்றமாத்திரமாம்
பின்னமின்றியாவையுமாய்ப்பேராவறிவாய்ப்பெருவிண்ணுய்
மன்னுபிரமமொன்றென்றேவருந்திமுயன்றுபாவிப்பா
யன்னநிலையேகைவந்தாலலைவற்றுள்ளமறிவுருவாம். (ங)

கீற்றுப்பலசேரொருகற்போற்கிளருஞ்சகங்கள்செறிபிரமந்
தோற்றப்படுமோவிரண்டென்னத்தொடர்காரணம்வேறிலாமையினு
லாற்றச்சகமென்ருென்றிலதாமறிவேயுளதாமனைத்துலகுந்
தேற்றப்பிரமத்திருக்குமிவைதெளியவெள்ளிகதைகேட்பாய். (ச)

முன்னமொருநாட்பிருகுமுனிமுதுமந்தரமால்வரைச்சாரன்
மன்னுதவஞ்செய்யுழியவன்றன்மைந்தன்மதிமான்மதியனையோன்
றன்னதாதைகழற்பிரியான்றனிமெய்ஞ்ஞானமஞ்ஞான
மென்னுமிருபார்வையினடுவேயியங்காநின்றபெரும்பதத்தோன். ()

செறியந்தரத்தேநிற்கின்றதிரிசங்குவைப்போற்சுக்கிரனு
மறிவோடறியாமையினடுவேயமருநாளிலவன்ருதை
பிறிவில்சமாதியுறநிற்பப்பிரியாவெள்ளிதனியிருந்து
வெறியவிசும்பைநோக்குதலும்விண்மாதொருத்திவரக்கண்டான்.

மந்தாநிலத்தாலசைகின்றமந்தாரஞ்சூழ்மலர்க்குழலா
டந்தாவளத்தின்பிடிபோலத்தனியேவரலுமெதிர்நோக்கிச்

சிந்தாவசனாயவள்வடிவைத்தியானித்திருகண்முகிழ்த்திருந்து
மூர்ந்தாநின்றவேட்கையினான்முடிவின்மனோராச்சியமுயன்றான். ()

பொன்னாட்டணங்கேயிவளந்தப்பொன்னாட்டியானும்போய்ப்புகுந்
தின்னாட்டமரரிவர்போற்றவெழில்கூர்சிங்காதனத்திலிவன் [தே
மின்னாற்செறியுமுகிலென்னவேந்தாமிவனைச்சூழ்ந்துமதன்
றன்னாற்களிக்குமரம்பையர்தஞ்சமுகமிவையென்றுளத்துணர்ந்து.

இமையோரிறையையிவன்வணங்கவிவனையவனுமிறைஞ்சியபின்
னமையாவின்பவிண்ணாட்டிலகலாதுலவுமவ்வளவிற் [லுங்
சுமைவார்கொங்கையரம்பையருட்சொன்னவவண்முன்றோன்றுத
கமையாவன்பாற்கண்களிப்பக்கண்டானவளுங்கண்ணுற்றாள். (கூ)

இருவர்விழியுநினைவுகளுமேகமாகவுறப்பற்றி
யுருகுமளவிற்சங்கற்பத்தோன்றும்பிறையாவுயர்வெள்ளி
கருகுமிருண்மூடுகவென்றுகற்பித்திடலுங்கற்பாந்தப்
பருவம்போலுமிருள்சூழப்பலருமகன்றார்பலதிசையும். (க0)

அன்னாளிவனைவந்தணையவழகார்தருநீழலிலொருபாற்
றுன்னாமுயங்கியோருயிராய்த்துன்பமில்லாவின்பத்தி
னன்னாளாகச்சதுரியுகநாலுநாலுநடந்ததற்பின்
முன்னாம்புரிந்ததருமமெலாமுடியுமுடியுமெனுங்கருத்தால். (கக)

விழுந்தான்புவனமண்டலத்தின்மெய்யைமறந்தானிவன்சீவன்
கொழுந்தார்மதியின்கலைசேர்ந்துகுளிர்ந்தபனியாய்நெல்லாகிச்
செழுந்தாணெல்லைத்தேசார்ணதேசமறையோன்சமைத்தருந்த
வெழுந்தாதுவுமாய்ச்சுக்கிரன்வந்திவன்பாரியைபான்மகவானான்.

அன்னான்முனிவர்தொடர்ச்சியினாலரியதவமோர்மனுக்காலம்[மான்
பொன்னார்வரைசூழ்வனத்திடையேபுரிந்தானவனங்கொருபெடை
றன்னாலொருசேய்நரவடிவாய்ச்சாதனானானவனன்பாற்
பின்னாநின்றபேதைமையாற்பேராவுண்மைநிலைபெயர்ந்தான். (கங)

மற்றுமளவில்பிறவிகளின்மருள்வாதனையாற்பிறந்திறந்து
முற்றுமுயர்கங்கையின்றடத்தோர்முனிவன்மகவாய்முனியானான்
பற்றுமுயிர்போய்முதற்காயம்பவனனாலும்வெயிலாலும்
பெற்றுவளர்த்தபிருகுவின்பாற்பெரிதுமுணங்கியென்பாகி. (கச)



பிருகுமுனிவன்பெருமையினாற்பிணங்குமிருகம்புள்ளினங்க
ளருகுமணுகலறமண்மேலங்கமுழுதுங்கெடாதிருப்பத்
திருகுமனந்தீர்சமாதியிலேதெய்வவருடமாயிரம்போ
யிருகண்மலரத்தவமுனிவனிட்டமகவையெதிர்நோக்கி. (கரு)

அறத்தின்வடிவாயஞ்சலிசெய்தருகேயிருக்குமகற்காணான்
வறக்குமுடலின்கங்காளம்வறுமைவடிவாயெழுந்ததென
நிறக்குநிர்ப்பாக்கியம்வடிவாய்நிற்பதென்னவெதிர்கிடப்பத்
துறக்குமனத்தான்பிருகுவெனுந்துய்யதவத்தோன்றனிநோக்கி. ()

மென்றோல்போர்த்தவெலும்புமனைவெளிகடோறுந்தித்திரிப்புள்
சென்றோடுவதுமுதரகுகைசெறியுமண்டூகத்திரள்க
ளொன்றோடொன்றுபாய்வதுங்கண்டுற்றவாறென்னெனவறிவா
னின்றோர்கிலன்றுஞ்சினனென்றேநேயமைந்தன்றனைநினைந்தான்.

அடைத்தகாலத்தன்றியெனதரியமகவையகாலத்திற்
றுடைத்தகாலன்றனைக்கணத்திற்றுடைப்பனென்னாவிடைப்பாகன்
விடைத்தவாபோற்பிருகுமுனிவெகுண்டுசாபமிடநினைப்பக்
கிடைத்தகாலனடுநடுங்கிக்கிளைம்பூதவடிவெடுத்து. (கஅ)

வதனமாறுங்கரமாறும்வாளுங்கயிறுங்குண்டலமும்
பதனகவசத்துடன்மேவிப்பரந்தசேனைபுடைசூழ
விதனமுனியைவந்தணுகிவேண்டிக்கொள்வான்மெத்தென்ன
நிதனமூலமெனுங்காலனிமலமுனிவற்கிவையுரைத்தான். (ககூ)

ஈன்றநியதிபாலிக்குமியாங்கணின்னையீறில்லா
வான்றதவத்தாற்றுதித்திடுதுமல்லாதில்லையாதலினாற்
சான்றதவத்தைவெங்கோபத்தழலாற்சுடுதறகவன்றாற்
றோன்றுமூழிக்கனலுமெமைச்சுடாதுநின்சொற்சுடவற்றோ. (உ0)

குடும்பவலையிற்பிணிப்புண்டகோடாகோடியுருத்திரு
நெடும்பங்கயக்கண்மாதவருநிலையாமென்றாற்றொலைவுற்றா
ரிடும்பைபுலகிலெனைக்கடந்தாரில்லையாருமெனக்கிளையாம்
படும்பல்லுயிருமியாம்படுத்தல்பகுதியாயபழநியதி. (உக)

எமதுவிதியன்றிந்நியதியென்றுமுள்ளபடியாகு
மமலவிழியிற்செய்வோனுமருந்துவோனுமிலவாகும்

விமலமல்லாவிழிக்கிவர்கண் மிகவுமுளவாம்விதிவயத்தாற்
றமதுநினைவாற்பல்லுயிருஞ்சனிக்குங்கற்பமுடிவிற்போம். (உஉ)

கற்பதானமறைதருசிற்கண்ணதெங்கேசிரத்தையதாய்
நிற்பதெங்கேயுயர்வெங்கேநெடியோர்விளங்குமிந்நெறிக்கே
யற்பரானகுருடரொனவயர்வதென்னத்தம்வினையா
லுற்பவிக்குஞ்செயல்பாராதுருத்துச்சபிக்கவுரியாயோ. (உங)

மனமேபுருடன்மற்றில்லைமனத்தின்செயலேசெயலாகுங்
கனசீவனத்தாற்சீவனுமாங்கவர்நிச்சயத்தாற்புந்தியுமாஞ்
சினவுமபிமானத்தாலேதீயவகங்காரமுமாகுந்
தனதுவிகற்பசாலத்தாற்றுனேசகமாந்தனிமனமே. (உச)

ஆதலாலுன்புதல்வனுநீயலைவில்சமாதியமர்போதிற்
காதலாலேசுக்கிரனுங்காயந்தன்னையிவணிருத்தி
மீதில்விச்சுவாசியெனும்விண்ணுட்டணங்கைமேவியபின்
னேதுபுவியிற்றேசார்ணவொருவேதியன்பாலுற்பவித்து. (உரு)

வேறு.

கோசலதேசந்தன்னிற்கொற்றவனாகத்தோன்றி
வீசலர்வனத்தினூடேவேடனாயுதித்துக்கங்கை
மாசலமருவுபாரின்மராளமாய்ப்பௌண்டரத்திற்
பேசருநிருபனானன்பெருங்கதிர்குலத்துவந்து. (உசா)

சாலுவநாட்டிற்பானுமந்திரத்தலைவனானன்
மேலுயர்கற்பகாலம்விஞ்சையர்வேந்தனானன்
வாலுணர்வுளதாயங்கோர்மாதவன்மதலையானன்
சேலுகள்சவ்வீரத்திற்சேர்ந்தசாமந்தனானன். (உஎ)

திரிகத்ததேசந்தன்னிற்றேசிகச்சைவனானன்
முருகார்சூழ்வேடரூரின்மூங்கிலாரணியமான
னரிணத்தோர்பிறப்பாய்ச்சீர்ணசாங்கலத்தமரலுற்றான்
விரிவில்சூழ்பனையின்காட்டில்வெஞ்சினப்பாந்தளானன். ()

இவ்வண்ணமநந்தயோனியிழிவுயர்வாகவெய்தி
மைவண்ணமனத்தினாலேவாதனைவயத்தினின்று



மெய்வண்ணக்கங்கைமாட்டோர்மெய்ம்முனிக்குமாரனாகிப்
பொய்வண்ணப்பொறிகளென்னும்புன்பகையறுத்துவென்று.

வரிசடைபலவுங்கட்டிவாசுதேவப்பேர்மேவிப்
புரிதவத்தெண்ணூருண்டுபொருந்தினனினதுமைந்தன்
றிரிதருகனவையொத்தசித்தத்தின்மயக்கந்தன்னைப்
பரிவுறக்காண்டியென்னிற்சிற்கணாற்பார்த்தியென்றான். (௩0)

காலனீதுரைப்பக்கேட்டகலைமுனிஞானக்கண்ணாற்
பாலகன்செய்கையெல்லாம்பார்த்தனன்கணத்தினெல்லை
மேலதாமொளியாற்றோற்றமாத்திரம்விளங்கிநல்ல
சீலமார்புந்தியென்னுந்தெளிந்தகண்ணடியிற்பாய்ந்த. (௩க)

வானதிக்கரையினின்றுமந்தரச்சாரலிற்றன்
மேனியில்வந்துசார்ந்தமெய்ம்முனிவியந்துசால
வூனமில்காலன்றன்னையொன்றலாவேண்டுகோளா
லானதோர்காதலில்லாவருமுனிபகர்வதானன். (௩உ)

முழுதுணர்தருமநீதிமுதல்வனீகாலமூன்றும்
பழுதறத்தெரிதிநீயேபாலராய்ப்பரமஞான
மெழுதலிலினைஞராகுமெம்மனோரொன்றலோடுங்
கெழுதகையுலகைநக்குங்கேடறுநிலைமைக்காலன். (௩௩)

மாதவன்கையைப்பற்றிமந்தரக்கந்தரத்தின்
மீதகன்றமரராற்றைமேவினனிவரிலாங்கே
பேதமாம்வாசுதேவப்பெயரொடுமிருந்தசேயைக்
காதலான்முனிவன்கண்டான்காலனுமிதனைச்செய்தான். ()

இங்குற்றசமாதிநீங்கியிவனெமைக்காண்கவென்று
சங்கற்பஞ்செய்தலோடுஞ்சமாதிவிட்டிவனைநோக்கி
வெங்குற்றமில்லாமைந்தன்பணிதலும்விரும்பியாருந்
துங்கத்தோரொருகன்மீதுமூவருஞ்சூழ்ந்திருந்தார். (௩௫)

வாசுதேவப்பேர்மைந்தன்மற்றிவர்தம்மைநோக்கித்
தேசுடையுமதுநல்லதெரிசனப்பேற்றினாலே
மாசறுதவத்தாலுலான்மகங்களாற்றனத்தாற்போகா
வேசறுமோகந்தீர்ந்தேனிதிலமுதின்பஞ்செய்யா. (௩சா)

என்றுரைசெய்தோன்றன்னையியன்முனியினிதுநோக்கி
நன்றுயர்ஞானஞ்சேர்கநவைதருமடமைதீர்க
வுன்றனக்கென்றலோடுமூனக்கண்ணிரண்டுமூடிப்
பொன்றலின்ஞானக்கண்ணாற்புராதனமெல்லாங்கண்டான்.

நீத்தனபிறவியெல்லாநிமிடத்தின்ஞானக்கண்ணாற்
பார்த்தபின்வியந்துசொல்வான்பகுதியாமிகுதிமோகங்
கோத்தஞாலங்களாகிக்கோரவென்மனத்தினூடே
யாத்தமாய்வளராநின்றதகோவகோவிதொன்றென்னே. ()

கற்பனவனைத்துங்கற்றேன்காண்பனவனைத்துங்கண்டே
னுற்பவத்தநேககாலமுழன்றவெந்துயருந்தீர்ந்தே
னற்பயனறிவைப்பெற்றேனுமினியையவேகி
யெற்படர்மந்தரத்திலிருக்கின்றவுடலைக்காண்பேம். (௫௯)

கருமமேயேதுவாகுங்காயகங்காளந்தன்னை
யிருகணானோக்கியின்பமெய்துவானினைந்தேனியாது
மொருசெயல்வேட்கையில்லையொழிப்புறுசெயலுமில்லை
வருதிராலென்னவன்னோர்மந்தரங்கணத்திற்சேர்ந்தார். (௬௦)

முந்துறுசகத்தினெல்லைதெளிதருமூவர்தாமும்
வந்துழிமுன்னைச்சென்மமருவியவுடலைமைந்த
னந்தமின்மகிழ்வானோக்கியருந்தவப்பிதாவைநோக்கி
யிந்தவன்கங்காளங்கொலின்றுநீவளர்த்ததென்றான். (௬௧)

பின்னருமுறைப்பானையபெறலருஞ்சுகங்களாலே
முன்னநீவளர்த்தகாயமொய்துயரனைத்துமாறி
யின்னல்கூர்காதலையமிதாகிதமெல்லாமின்றி
மன்னியசுகமதாகிமனமிறந்திருந்ததன்றே. (௬௨)

மனமிலாநிலையினன்றிமன்னுயிர்க்கின்பமுண்டோ
கனமுறுசுகசம்போகக்கடலிலேதிளைக்கலாகு
மனகபோறிவுசாந்தமறிவுளோர்தாபநீங்கித்
தனதுயர்நிலையாமிந்தத்தனியுடல்வாழ்ந்ததன்றே. (௬௩)

அருந்தவப்பயனாலிந்தவற்புதங்கண்டேனென்ன
விருந்தவக்காலனோக்கியிவ்வுரையிகந்துமாற்றிப்



பொருந்தியவுடலின்மன்னர்புரிபுகுமதுபோற்புக்குத்
திருந்தியவசுரர்க்கெல்லாந்தேசிகச்செய்கைசெய்வாய். (௬௪)

என்றுசுக்கிரனையேவியிவரிருவரையும்வாழ்த்தி
நின்றுழிமறைந்தான்காலனீத்தவர்மறுகிநின்றார்
பின்றையவாசுதேவப்பெருறுகருத்தைநீக்கி
வன்றகைவெள்ளிமுன்னமருவியவுடலிற்புக்கான். (௬௫)

வினையதுவயத்தினாலேவெள்ளிசேருடலந்தன்னைத்
தனைநிகர்பிருகுவேதமந்திரசலத்தாலாட்ட
நனைதலுநாடியெல்லாநயம்பெறப்பிராணன்றாங்கி
யனையவனெழுந்துதாதையடிபணிந்தருகுநின்றான். (௬௬)

பிருகுவுமைந்தன்றானும்பிறங்குமந்தரத்திற்கானிற்
றிருகியசித்தமென்னுந்தீப்பகைதீரமாற்றி
வருதிரையிலாதநீர்போன்மாசறுநிலையில்வாழ்ந்தார்
கருணைமாமுகிலேயென்றுகற்றுணர்வசிட்டன்சொன்னான். ()

சுக்கிரன்கதை முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௫௬௫.

## தாமவியாளகடர்கதை.

மீண்டுரைசெய்வான்முற்றும்விசாரத்தோர்தொழிறீர்நெஞ்சோர்
நீண்டதோர்மனனம்விட்டோர்நிகழ்சுகவறிவையுள்ளோர்
பூண்டுளகாட்சிதன்னிற்போவபோய்க்கொள்வகொண்டோர்
காண்டகுதன்னைக்கண்டோர்காணாதோர்தனைக்காணாதோர். (௧)

சீவனாயிருந்துகாணுஞ்சிற்பரதத்துவத்தே
மேவியநனவையுற்றோர்வெம்பவமோகமார்க்கத்
தோவவில்சுழுத்தியுற்றோரோர்முதிர்நிராசையாலே
பாவனைநலனிற்றீங்கிற்பயிலும்வாதனையைமாய்த்தோர். (௨)

வாதனைவலையைச்செற்றுமனப்பந்தமாற்றிவிட்டாற்
காதல்செய்தேற்றின்வித்தின்கலங்குநீர்தெளிவதென்ன

மேதகுவிஞ்ஞானத்தான்மெய்மையாஞ்சுபாவந்தானே
யேதமற்ருெளிருமுன்னமியம்பியவியல்பினேர்க்கே. (௩)

சங்கஞ்செய்மயல்போய்த்தொந்தந்தவிர்ந்தொன்றைச்சார்வதின்
சிங்கிசெய்கூட்டினின்றுஞ்சேணுறச்செல்லும்புட்போற் [றிச்
றுங்கமோகத்தினின்றுந்தூய்மனம்வெளியிற்போந்து
பங்கமாமையந்திரப்பற்றெனுமனைத்துந்தீரும். (௪)

ஆன்றவம்மனம்பூர்ணத்தையடைந்துபூரணவெண்டிங்கள்
போன்றுறவிளங்குமிந்தநிலையிலேபொலிவுற்ருேர்கண்
மூன்றுமூர்த்திகளாந்தேவமுதல்வர்க்குங்கருணைசெய்வ
ரூன்றியவிசாரத்தாலேயுயர்பொருளெய்தவேண்டும். (௫)

உலகெதுநாமாரென்னவுற்றுநின்றுணருமட்டுங்
கலகமார்பிறவிமோகங்கங்குல்போன்மூடிநிற்கு
மலகறுமூலகுந்தாமுமழிவில்சிற்சோதியென்றே
சலனமில்கண்ணுற்கண்டோர்தத்துவநிலைமைகண்டோர். (௬)

அகிலசத்தியுமாயொன்ருயநந்தமாமறிவுதானே
சகலபாவனைக்குமுள்ளாமெனக்கண்டோர்தம்மைக்கண்டோர்
பகர்வுறுநானுமில்லைபிறிதில்லைபரமேயுண்டென்
றிகமுறவுள்ளதில்லதிடையுறக்கண்டோர்கண்டோர். (௭)

முயல்வறத்தாமேதோன்றுமொய்திசைப்பொருள்கடம்மின்
மயலறச்செல்லுங்கண்போன்மாசறுநீரார்புந்தி
செயல்களிற்செல்லுமன்றேதெளிந்துபல்போகந்துய்த்தாற்
றுயர்செயாதறிந்துசேர்ந்தாற்சோரருந்தோழராவார். (௮)

நெறியிடைவந்தோர்கூட்டநெறிசெல்வோர்காணுநேர்போற்
செறிதருபோகமெல்லாஞ்சேதனர்காண்பரன்றே
யறிவினுன்மனதைவென்ருேரற்பமேபெரிதாய்க்காண்பர்
பிறகதுதுயராமென்றேபெரியனபோகம்வேண்டார். (௯)

நலங்கியசிறைதீர்மன்னனகர்மட்டுமகிழ்வுகூரு
மலங்கல்வேல்வெற்றிவேந்தனவனியுஞ்சிறிதென்றெண்ணுங்
கலங்குறுமனதைவெல்வோர்கைகையாற்கால்கள்காலா
விலங்குபற்பல்லாலங்கமியாவுமிப்படிமுன்சேர்க்க. (௧௦)



பகைமனவெற்றியல்லாற்பவக்கடல்வங்கமில்லை
வகைபடுமுலகிற்செல்வர்வரிசையோர்மறுவிலாதோர்
மிகையுயர்புருடர்கீர்த்திமிக்கவரொன்போருள்ளக்
குகையிடைத்தொழில்கணஞ்சார்கொடுமனப்பாம்பைக்கொன்ருர்

மனமெனும்வினையைவென்ருேர்மலரடிமுடிமேற்கொள்வா
மினகரகங்களென்னுமிராச்சியத்திருந்துவாழ்ந்த
முனமுறுபாவமென்னுமும்மதக்களிற்றினுலுங்
கனமயற்படைகளாலுங்கரணமாம்பகையைவெல்வாய். (௧௨)

துனிமனச்செருக்குமாய்த்துத்தொடர்பொறிப்பகையைவெல்விற்
பனிபடுபதுமக்கான்போற்படர்ந்தவாதனைகண்மாளுந்
தனியறிவொன்றேயென்றுசாதித்திம்மனம்வென்மட்டுங்
கனியிருள்செறியும்பேய்போற்கருத்தில்வாதனைவந்தெய்தும். (௧௩)

மந்திரியெனலாமுண்மைமருவுறும்விசாரத்தாலே
யிந்திரியங்களென்னுமிடர்ப்பகையறுத்தலாலே
தந்திரியெனலாமிட்டஞ்சமைத்தலாலேவலாளா
னொந்திரிகிலாதவுள்ளநோக்கியவிவேகத்தோர்க்கே. (௧௪)

ஆலிக்குமின்பத்தாலேயன்புறுமனைவியாகும்
பாலிக்குமியல்பினுலேபாவனதந்தையாகுஞ்
சீலிக்குமுறுதியாலேதேடருநட்புமாகுந்
தாலிக்கும்வினைகளில்லாத்தூய்மனம்விவேகத்தோர்க்கே. (௧௫)

நல்லனநூல்களாலேநல்லனநெறியைநோக்கி
நல்லனதியானஞ்செய்துநல்லனுபவத்தைநண்ணி
நல்லனசித்திநல்குநல்லதாய்த்தன்னைமாய்க்கு
நல்லதோர்தாதையாகிநல்லவர்க்குள்ளந்தானே. (௧௬)

துணிவுறுதிடமாய்ச்சாலத்துகளறநோக்கியாதும்
பிணியறக்கண்டுஞானப்பேருணர்வுணர்த்தப்பட்டாற்
பணிவுறுமிதயந்தன்னிற்பழுதிறன்குணத்தினுலே
மணியெனவிளங்காநிற்குமாசறுமுள்ளந்தானே. (௧௭)

மனமணிபேதச்சேற்றின்மறைந்தொருவருக்குந்தோன்ருக்
கனமுறுவிவேகநீராற்கழுவினுற்சித்திகாட்டும்

வினவுறுவிவேகவன்பான்மெய்ம்மையைமதியாற்கண்டு
சினமுறுபொறியைவென்றுதீர்வரும்பிறவிதீர்வாய். (கஅ)

இத்திறத்திவனுனென்றேயிறுகியவறுதிவீணு
மத்திறம்புந்தியாலேயழுத்தமாயகற்றிமற்ற
மெய்த்திறம்பற்றிநீயாமதினின்றுவிழைந்தசெய்வாய்
பொய்த்திறமனத்திஞேடேபுசித்தவைபந்தமாகா. (கசூ)

வேறு.

தாமஞேடுவியாளகடாசுரர்சாருநீதியைநீயணுகாதொழி
வீமபாசதிடாசுரர்நீதியைமேவிவேதனைதீர்கெனவோதலு
நாமமேபகர்தானவராரொனுஞானவீரன்வினுவிடமாமுனி
யாமதோதிடவாதரமாகியதேதுநீயதின்மேவெனவோதுவான் (உ0)

சஞ்சரித்துயர்பாதலமேவியசம்பரப்பெயராஞெருதானவன்
வஞ்சமுற்றியமாயையில்வாழ்பவன்வன்படைக்கடலாலமரோசனை
யெஞ்சலித்திடவானவர்தாமுமேயிவன்சுழுத்தியிலாகியபோதினும்
விஞ்சவம்பரமேவியபோதினும்வெம்பியெற்றினர்தானவர்மாளவே

ஆயவன்பையறிந்துயர்சம்பரனுகுவன்றுருமன்றிறன்முண்டிக,
னேயவிங்கிவர்தம்படைமுன்செலவேவினன்பெரிதங்கெவரும்பட,
மேயவண்டரடர்ந்தனரொன்றலும்வேகமிஞ்சியசம்பரன்வந்திட,மா
யைவிஞ்சை நிறைந்தவனென்றெதிர் மாகர்நின்றிடவஞ்சியொதுங்
கினர். (உஉ)

மேருகந்தரமும்பரடைந்தனர்வீதியெங்குமரம்பையர்நின்றழ,யா
ருமின்றியவிந்திரன்றன்பதியீசன்வென்றபுரங்களெனும்படி, நேரு
மங்கிசொரிந்துதிரும்பினனீடகன்றுளவந்தணர்பின்றையு, மூருள்
வந்தன ரொன்றுபெரும்படையோய்விலன்பெரிதுந்தினன் விஞ்சை
யால். (உ௩)

ஆவதாகியதானவர்பற்றறவாதிதேவர்கண்மோதினர்மற்றது
தாபமாயசுரோசன்விதித்துளதாமஞேடுவியாளகடப்பெயர்
மூவர்மாயையினுல்வரலுற்றவர்மூரிமேருவுலாவுவதொப்பவர்
பாவனுவசவாதனையற்றவர்பாசமாமபிமானநினைப்பிலர். (உச)

சாதல்வாழ்தல்களிப்புறல்சோர்வுறற்றுமவாகைகொள்வெற்றிக
டோல்விகள், போதன்மீடலனைத்தையுநாடலர்போர்செய்வோ



ரைமுருக்குவர்கேவல, மாதலாலிவர்பற்றலர்சேனையை யாசுகங்
கொடழிப்பரழிப்புறுர், பாதலாசுரன்வெற்பினர்வேலையர்பாருளா
ரிவர்பிற்செலவேவினுன். (உ௫)

தானவாதிபன்விட்டநெடும்படைதாள்களோடுகிரித்திரள்வந்தெ
ன, மீனவேலைபரப்பில்விரிந்தெனமேவினுர்கள்சிருட்டிமுடிந்தென,
வானநாடருமப்படிவந்தனர்வாயுவோடுநெருப்புமலைந்தென, வான
சேனைகண்முட்டியுடன்றனவாதலான்மறுகற்பம்விளைந்ததே. (உசூ)

ஆயுதங்களெரிந்துநெருங்கிடவாகமெங்கும்விழுந்தனவெற்பென,
மாயுமங்கமுமிழ்குருதிக்கடன்மாதிரங்கடதும்பியலைந்தன, காயும்
வஞ்சரடர்ந்துமுடுக்கினர்காதுமும்பர்தளர்ந்தோடவுற்றனர், சாயு
மண்டர்கள்பின்றொடர்வுற்றனர்தாமனும்பிறருந்திசைமுற்றுமே. ()

உம்பரோடிமறைந்தமைகண்டிலருந்துமூவருநின்றுதிரும்பினர்,
சம்பராசுரன்முன்புறவந்தனர்சங்கவானவரொன்செயலென்றுகோ,
டம்புயாசனன்முன்புநடந்தனரன்பிஞேடுபணிந்துபுகன்றனர்,வெ
ம்புதீநிகர்சம்பரன்வஞ்சமும்வெங்கண்மூவர்துரந்துதொடர்ந்ததும்

வேறு.

கேட்டநான்முகனஞ்சலென்றிவ்வுரைகிளத்தா
னீட்டமாகியவருடமோராயிரமிறந்தால்
வாட்டுசம்பரன்போரிலேயசுரராமகவான்
வீட்டுமவ்வளவுஞ்செயத்தக்கதுவிதிப்பாம். (உசூ)

என்றதாமனும்வியாளனுங்கடனுமென்பவரைச்
சென்றழைத்தமர்செய்வதுதிரும்புவதாகத்
தொன்றுதொட்டுநேர்தொந்திக்கின்வாதனைதொடர்ந்து
நின்றகண்ணடிநிழலெனமனத்திலேநிற்கும். (௩0)

நிலைபெறும்படிநானெனும்வாதனைநின்றுல்
வலைபுகுந்தபுள்ளாமெனமூவருமடிவர்
கொலைசெயற்கெளிதாசையேயுயிர்க்கெலாங்கூற்றுய்த்
தொலைவிறுன்பமாநிராசையேதுன்பமிலின்பம். (௩க)

வாதனைப்பாசத்தாலேமன்னுயிரொல்லாங்கட்டுண்
டேதமாமந்தப்பாசமிறுகுமேலிடணச்செய்யும்

வேதனையிலதாந்திரகழுவுமேல்வேட்கையாலே
தீதிலோரனேகங்கற்ருேர்திரளொன்னினுங்கட்டுண்பார். (௩௨)

விலங்குறுசிங்கம்போலவேட்கையாலுயர்ந்தோர்தாழ்வர்
கலங்கன்மினென்றுவேதாகண்டுழிமறைந்தபின்னர்
புலன்கொளவனைத்துங்கேட்டபுங்கவர்பொன்னாட்டெய்தி
நிலங்கிழிந்தண்டம்பீறநெடியதுந்துமியோடார்த்தார். (௩௩)

ஆர்த்தனகேட்டவந்தவசுரர்பாதலத்தினின்றும்
வேர்த்தனர்பொங்கிவந்துவெம்படையமரர்மீது
தூர்த்தனர்காலம்போக்குஞ்சுரர்பொருதுடைந்துபோகிப்
பேர்த்தும்வந்தமர்செய்தோடிப்பின்னும்வந்ததனைச்செய்தார்

இவ்வகைபலவுபாயமிறந்தநீள்காலஞ்செய்ய
வைவருதிடமதானஞானெனும்பழக்கத்தாலே
மெய்வரஞானென்றுன்னும்வேட்கையைவிருப்பமுற்று
ரவ்வகையாலேயுள்ளமகப்பட்டுகின்றதன்றே. (௩௫)

பயம்வந்துபிடித்துக்கொள்ளப்படர்தருமோகங்கட்ட
வயர்வுறுமாயாபாசத்தழுந்தியென்செய்துமென்னு
துயருறவிளைத்துக்காயந்துஞ்சுறு திருக்குமாறு
மயலுறுதனத்தாலின்பம்வருவதுமெவ்வாறென்றூர். (௩௬)

சந்ததமிவ்வாறெண்ணத்தளைப்புண்டமனத்தராகி
யந்தமிதீரமின்றியமரொன்றுலறவுமஞ்சிப்
புந்திநொந்திறப்போமென்றும்புகலிடமெமக்கேதென்றுஞ்
சிந்தனையாலேகெட்டசித்தத்தாற்றியங்கிச்சோர்ந்தார். (௩௭)

வலியெலாமிழந்துமுன்னேவந்தொருபெயர்நின்றூலு
நலிவுறமாட்டாராகிநடுங்கினர்விறகுமாண்டாற்
பலிதருமவியையங்கிபருகிடவல்லதுண்டோ
வொலித்ரவுரைத்தெனஞ்சியோடினர்பொன்றிப்போனூர். ()

தாமனும்வியாளன்றூனுங்கடனுமுன்சரித்தமார்க்கந்
தோமறுமுணர்வுண்டாகச்சொல்லினம்விநோதத்தாலே
மாமனமவிவேகத்தைவரம்பறப்பழகிவிட்டாற்
பாமரப்பிறவித்துன்பம்பற்றறுதிந்தவண்ணம். (௩௯)



இனையவர்நியாயநீயிங்கெய்தலையென்றலோடு
மனையவர்பரத்தினின்றுமுதித்தவாறறியவேண்டு
முனைவகூறென்றிராமன்மொழிதலுமுனிவன்சொல்வான்
றுனையுறுதாமன்முன்னோர்தோற்றமாத்திரமெய்யானோர். ()

எதிருறுதோற்றமெய்யாயிவர்கள்போலிங்குயாமும்
விதியதாய்ப்புறத்திலொன்றுமேவலம்வீரனேநின்
மதியினூனெனலும்பொய்யேமதியினீயெனலும்பொய்யே
யதிர்குரற்றூமன்முன்னுமவர்களுண்டெனலும்பொய்யே. ()

பரத்தினதொளியேமெய்யாய்ப்பாரித்தோர்சீவசத்தி
திரத்துறுசம்பரன்றன்றியானத்தாலசைந்துமூன்று
யுரத்தவுல்லாசமேவிற்றுரைத்தவித்திறத்தினாலே
வரத்துறுமவருநாமும்வாய்மையேயெங்குமில்லை. (௪௨)

அறிவதாயறிவேமெய்யாயமலமாயனைத்தாயாறிப்
பிறிவுறுவரவுபோக்கில்பிரமமேயுளதாமந்தச்
செறிபொருட்சத்திதோற்றமாத்திரஞ்சகமாய்நிற்கும்[ழ்வாய்
பொறிகள்பல்காட்சிபொய்யேபொருண்மெய்யேயென்றுவா

தாமவியாளகடர்கதை முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௯0௯.

# வீமபாசதிடர்கதை.

இதுநமக்கிதுநமக்கென்றிரங்குறுபொல்லாவாழ்வா
லுதவியோர்சாம்பரோனுமுறப்பெருதுதாரமிக்குச்
சுதமுறுமுலகமெல்லாந்துரும்புபோற்காண்போர்தம்பால்
விதனங்களனைத்தும்வாராமிருகங்களுலர்புற்றீண்டா. (௧)

உளத்துறச்சமத்காரஞ்சேருண்மையையுணர்வோர்தம்மை
யளக்கரும்பிரமாண்டம்போலட்டதிக்காளர்காப்பர்
கிளப்பருங்குணத்திலன்பாய்க்கேள்வியில்விருப்பாயுண்மை
விளக்குறுவருத்தமிக்கோர்நரர்நின்றோர்மிருகந்தானே. (௨)

செயலருந்துயருற்றாலுஞ்செயத்தகாச்செயல்களாகா
வியல்பலாவழியாலுண்ணவிராகுவையமுதங்கொன்ற
தயலெலாம்வசமாயாபத்தனைத்தும்போயென்றுநன்று
முயலுநற்குணங்களாலேமொய்புகழெய்தினோர்க்கே. (௩)

ஒழிவறுமுயற்சிதன்னாலாகத்தாலுயர்ந்தநூலா
விழிவறவியற்றுவோர்கட்கெப்பயனெளிதினெய்தா
வழிபடுநன்னூலாளர்வருபயன்கருத்தாச்செய்யி
லழிவறமுற்றுமுற்றியளவறுபயனைநல்கும். (௪)

வருத்தமற்றச்சஞ்சோகமதமின்றிநன்னூற்பின்போ
யொருத்தராலேவலின்றியுலாவுகநசிக்கவேண்டா
வருத்தங்களநர்த்தமாகுமளவில்போகங்கணோயாம்
பெருத்தவாபத்தாஞ்செல்வம்பேரின்பநிராசைதானே. (௫)

இடும்பைகூர்சங்கமின்றியியற்கையாசாரமெய்திக்
குடும்பமாந்துயர்சிற்றின்பங்குறித்திடாப்பெருமையோர்க்கு
நெடும்புகழ்வாணாள்செல்வநிறைகுணமனைத்துமுண்டாய்ப்
படும்பலன்வசந்தகாலக்கொடிகள்போற்பலிக்குமன்றே. (௬)

தவங்களாற்றெய்வநீராற்சாத்திரங்களினாற்போகாப்
பவங்களையுயர்ந்தோர்பாதம்பணிந்துபற்றறுக்கவேண்டு
மவங்களாங்காமங்கோபமறவுந்தேய்ந்தியற்கையான
[illegible]வங்களினடந்துநன்னூற்றுறைநின்றோருயர்ந்தமேலோர். ()

நானெனும்பொருள்காணாதோர்ஞானவாகாயங்காணார்
நானெனும்பொருளைக்கண்டோர்ஞானவாகாயமாவார்
நானெனுமகங்காரக்கார்ஞானவிண்மதியைமூடி
னானெனுப்பரமவாம்பனன்மலர்விரியாதன்றே. (௮)

மடிவறுபிறவியென்னுமரத்திரளெனக்கிதென்னு
நெடியபல்பணைகணீட்டிநிரயமாங்காய்கள்காய்க்கு
முடிவறுதுயராங்காரமுளையாகவிளையாநிற்கு
மிடியிலாஞானத்தீயால்வேரொடும்வெந்துபோமே. (௯)

என்றலுமிவ்வாங்காரமெவ்வுருவுடைத்தெவ்வாறு
வென்றிடலாகுந்தேகமேவியுமேவாதாயு



நின்றொருகாலம்வென்றானேருறுபயனேதென்னா
நன்றுணர்வள்ளல்கேட்பஞானமார்வசிட்டன்சொல்வான். ()

மூவகையுலகிலிந்தவகங்காரமும்மையென்று
மேவருமிரண்டுநன்றாமிகவுமொன்றீனமாகும்
யாவதும்பரமுநாமேயீறிலமெமையலாதோர்
பாவனையிலதென்றோரும்போதமேபரமாங்காரம். (௧௧)

செங்நெல்வாலினுஞ்சற்றாகிச்செகங்களுக்கயலாயென்று
மன்னுதுமெனக்கொள்போதமற்றையாங்காரமாகு
மிங்நிலையிரண்டுஞ்சீவன்முத்தர்பாலிருந்தீடேற்றித்
துன்னருமுத்திநல்குஞ்சுழல்வுறுபந்தநல்கா. (௧௨)

கரசரணாதிமட்டாநானிவனென்றுகாணுந்
திரமதுதானேமூன்றாமகங்கரஞ்செகத்தோர்க்கெல்லா
முரியதாமிகவும்பொல்லாதுற்பவமென்னுநச்சு
மரமெழுமூலமாகும்வருந்தியுமொருக்கவேண்டும். (௧௩)

கொடிதிதுகொடிதுசாலக்கொடிதிதன்கொடுமையாலே
முடிவறுமுயிர்களெல்லாமோகமுற்றறிவுகெட்டார்
கடிதிலவ்விரண்டினாலுங்கடிந்திதெவ்வளவுவிட்டாய்
படிவுறவ்வளவேயெய்தும்பரமமாந்தற்பதார்த்தம். (௧௪)

ஏற்றமாமகங்காரங்களிரண்டினாற்பரமமெய்தி
யூற்றமாமவற்றைநீங்கியோரகங்கரமுமின்றி
யாற்றலானிற்றியென்னிலறவுயர்பதமதாகுந்
தோற்றுடனானெனுமைசுருதிகள்சொல்லுமுத்தி. (௧௫)

இதனியல்புணாக்கக்கேண்முன்னிசைத்துளதாமன்முன்னோ
ரதமுறமடிந்தபின்னரனையசம்பரன்வேகித்து
மதமுறுமிமையோர்சேனைவதஞ்செய்வானுபாயந்தன்னை
விதமுறவினையவாறுநினைந்தனன்விஞ்சைவல்லான். (௧௬)

தானவனொனமுன்னுஞ்செய்தாமனைமுதலாமூவர்
ஞானமில்லாமையாலேநானெனதென்றுபொய்யாய்

வானவர்போரின்மாண்டார்மற்றினிஞானநன்னூற்
போனவர்விவேகத்தோராய்ப்புணர்ந்தமாயத்தாற்செய்வேன். ()

மெய்யுணர்வுறுதலாலேவெறும்பொய்யாமகங்காரத்தி
னையுறூர்விண்ணோர்சேனைநலிவுறவெல்லவொன்னு
மையுறுமனத்தினெண்ணிமாயையாலவரைச்செய்தான்
மொய்யுறுவேலைதந்தமொக்குள்போன்மூவர்வந்தார். (கஅ)

அனைத்தையுமறிந்தோர்தம்மையறிவெனவறிவாற்கண்டோர்
வினைத்தொடரிலாதோரொன்றின்விருப்பமும்வெறுப்புமில்லோர்
நினைத்துளநிகழ்காலத்திலெய்தியநிலையினிற்போர்
தினைத்துணையெனினுமையமிலாதவர்தெளிவுசான்றோர். (கக)

பேரினால்வீமன்பாசன்றிடனெனப்பிரிக்கப்பட்டோர்
சீரினாலுலகையெல்லாந்திரணமாய்த்தேருஞ்சுத்தர்
போரிலேபோமினென்றுசம்பரன்புகலப்போகி
நேரிலாவமரரோடுநெடுஞ்சமர்புரியலுற்றார். (உ0)

எண்ணிலாவருடம்வெம்போரியற்றினரிவர்கணெஞ்சிற்
றுண்ணெனவெனதியானாந்தோற்றரவுதித்தபோது
நுண்ணறிவாலேயாமாறொன்றுறநோக்கலோடும்
புண்ணியமிலாதோர்வாழ்வுபோலதுபொய்யாய்ப்போகும். (உக)

பன்மையாம்விசாரத்தாலேபடரகங்காரமற்றோர்
சன்மமேமரணமேயென்றஞ்சுறுசலிப்பிலாதோர்
நின்மலவொளிதின்வந்தபொருள்கொள்வோர்நிகழ்ந்தவெல்லாந்
தொன்மையாநவமாங்கண்ணாற்றுகளறச்சமமாய்க்காண்போர். ()

ஆதலால்வீரரானவவர்களாலமரர்சேனை
காதலாற்புசித்துமாய்க்குங்காமுகர்செல்வம்போலப்
போதலேபுரிந்துதிக்கிற்போயொளித்துலகமுண்ட
மாதவாசரணமென்றேமாயனைச்சேர்ந்ததன்றே. (உங)

அடைக்கலம்புகுந்தவானோர்க்கஞ்சலென்றபயநல்கி
விடைத்துவந்தமரின்மோதும்விண்டுவோடரும்போர்செய்து



படைக்கலநேமியேவப்பாய்கனறீய்க்கத்தீய்ந்து
தொடைத்துழாய்மார்பன்வாழுந்தூயவைகுந்தம்புக்கார். (உச)

மற்றினியிந்தவாற்றால்வாதனையாலேபந்தம்
பற்றுறுமதனைநீங்கிற்பந்தம்போம்விவேகத்தாலே
யுற்றறிவுண்மைசேரிலுளத்தில்வாதனைபோம்போனா
லற்றமில்சித்தநெய்தீர்தீபம்போலாகுமன்றே. (உரு)

வீமபாசதிடர்கதைமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-கூஙக.

# தாசூரன்கதை.

ஒழியாததுயர்மாயையெனுமாபத்தையொழிக்கமனநாசமோருபாயமாகு, மிழியாதமெய்ஞ்ஞானப்பொருளையெல்லாமியம்பக்கேட்டயராமலிதயங்கொள்வாய், பழியானபோகத்தினிச்சைதானேபந்தமாமதுவிடலேபரமமாகும், வழியானபன்னூலாற்பயன்கொலென்னவருந்தாமலிவ்வழியேவருதல்வேண்டும். (க)

இன்பமிதாமின்பமிதாமென்றவெல்லாமெரியெனநஞ்செனநினைகவேற்றத்தாழ்வாய்த், துன்புறுபோகம்பலகாற்றேர்ந்துநெஞ்சிற்றோயாமலெளிதருந்திற்சுகமேயாகும், வன்புபயின்மனத்தோற்றநாசமாகுமனத்தினதுநாசமேமகத்தாந்தோற்றம், நன்பரமஞானிகணெஞ்சிறந்துபோகுநடைவிலங்காமறிவிலர்க்குநவைகூர்நெஞ்சம்

ஆனந்தநிராநந்தமிரண்டுமில்லையசைவுமசைவின்மையுமாமவையுமில்லை,யீனந்தீர்சத்தசத்தன்றிவற்றுக்கெல்லாமிடையல்லஞானிமனமென்றலோடுந், தானந்தமிலாவறிவாயுலகின்மேலாந்தத்துவத்திலுலகிருக்குந்தன்மைதன்னை, ஞானந்தான்வளர்பொருட்டாயுரைப்பாயென்றுநாதனியம்பிடவசிட்டனவில்வதானான். (ங)

வேறிலாதெவ்விடத்துமேவிநின்றுமேவாமனுண்மையினால்வேறாம்விண்போற், கூறிலாச்சிற்பாவமெங்குநின்றுங்கூறுபடுமெவற்றொன்றுங்கூடிப்பற்றாப், பேறிலாச்சங்கற்பமனைத்துமின்றிப்பேரின்றியழி

வின்றிப்பேதமின்றி, யூறிலாவாகாயங்கோடிகூறாவுரித்தவற்றிலொருகூற்றையொப்பநொய்தாம். (௪)

நன்றிதருமுண்மைமுதற்பெயர்கள்பெற்றுஞானிகள்பானிமலமாஞானமாகி, யொன்றுமலவுருவானகுடும்பரூபமொன்றாகித்தனைத்தெரிவித்துணர்வேமெய்யாய்த், தன்றுணைச்சின்மாத்திரத்துக்கயலற்றிந்தச்சத்தாமாத்திரமயமாஞ்சகங்களெல்லாந், துன்றுதிரைமுதலாகப் பிறந்தவெல்லாஞ் சூழ்கடலில்வேறாகாத் தொடர்ச்சிபோலாம். (௫)

துனைதருபல்பிறப்பாகிக்கொடிதாய்ப்பொல்லாச்சுபாவமாந்தனையறியாச்சுமடர்க்கென்றுந், தனையறிந்தோர்க்கொளியுருவாயெல்லாமொன்றாய்த் தானாகவனுபவிக்குந்தன்மையாலே, நினைவொடுசெய்வோன்செய்கைசெயலிம்மூன்றுநிகழ்விக்கும்பாவித்தநினைவுக்கெல்லா, மனையசுவையாய்நிற்கும்பிறவிப்போகமருந்துவோர்க்கப்போகமாகிநிற்கும். (௬)

அத்தமனமுதயமில்லையெழுதனிற்றலயல்போதல்வருதலெனுமனைத்துமில்லை, யித்தலத்திலில்லையிலாதிருக்கவில்லையித்திறமாஞ்சித்துமலமில்லாமெய்யாய்ச், சுத்தமுறுதானேதன்னிடத்தினிற்குஞ்சொன்னநெறியேசகமாய்ச்சொல்பேராலே, மெத்தவெகுரூபமாந்தற்சுபாவம்விரிந்தெங்குஞ்சிற்பெயரால்விளங்கிநிற்கும். (௭)

இன்னசுபாவந்தானேயொளியாய்நிற்குமிருளாகுமொன்றாகுமீறில்கூறாந், தன்னுடையதொழிலாலேதானேபூர்ணதத்துவம்விட்டிவனவனானென்னுந்தன்மை,யுன்னியபாவனையாலேமெள்ளச்சீவனுருவாகிக்கும்பியெனுமூகத்தாலே, பன்னியநாநாத்துவத்திலழுந்திப்பாவாபாவம்பற்றுதல்விடலாம்பதத்தினிற்கும். (௮)

அப்பதத்தினின்றுபுரியட்டகத்தையளவிலசைவாலமைக்குமமைத்திடாதா, மிப்பரிசினின்றலைவேவடிவமானவெழுபிறவிவகைமாலையியற்றுமெங்கு, மொப்பரியதற்பிரமசுபாவத்தாலேயுணாத்ததெலாமெழுமீண்டுமொடுங்கிப்போகு, மெய்ப்படிவமில்லாதவிண்ணிற்கானல்விரிவதுபோன்மனநினைவில்விரிந்துதோன்றும். (௯)

படர்மதத்தாற்றனைப்பிறர்போற்றோன்றுமாபோற்பகுத்தலிலாவந்தச்சிற்பாவந்தானே, யடர்பொய்போற்றோன்றியதாற்சத்தமாதி



யைம்புலனுமேதோன்றாலறியாநின்றாய், தொடர்கின்றவதுவிந்தவான்மாவாகுந்தோற்றமெலாந்தானாகித்துன்னிநின்ற, விடமுடையபரப்பிரமமிதுவேயீதுக்கிப்பிரமப்பெயரியல்பாமிதில்வேறில்லை.

பொருகடலிற்றிரைமுதலாய்ப்பிறந்தவெல்லாம்புனலாகிவிளங்காமற்புழுதியாமோ, வொருபொருளாம்பிரமமாத்திரமேயல்லாலுபயமெனுங்கற்பனைப்பேரொன்றுமில்லை, யெரியிடத்திற்சூடுமாத்திரமேயல்லாவிரண்டுண்டோவவ்வகைபோலென்றுமொன்றாஞ், சரியைகிரியாயோகப் பதத்தின்முற்றிச் சாதனங்கணிறைந்தவர்க்கேசாற்றல்வேண்டும். (௧௧)

இயற்கைகுணஞ்சோதித்துமுன்னேபின்னேயாவையுமாம்பிரமநீயென்னல்வேண்டும், வியப்புறவாசையிலுழல்வார்க்கிவ்வாறோதின்மீளாதநிரகில்வீழ்த்ததாகுந், தியக்குறுபோகத்தாசைதீர்ந்துபுந்திதெளிந்தவனைப்போல்வார்க்கேதிகழத்தோன்றும், மயக்கமறவுணர்த்தவல்லகுருவைக்கிட்டாவருந்தியுந்தன்பிறப்பறுக்குமகனுமாங்கே

விளக்குமிரவியுமலருமுண்டாயுண்டாம்வீசொளியும்பகற்பொழுதும்விளையும்போலத், துளக்கமில்சித்துண்டாகிலுண்டாஞாலந்தோற்றரவுமாத்திரமேசொரூபமாகுங், கிளத்தபரமார்த்தத்தாலில்லையென்னக்கேட்டலுமேபாற்கடல்போற்கெம்பீரத்தா, லளக்கரிதாய்ச்சீதளமாயமலமாகியற்புதமாநின்மொழியென்றண்ணல்சொல்வான். (௧௩)

இம்மொழிகளாலிமைப்போதிருளாமீளவிமைப்போதுவெளியாகுமிவ்வாறாகி, மைம்முகிலாலற்பமாய் வெய்யிற்சீதம்வந்து வந்துபோகின்றமழைநாளொத்தேன்,மெய்ம்முனியேயநந்தமாய்ப்பலவாயொன்றாய்வீயாதாயளக்கரிதாய்விளக்கமெய்திச், செம்முறையாமாத்துமதத்துவத்துக்கிந்தச்செய்தொழில்கள் வந்தவா செப்புகென்றான். (௧௪)

மெய்யானபொருளுடையவாக்கியத்தின்மெய்ப்பொருளாய்முன்னொடுபின்விரோதமின்றிக், கையாருநெல்லியெனக் காட்டவல்லகட்டுரையேயாமிங்குகழறிற்றெல்லா, மெய்யானஞானவிழிவெளியாய்ப்போதம்விரியவுதித்தாலென்சொலென்னும்வித்துக், கையாரவலிதெளிதென்றுள்ளவாறுகலக்கமறநிலைநின்றுகாண்டியன்றே. ()

தன்னுருவமாய்வதற்கேமுயல்வதாகித்தமமொழித்தவவிச்சையி னுற்சகலமான, வின்னலுறுகுற்றமிலாவிச்சையெய்துமெய்கணை கள்கணையாலேநஞ்சைநஞ்சாற், றுன்னுபகைபகையாலேதீதுதீ தாற்றுடைப்பதுபோலவித்தைதனைத்துடைத்தல்வேண்டு,முன்னி யுறப்பார்த்தலுமேயிதன்சுபாவ மொழிந்துபோய்த்தன்மாய்வானுத வுமின்பம். (௧௬)

நனிமெய்யாய்மாயையிலதென்றிவ்வாறுநாடுவாய்ஞானியாய்ஞா னம்பெற்றாற், றுனிசெயுமீதுளமாயையறிதியன்றேதுகளிலாநற் போதந்தோன்றுமட்டும், பனிமாயையில்லையெனவென்சொல்லா லேபழுதில்லாவறுதியுறப்பற்றிகிற்பாய்,புனிதமுறுபிரமமேயெல்லா மென்றுபுந்தியிற்கண்டோர்முத்திபொருந்தினோரே. (௧௭)

பேதமுறுபுந்தியேமாயையாகும்பெரிதுவருந்தியுமிதனைப்போக் கல்வேண்டும், போதமுறுபேற்றினலன்றி மாயைப்பொருநதியின் கரைதோன்றாப்பொருந்தத்தோன்றி, லேதமறுமப்பதமேயிறவா வீடாமிம்மாயைபிறப்பிடமேதென்னவேண்டாஞ், சேதமுறக்கொ ல்வழியேதென்றுதேர்வாய்சிதைவுற்றாலிதனியல்புதெரியுமன்றே.

யாதினிற்றோன்றியதென்றும்யாதிதென்றுமிறந்தநெறியாதென் றுமிறந்தாற்றோன்று, மாதலினால்வன்றுயரின்சாலையானவவித்தை யெனுநோய்க்குமருந்தருந்தச்செய்தாற், றீதுபயில்பிறப்பென்னுங் கடலின்மூழ்காய்செறிகாற்றுத்தன்னுருவாஞ்சேணிறன்னாற்,சாத முறத்திரிவதுபோற்றன்பாற்றோன்றுஞ்சத்தியினாலாத்துமதத்துவ நின்றொல்கும். (௧௯)

நொய்யநெடுஞ்சிற்கடறன்னிடத்தேயற்பநுடக்கத்தாற்கணம்வி ளங்குநுண்மைநோக்கா, லையமறத்தற்பதமொன்றகண்டமென்றே யழுந்துவாயக்கடலிலசைந்துசற்றே,மொய்யறிவாஞ்சிற்சத்திகண காலத்தின்முழுதுறுசத்தியினாலுமுழங்கத்தோன்றித், துய்யவிடங் காலமொடுதொழில்கண்மூன்றுதூயன சத்திகடம்மைத்துணையாய் ச்சேர்க்கும். (௨௦)

தனதுசுபாவத்தையறிந்தநந்தமானதற்பதத்திலிருந்துஞ்சிற்சத் திதானே, யெனதுருவிவ்வளவென்றேயறிவுற்றாற்போலெண்ணுறு மிப்படியுருவையிதுபாவிக்கி, லனுகதமாயப்பொழுதேபெயர்களை



ல்லையாதியாம்பார்வைகள்வந்தடையாநிற்குங், கனவிகற்பந்தருவடி வாய்ச்சித்துருபங்கவரிடங்காலந்தொழிற்குக்கலந்தபற்றாம். (௨௧)

ஈங்குரைசெய்சித்தினுடையுருவந்தன்னையாவருஞ்சேத்திரக்கிய னென்றியம்பாநிற்ப, ராங்கதுவும்வாதனையைச்செய்யாநின்றேயக ங்காரபாவனையையடையாநிற்கும், வாங்கருமாங்காரமுநிச்சயிப்ப தாகிமலினமுறுபுந்தியாமலஞ்சேர்புந்தி, வீங்கியகற்பனைவடிவாய் மன்னநெஞ்சாம்விகற்பமிகுமனம்பொறிபாமெல்லவந்தே. (௨௨)

கரசரணமயவுடலைம்பொறிகளென்பர்கவல்வுறவிப்படியன்றோக லந்துசீவன், விரவியசங்கற்பமெனும்பாசத்தாலேவீக்குண்டுதுன் பவலைவீசப்பட்டுத்,தரமறவினதையடைவேயடையாநிற்குஞ்சத்தி மயமாமனமித்தன்மையாகிப், பொரவகங்காரதைமேவிக்கோசகார ப்புழுப்போற்றன்னிச்சையினாற்பூணும்பந்தம். (௨௩)

தானேசங்கற்பித்துத்தன்மாத்திரத்தாற்றனிவலையாமுட்டொழி ல்கடன்னைக்கட்டக், கானேறுசிங்கம்விலங்குற்றதென்னக்கவலை யினான்மிகவுமனங்கரைந்துசோரு, மானுதமனம்புந்திஞானஞ்செ ய்கையகங்காரம்வாதனையுடலம்பகுதிமாயை, யூனுனமலங்கருமம் பந்தஞ்சித்தமோதவித்தையிச்சையெனவுரைப்பரன்றே. (௨௪)

அப்பரிசோரோரிடத்திலோரொன்றாகவாசாபாசத்தினாலமைத் துச்சொன்ன, வொப்பரியசகவிரிவாமிவற்றையெல்லாமுட்கொள் ளும்பலமிதனிலொன்றுமில்லை, கப்புடையநெடுவடத்தைவடத்தி ன்வித்துக்கரந்திருப்பதொக்குமிடர்க்கவலைத்தீயின், வெப்பமிகக் கோபப்பாம்பெடுத்துநுங்கவேட்கையெனுங்கடற்றிரையான்மெலி யுமுள்ளம். (௨௫)

பெருகியவித்துயர்களாலவசமாய்த்தன்பிதாமகனைமறந்துமிகப் பீடையுற்றுக், கருகியவிம்மனந்தன்னையளற்றிலானைக்கரையேற் றிவிடுவதுபோற்கரையிலேற்றாய், வெருவுசராமரணமெனும்விட த்தால்வெந்துமிகுநலந்தீங்கெனும்பகையான்மெலியுநெஞ்சுக், கரு ள்புரியாநரர்மனிதவடிவமானவரக்கரோயருள்வடிவமானவள்ளால்.

இவ்வகையேசிற்பாவசிவபேதமியல்வடிவாம்பிரமத்தினிடையே நின்று, வவ்வியபாவனையாலேவந்தகோடிவாராநின்றனகோடிவரு

வகோடி, தெய்வவரையருவிநீர்த்துளிபோல்வந்தோர்சிலர்பிறவி யொன்றிரண்டுமூன்றுசேர்ந்தோர், நைவருசென்மங்கள்சிலர்நூற் றின்மிக்கோர்நாடரியபவஞ்சிலர்கணண்ணிநின்றோர். (உஎ)

சிலர்சிலர்கள்கின்னரர்கந்திருவரானோர்சிலர்விச்சாதரருரகர்தி ரளாய்நின்றோர், சிலரருக்கரிமகிரணன்வருணனானோர்சிலர்பிரம ன்றிருநெடுமால்சிவனுய்நின்றோர், சிலர்மறையோர்சிலரரசராகிநி ன்றோர்சிலர்வணிகர்வேளாண்மைச்செயலினின்றோர், சிலர்வில ங்குபறவைகளூர்வனவாய்வந்தோர்சிலரிலைகாய்பழமூலந்திரணமா னோர். (உஅ)

சிலர்மயேந்திரசைலஞ்சையமேருதென்மலயமந்தரமாய்ச்சிறந்து நின்றோர், சிலர்கடம்பஞ்செம்பிரந்தாலஞ்சாலஞ்சிறந்ததமாலங்க ளாய்ச்செறிந்துநின்றோர், சிலருவரிதயிர்நெய்பாற் கருப்பஞ்சாறு தேனெடுநீர்பெருங்கடலாய்ச்சேர்ந்துநின்றோர்,சிலர்திசைகள்சில ர்நதிகளாகிநின்றோர்சிலர்மேலோர்சிலர்கீழோர்சீவரானோர். (உகூ)

கையினுலறையுண்ணும்பந்துபோலக்காலனுலறையுண்டுகெணக் கிலாத, மெய்யிலேபுகுந்தனுத்துவிவேகம்பெற்றும்விரகிலார்சிலர் பிறப்பின்மீண்டும்வீழ்ந்தார், மையினுன்மூன்றுலகாம்பணதிசெய் துவருநிற்கும்போமாகிவளர்ந்துவாளாப், பொய்யினுன்மிகவிரியும் வேலையூடேபொருதிரைபோற்பரபதத்தேபுரிந்தமாயை. (நo)

தெரிந்துணர்ந்தோனிவ்வாறுசெப்பலோடுஞ்சீவன்ருன்மனப்ப தத்தைச்சேர்ந்துநின்றும், விரிஞ்சனெனும்பெயர்பெற்றதெவ்வா றென்றுவித்தரத்தாலுள்ளபடிவிளம்புகென்று, வரிந்தமன்கேட்ட லும் வசிட்டனுரைப்பான் வள்ளாலந்தநெறிகேட்டலுமேயகிலஞா லம்,புரிந்தநெறியறிதியிதன்றன்மையெல்லாம்புந்தியுறக்கேட்டுணர் வுபொருந்துவாயே. (நக)

வேறு.

திசைகாலமாதிகளாற்றன்னுடையசத்தியினுற்றிரியாச்சிவன் பசையானலீலையினுற்றிசைகாலமாதிகளாற்பயின்றமேனி யிசையாநின்றுளபோதேசிவனுக்குப்பரியாயமென்னப்பட்ட வசையானவாதனையின்வசத்தாலேயுலையுமனம்வந்துதோன்றும். ()



செயல்செயலின்மைகளிரண்டுஞ்சேர்ந்தெழுந்தமனச்சத்திசெயலை யியல்பின்முதனெய்தாகிச்சத்தவிதையிரதத்திலெழுவதான[மேவி வுயர்தருவின்பாவனையைப்பாவிக்குங்கணத்திலேயுடனேயந்த வியனலேவின்றன்னெறியாலந்தமனங்கனதையினேமேவுமன்றே. ()

பரிசவிதையிரதத்திலெழுவதாங்காற்றசைவைப்பாவித்துன்னும் விரிதருவின்காற்றிரண்டின்மெய்ந்நெருக்கிலேநின்றும்வெந்தீத்தோ யிருதிறச்சத்தப்பரிசந்திடமாகப்பழக்கமுறுமியல்பினலே [ன்றி யுருவதன்மாத்திரைமேவுமிம்மூன்றினுடன்மேவுமுள்ளந்தானே. ()

கணத்திலிரதத்தியல்பைப்பாவிக்கநீரறிவக்கருத்திலுண்டாங்,கு ணத்தினையத்திறங்களொடுங்கூடமனங்கணத்திலேகுறித்துநாடி, ம ணத்தினைப்பாவித்தலுந் தன்மாத்திரத்தாற்பா ரறிவு வருமிவ்வாறே, தணத்த பூதத்தன் மாத்திரம் வளேத்து வளேத்துருவாய்ச் சகமாய்த் தோன்றும். (நரு)

திகழ்ந்தவனற்பொறியென்னத்திகழ்வடிவைவிண்ணிலேதெரிய க்காணு, மகங்கரமாந்தொழின்மேவிப்புந்தியுடன்விதையோடுமெனு கியந்தப், புகன்றதெலாஞ்சேர்ந்துபுரியட்டகமாயுயிர்களுளப்பூவில் வண்டா, மிகுந்தகடுங் கூட்டரவாற்பாவிக்கு மிகவிளங்குமேனித ன்னே. (நசு)

பாவனைமுற்றிடத்தூலமேனியாய்வில்வத்தின்பழம்போற்சித்த [ற் மேவுகருவிற்பாய்ந்தபொன்னிறம்போன்மிகவிளங்கிவிமலவிண்ணி ருவரமுண்டாய்நிற்குமந்தவொளிதன்னுடையசுபாவந்தன்னுற் கேவலமேற்றலைகீழ்காற்பக்கங்கைகடுவயிருக்கிளர்ந்தோனுகும். ()

முந்தியகாலத்தினுல்வெளியாகிநின்மலமாமூர்த்தியாகிப் புந்தியொடுசத்துவமொய்ம்புச்சாகம்விஞ்ஞானம்பொறியுமேவு மந்தவவனேயகிலபிதாமகனுய்முழுதுணர்ந்தவயனுமன்னுன் சுந்தரமாயுத்தமமாய்த்திகழ்கின்றதன்வடிவைத்தோன்றநோக்கி.()

குன்றுதவறுகுணத்தோன்மூன்றுகாலமும்வெளியாக்குறிக்கு ம்வேதா, வொன்றுகிச்சின்மயமேயுருவமாய்க்கரைகாணுவுயர்வா னத்தின்,முன்றுனுண்டாகியதென்னெனநினைந்தானழுக்கிலாமுழு ஞானக்கண், ணன்றுவப்போதுதித்தோன்பலகோடிசிருட்டிமுதன டத்தக்கண்டான். (கூந)

சாதிகுலந்தருமமெலாமுணர்ந்தவற்றைலீலையினூற்றன்கற்பித்தா
னேதரியலீலையினூற்சங்கற்பத்தாற்பிறக்குமுயிரையெல்லா
மேதமுறுகந்தர்ப்பநகரம்போலறம்பொருள்வீடின்பமெய்த
மேதகையபலகோடிசாத்திரங்களவர்க்காகவிதித்தான்வேதா. (௪௦)

விரிஞ்சனுருவாமனத்தாலிச்சிருட்டியிற்சிருட்டிமேவி*நின்றும்
புரிந்தலருமலரெல்லாம்வசந்தகாலத்தினூற்பூப்பதொக்கும்
பிரிந்தசுரர்நரர்முதலோர்தத்தஞ்சங்கற்பத்தாற்பிறவியுற்றார்
தெரிந்தனையசங்கற்பமறிற்பிறவார்நெய்மாண்டதீபம்போல. (௪௧)

வானநிகராமனைத்துங்கற்பனைமாத்திரம்வாளாவளராநிற்கு
மானசகநனவுதனிற்கனவுபோலிராகவனேயறிதியன்றே
யீனமுறப்பிறப்பில்லையிறப்பில்லையெவ்விடத்துமொன்றுமென்றும்
ஞானபரமார்த்தத்தாலிவையெல்லாம்பொய்யாகநண்ணுமன்றே.

வெங்காதற்பெரும்பாம்புநெளிபுற்றாங்குடும்பபரம்வெறும்பொய்
யென்றே, யிங்காசையறநீக்கியெல்லையிலாப்பரமபதத்திருந்துவாழ்
வாய், சிங்காரக் கந்தர்ப்பநகரிருந்தென் சிதைவுற்றென் நீதோநன்
றோ,பங்கானமனைமக்கள்வாழ்ந்தாலென்கெட்டாலென்பாசமாயை

தாரதனமிகுமென்னிற்றளையாகுமப்பாசந்தளைத்துக்கொண்டா,
லாரதனையறுத்தகலும்விரகுடையாரறிவில்லாராசைவிஞ்சிக், கூரி
தையாமப்போகத்துழன்றுழக்குங்கொடுந்துயரைக்குறித்தபோதே
தீரதையாமறிஞர்க்குவிரத்தியுளதாய்ச்சித்தந்தெளியுமன்றே. (௪௪)

ஆனதிறத்தாற்குடும்பபாரவியாபாரத்திலணுகும்போது, போன
பொருட் கிரங்காமற் பொருந்துபொருண் மாத்திரமேபுசித்து வாழ்
வாய், தீனமுறவருபொருளைச் சிந்தியார்வந்தபொருட்டிதென்றெ
ண்ணூர், ஞானபரரானோர்க்குச் சுபாவமாங்குணமிதுவேநளினக்
கண்ணாய். (௪௫)

கண்டனவெல்லாம்பொய்யென்றுள்ளத்திலனைத்தினும்வெங்கா
தனீத்த,பண்டிதராமுழுதுணர்ந்தபெரியோரையீராதுபாசமாயை,
யுண்டிலையென்பவற்றிடையின்சுத்தமாம்பதம்புந்தியூன்றப்பற்றி, வி
ண்டவுடற்குட்புறம்பாமுலகைகைபேற்றுதலும்விடலும்வேண்டா. ()

* நின்ற எனவும் பாடம்.



எக்கருமத்திலுமிச்சையனிச்சையறநின்றுணர்வையெய்தினோர்
க்கே, யக்கருமங்களிலறிவுபற்றாதாமரையிலைசேரம்புபோலத்,தொ
க்கபொறிவிடயநலஞ்சுவையறநின்மனமாரத்தோன்றில்வீரா, தக்க
வுணர்வுணர்ந்தோனாய்ப்பவக்கடல்கள்கடந்தன்றேசநகந்தீர்ந்தாய்.

உச்சமுறுபதம்வேண்டிலனைத்துவாதனையிலுநின்றுள்ளந்தன்னை
நிச்சயமாமுணர்வாலேநீக்குவாய்மலரின்மணநீங்குமாபோற்
றுச்சமுறுவாதனையாந்தரங்கநீர்பவக்கடலிற்றுளைவார்க்கெல்லா
மச்சமறநல்லறிவுமரக்கலமாய்க்கரையேற்றுமயலொன்றுண்டோ.

பராபரங்கண்டோரனைத்தும்பின்செல்வருலகியல்புபற்றார்நீங்கார்
சுராலயநந்தனவனத்தும்பற்றார்கள்சூனியத்துந்துயரமெய்தார்[ரே
விராவுநியதியுந்தள்ளார்வெய்யவன்போலனுசரிப்பர்மேன்மைசான்
றிராகவனேயிவ்வாறுநடத்தியெனவசிட்டமுனியியம்பலோடும். ()

பரத்துவகேளிவ்வாறுபரமமுனிபரமபதம்பகரக்கேட்டுத், திரத்
துவமாநிறைந்தான்போற்சீராமனமலமாய்த்தீர்ந்துசித்தந், தரத்து
வமையில்லாதமெய்ஞ்ஞானநல்லமுதாற்றதும்பித்தண்ணெனன், றுர
த்துவளர் சந்திரன்போ னிறைவுற்றான் வசிட்டனுமீண் டுரைப்பதா
னன். (௫௦)

ஒருகாலமரன்படைப்ப னொருகாலமயன்படைப்ப னுலகமெல்
லா,மொருகாலமரிபடைப்பனொருகாலமுனிவர்படைப்புள்ளதாகு,
மொருகாலம் புயத்துதிப்பனொருகால்வா ரியினுதிப்பனுயர்ந்தவே
தா, வொருகாலண்டத்துதிப்பனொருகால்விண்ணகத்திலேயுதிப்
பனன்றே (௫௧)

வன்மரங்களேநெருங்குமொருபடைப்பிலொருபடைப்பின்மனி
தர்துன்னும், பன்மலைகளேநெருங்குமொருபடைப்பிலொருபடை
ப்பிற்படர்மண்ணாகும், கன்மயமாமொருபடைப்பிலொருபடைப்
பிற்றசைமயமாய்க்காணலாகும், பொன்மயமாமொருபடைப்பிலிப்
படியேபலவிதமாம்பூமிதானே. (௫௨)

வான்முதலாமண்முதலாநீர்முதலாந்தீமுதலாமற்றைவாயுத்,
தான்முதலாமிப்படியேசிருட்டிதொறுமோரொன்றுதலைமையாகும்,
யான்முதலோரயன்சிருட்டி சிலேடையாவுனக்குரைத்தேனிந்தவா

ற்றான், "மேன்முதலா நியமமிதற்கொன்றாகவிலது பலவிதமாய்த்
தோன்றும். (௫௩)

கிருதமுதலுகா லுமீண்டுமீண்டுற்பவிக்குங்கிளத்துஞாலத் [லை
தொருபொருளும்வளைத்துவளைத்தநந்தமடங்குற்பவமாயுழலாதில்
யிருள்பெருகுமாமாயைவன்னனைக்குமுன்னிலையாமியாமிங்கோத
வருமறைதேர்தாசூரன்கதைகேட்டியிராமவெனவறைவதானான்.

வேறு.

இந்தப்புவனத்தூடேயெழிலார்மலரின்பொழில்வாய்
மந்தக்குளிர்கால்கமழுமகததேசந்தன்னிற்
கந்தக்கதலிகடம்புகன்னிகாரஞ்செறிந்து
சிந்தைக்கினிதாகியதோர்சிறப்பாமலையினிடத்தே. (௫௫)

பரலோகஞ்சேர்தவமேபண்ணியயன்போலுயர்ந்த
சரலோமாவின்மைந்தன்றாசூரப்பெயர்முனிவன்
சுரலோகத்தின்குருவின்றோன்றற்கசனையொப்பா
னரலோகத்தின்மேலானவைதீர்தவத்தாற்பெரியோன். (௫௬)

தனையனொருவனோடுஞ்சரலோமாவாமுனிவ
னனையகிரியின்வனத்திலநேகயுகஞ்சென்றதற்பின்
புனையுங்கூடுகெழிந்துபுட்போவதுபோற்போகி
வினைசெய்யுடலைவிட்டுவிண்ணோர்வடிவையெடுத்தான். (௫௭)

தனியேயந்தவனத்தேதாசூரப்பேர்முனிவ
னினியதாதையிறவுக்கிரங்கியுதகத்தியற்றும்
புனிதமானபிரமபூசைமுழுதும்புரியான்
கனியுநெஞ்சனன்றில்கதறுமாபோற்கதறி. (௫௮)

தந்தையன்னைபிரிவாற்சாலவெம்பித்தளர்ந்த
மைந்தன்றன்னையருளால்வனதேவதைகண்டருளி
முந்துறுமனின்றுமுனிமாமகவாமுனிவா
சிந்தைதெளிந்தோய்தெளியாச்சிறியோரெனநொந்தயரேல். (௫௯)

அனித்தமானகுடும்பத்தபத்தமுணர்கின்றிலையென்
சனித்தபொழுதேமரித்தல்சற்றுந்தப்பாகண்டாய்



பனித்தவிழியோடயர்வாய்பகலோனுதயஞ்செய்தா
லினித்தன்னிலையத்தமனத்தெய்தானென்பாருளரோ. (௬௦)

வாளாவயரேலென்றுமறைந்துதெய்வமுரைப்பக்
கேளாவுணர்ந்துதளருங்கேதமொழித்துநிலையாய்
நீளாரணத்தின்படியேநீரின்கடன்கண்முடித்து
மீளாநெறிசேர்தவத்தின்மிகவும்விருப்பமானான். (௬௧)

தக்கபிரமகருமந்தன்னாற்றவமேசெய்வான்
றொக்கசங்கற்பத்தாற்சுத்தாசாரமிகுந்தான்
மிக்கஞானமில்லான்விசுத்தமானபுவியிற்
புக்கவிடங்களெல்லாம்புனிதமன்றன்றெனா. (௬௨)

வையஞ்சுத்தமல்லமரத்தினுனியேபுனித
மையபுட்போலாங்கேயமர்தற்கானதவமே
செய்யகிற்போமென்னாச்சிந்தையாரநினைந்து
வெய்யகனலைமூட்டிவிண்ணோர்குழுவைநினைந்து. (௬௩)

உடலையரிந்துவாங்கியோமஞ்செய்யலோடுங்
கடவுளவர்க்கென்முகத்தாற்கலைவேதியன்மெய்த்தசைக்ண
மிடறும்புயமுமுதலவேவதென்னேயென்னாச்
சுடருங்கனலோனினைந்துசுருதிமுனிமுன்றோன்றி. (௬௪)

கருதிற்றென்னவென்னக்கைகண்முகிழ்த்துத்துதித்துப்
பரிசுத்தமதாமிடமிப்பாரிற்காணேனதனாற்
றருவிற்றலையிற்றளிர்மேற்றலந்தந்தருள்வாயென்ன
வரமுற்றுதவிக்கனலோன்வாரித்திரைபோன்மறைந்தான். (௬௫)

கானத்திடையோர்கடப்பங்காரின்பதத்தைக்கடந்து
வானத்துயர்ந்ததன்மேல்வருபல்லவமென்றவிசின்
றானத்தையமின்றித்தாசூரன்றானிருந்து
மேனற்றவமேசெய்வான்மிகவும்விரும்புமனத்தான். (௬௬)

வேறு.

ஒருகணந்திசைகளனைத்தையுநோக்கியுரைத்தபத்மாதனத்திருந்தான், பெருகியதிசைகண்முழுதினுந்திரும்பிப்பிரமபாவனையறிவரிதாய்க், கருமமாத்திரத்தினிற்பதாய்ப்பலமாங்கற்கசம்விரும்புறும

னத்தால், வருடமாறிரண்டுமெகங்களேநடத்திவானவர்க்கவியுணவ
ளித்தான். (௬௭)

கோத்திரள்புரவிமனிதராலியற்றுங்கோதறுவேள்விகண்முற்றுஞ்
சாத்திரவிதியாலியற்றிநீள்காலந்தவறறநடந்தமையாலே
மாத்திரமானமனமிகத்தெளிந்துவரம்பிலதாதலுமாங்கே
நேத்திரமானஞானம்வந்தெய்திநிறைந்தனன்வலிதினன்னெஞ்சம்.

பிறவியாவரணங்கழிந்துவாதனைகள்பேரறமாண்டுளபெரியோ,
னிறவியதளிர்மே விருத்தலுமொருநாணிமலமாம் விழிகளுக் கெதி
ரே, யுறவிரிமலரின்மேகலையுடுத்தவுயர்வனதேவதைதோன்ற, வறி
வனுநோக்கியார்கொனீயென்னவழகியவணங்குரைசெய்வாள். ()

பெரியவர்தம்பாற்பெறலருநேயம்பெற்றவர்விரும்பியவெல்லா,
மரியனவெனினுமிமைப்பினிலெளிதிலணுகுமென்றய்யமற்றறிந்தே
ன், றெரிவருண்முனிவநீயுறைவனத்திற் செறிவனதேவதை யிங்ங
ன், விரியலர்கொடியாம்விநோதவீட்டிடையேவிருப்பொடுமிருப்ப
வணுனே. (௭௦)

மேடமாதத்திற்பிறைபதின்மூன்றுகலையுறமேவியநாளி, னாடரு
மதனுயர்திருநாளினந்தனவனத்திலேவந்து,கூடியவனதேவதை
க்கணந்தன்னைக்குறுகினேன்பாங்கியர்முழுதுந், தேடருமைந்தரு
டன்மகிழ்ந்திருந்தார்சிறுவனில்லாதயான்றளர்ந்தேன். (௭௧)

காதலித்தவர்க்குக்கருதியதளிக்குங்கற்பகமனையநீயிருப்ப
நாதனேநாதரில்லவர்போலநான்மகற்கிரங்குதனலனோ
நீதரல்வேண்டும்புதல்வனையன்றிநின்னருளென்பொருட்டிலதேற்
றீதறுமதலையிலதெனுந்துன்பஞ்செந்தழன்மூழ்கியேதீர்ப்பேன்.

என்னலுமுனிவனகைத்தொருமலரையீந்தொருமதியிலேயெளி
தா, யன்னமேமகவைப்பெறுதியானீ முன்னருங்கனன்மூழ்குவே
னென்னு, வின்னலால்வலித்துமகவுவேண்டுதலாலினிதுநீயின்றிடு
மகவும்,பின்னுறுவருத்தநெறியினான்ஞானம்பெறுமெனப்பேசினன்
பெரியோன். (௭௩)

கேட்டவண்மகவுகிடைத்ததேயென்றுகிளர்முகமதிநிலாக்குலா
வ, மீட்டுமம் முனியை நோக்கிநின்னேவல் விரும்பியீண் டுறைகுவ



னென்ன,வாட்டமின்முனிவனியைந்திலன்விடுப்பவந்தனளணங்கு
தன்னிடத்திற்,சேட்டமாமகவையளித்தனள்கலையாற்செறிதருமதி
யெனவளர்த்தாள். (௭௪)

இருதுவேயாண்டேயெனுங்குறிகளினாலிறந்தனவாறிரண்டாண்டு
திருமுனிபாதமகவொடுமடைந்துசென்னிதாழ்ந்தெதிருறநின்று
பெருமைகண்டருள்வாய்நீதரயானேபெற்றவிப்பெருங்குணக்குமர
னருமறைநூல்களனைத்தையுநானேயளித்திடவறிவினாலறிந்தான்.

கலையெலாநிறைந்தும்பிறப்பிலாஞானங்கண்டிலன்சடற்பவத்துயரா
லலைவுறுநின்றான்றனையுணர்ஞானமளித்தியென்றணங்குரைசெய்ய
நிலைகொண்மாணாக்கனமக்கிவனுக்கிநீயகல்கெனவவளகன்றா
டலைமைசேர்முனிவன்றாளிணைவிடாதுசற்குணமதலையுநின்றான்.

வருந்திமெய்ஞ்ஞானம்பெறத்தகுமகவைமாதவனருளினான்மெ
ல்லத்,திருந்தியகதைகளளவைகளிதிகாசத்திலேசெப்பியதிறங்கள்,
பெருந்துணைமறையின் முடிவிலேதுணிந்துபேசிய பழம்பொருண்ம
ற்றும்,பொருந்தியநெறிகளநேகமாய்விரித்துப்பூரணபோதமேபுகன்
றான். (௭௭)

வானதிமூழ்கவதுநெறியாகவானிலேமறைந்துபோயொருநா
ளானவேழ்முனிவர்பதவிநின்றணுகியனையதாசூரன்வாழ்கடம்பின்
றானமேமேவியிருட்பொழுதிருந்துதாபதன்றனயனுக்குரைத்த [ம்.
ஞானநற்பொருள்கள்கேட்டனமதனைநாமுனக்குள்ளவாறுரைப்பா

பிறப்பிலாப்பிரமமிதுவெனவறுதிபிறப்பதோர்கதையிதுகேளாய்
சிறப்பதோரரசன்வீரமும்புகழுஞ்சிறந்தவன்றெளினும்பெயரோ
னிறப்புறுமுலகபாலராயுள்ளாரவனுடையேவலைமுடிமே[டியோன்.
னிறப்புறுமணிபோற்றாங்குவொவர்க்குநிலைபெறநிறுத்தொணாநெ

சாகசமொன்றும்விரும்புவோன்பலவாச்சாலவும்வியப்புறுதொழி
லோன், சோகமுமகிழ்வுந்தருவதாய்முயலுந்தொழில்களின்றொகு
தியை யெண்ணின், மாகடலலைகளெண்ணினுந் தொலையாவாட்ப
டைவாயுவன்னிகளி, லேகமுமிவனையடர்வுறாதாகுமிருகையால்வி
ண்ணையென்செயலாம். (௮௦)

வரம்பறவிரிந்துலீலையாற்புரியுமட்டறுமுயற்சிகளனைத்துந்
திரம்பெறுதேவர்மூவராலெனினுஞ்சிறிதுபிற்செல்லவுமரிதாம்
பரம்பியவிவனுக்குடலமாயெல்லாம்பரிப்பவர்மூவருண்டனைய
ரும்பயிலுலகையடர்ந்துநிற்பவர்களுத்தமன்மத்திமனதமன். (அக)

முடிவிலாவிசும்பிற்றேன்றியாங்குறைவோன்மூவகையுடலுடை
னெடியவவ்விசும்பிலவன்றருநகரநீண்டவீதிகள்பதினுலா[முதல்வ
மொடிவறுபகுதிமூன்றிறுலெழிலாருபவனம்வனங்கள்செய்குன்றங்
கொடிநிகர்முத்தமாலையேழ்வாவிகுளிர்கொதிப்புளவிருதீபம்.

என்பனநிறைந்தவிந்நகரத்திலிவன்றருபாவறையினங்கண், முன்
புறுகீழ்மேனடுவெனும்பதங்கண்முழுதினுமுழல்வுறவிதித்த, வன்
புறுதூண்கண் மூன்றுளவெலுப்பு மரங்களாற்செறிந்தனபுண்ணீர்,
மென்படர்தோலானெய்த்தினிதானவிரிமயிர்க்கற்றையான்மேய்ந்த

மந்தமாருதஞ்சூழ்சாலகமொன்பான்மருவினவைம்பொறியென்
னுஞ்,சுந்தரவிளக்கால்விளங்குவவிரண்டுதோளெனுந்தோற்றமுமு
டைய, வந்தமில்பரமபாவனைக்கஞ்சுமகங்கரப்பேய்கள்காத்தளிப்
பச்,சந்ததமிலாதமாயையாலந்தத்தரணிபன்சமைத்தபாவறைகள்

அசைதருமினியபாவறைத்திரளிலகங்கரப்பேய்களோடுலாவிக்
குசைதருவினோதம்விவிதமாவியற்றிக்கூடுறைபுள்ளெனவுறைந்து
விசையினுலவற்றைவிட்டகன்றயலேமேல்வருபாவறைவிதித்து
நசையுறமேவிப்பூதவாவேசநண்ணினர்போலவனடிக்கும். (அரு)

இவற்றைவிட்டவற்றையெய்துவமென்றேயெண்ணுறவப்படியெ
ய்து,மவற்றினின்றிறப்போமென்றெணுநினைவாலப்படியிறந்துபோ
ஞ்சித்தங், கவற்றியாலலையப்பிறந்திறந்துழலுங்ககனமேயிவற்றினு
க்கிடமாங், தவற்றினையெய்திமீளவுந்தோன்றுந்தவழ்திரைநீரிலேவ
ரல்போல். (அசு)

மேனிமூன்றுடையோன்சிறந்தகந்தர்ப்பவிதித்தவூரனையதற்புரத்
திற், ருனினிதிருந்துதொலைவறமேன்மேற்றழைப்புறுகாரியவசனு,
யீனமா மொருகானன்மையா மொருகாலென்செய்வோ மென்றிடு
மொருகான், மானமாமொருகான்மயக்குறுந்தெளியும்வருந்துறும
கிழ்வுறும்பல்கால். (அஎ)



களர்ந்தனனென்னுந்தடித்தனனென்னுந்தாழ்ந்தனனுயர்ந்தன
னென்னும், வளர்ந்தனனென்னுங்குறைந்தனனென்னுமாருதமோ
துறுகடல்போ, லுளந்தனலந்தமன்னவன்சுழல்வதுரைப்பதெனெ
ன்றலுமைந்தன்,கிளந்ததாதையைநீதெளிஞனென்றுரைத்தகீர்த்தி
யோனுரெனக்கேட்டான். (அஅ)

வண்மையாலந்தமன்னனையுரைத்தால்வரும்பிறப்பிறப்பெனும்
பொய்யி, னுண்மைநன்குணர்தியென்றுதாசூரனுத்தமமைந்தனுக்
குரைப்பா, னெண்மயமாகிப்பொய்யெனத்தோன்றியிடமுறவிரிமு
யற்சியதாய்க், கண்மயலானபிறவியினிலையைக்கட்டுரையாகமுன்
னுரைத்தோம். (அகூ)

தற்பரவிசும்பிலுதித்தசங்கற்பஞ்சாற்றியதெளிஞனுமன்னன்
பற்பலகாலுந்தோன்றியுமறையும்பரம்பியவுலகதன்வடிவா
மற்பசங்கற்பமுளதெனிலுலகுண்டதுவிலதெனிலுலகிலதா
முற்படுமூவர்முதலியதேவர்மொய்த்தமெய்யவயவமதற்கே. (கூ0)

மேயதன்பத்திப்பாச்சன்மாத்திரத்தால்விரிஞ்சனும்பாவனைமேவி
யாயசங்கற்பம்வடிவிலாவிண்ணிலமைத்ததுமுப்புவிநகர
நாயகரீரேழாகிடுமீரேழ்ஞாலமேனகருறுதெருக்க
டேஞாலங்கள்செறிபொழிற்றிரள்கள்சொல்லியவண்முபவனமே. ()

மேருமந்தரமேமுதலவந்நகரின்மேவியவிநோதவெற்பினமாஞ்
சூரியன்றிங்கள்காற்றினலசையாச்சுடர்களாநித்திலமாலை
நீருயர்நதிய்ன்றிரள்களாம்வாவிநிகழ்த்தியவேழெனுமவைதான்
பேரியல்வடவைகமலமாய்ப்பூத்தபெருங்கடலேழுமேபெரியோய்.

இனையமாநகராஞ்சகத்திடைமுன்னமியம்புசங்கற்பமன்னவனுல்
வினையினுல்வந்தவுடல்கள்பாவறையாமேற்பதத்திமையவரொன்றும்
வனையகீழ்பதத்தினரகரேயென்றுமனிதரோநடுப்பதத்தென்றுந்
துனைதருவாதவெந்திரவிசையாற்சுழல்வனதசைச்சுவரகங்கள். ()

பல்வகைதானேயியங்குறுமுடலாம்பாவறைதோறுமவ்வேந்த
னல்வழியுணர்வைநோக்குறநடுங்குநலமிலாவகங்கரமென்னும்[றே
வல்லவிப்பேய்கள்பொய்களாயிருந்தும்வந்துமெய்போலெழுமவற்
டொல்வதாம்விநோதம்புரிதருங்கணத்திலுண்டுமோமில்லையுமாகும்.

காயமென்றுரைத்த பாவறைதோறுங் கடலிடையலைகள்போற்
ரோன்றி,மாயுமேலியற்றுமனைகளின்விடாமல்வருமிவனியற்றியவெ
ல்லா, மேயதோர்கணத்தில்வீண்களாய்நசிக்கும்வீணிலேதிரிதருமி
வன்ரு, ஞயதன்சங்கற்பத்தினுலிருக்குமவ்வளவருந் துயருழக்கும்.

இறையுமோர்சுகமற்றிரங்குவோன்ருனுண்டென்பதோர்பாவனை
யாலே, நிறைசகமியற்றுந்தானிலதென்றேநினைத்திடிலக்கணத்திற
ந்து, குறைவறுகதிர்முன்னிருளெனப்போகுங்குறித்தசிற்றின்பமு
ற்றமிழு, முறைவுறுமிவனுக்குடல்கண்மூன்றுளவாமுத்தமமத்திம
மதமம். (௬௬)

முக்குணந்தானேமூன்றுடலாகிமூலமாமூன்றுலகிற்கு
மக்குணந்தன்னிற்றமங்கொள்சங்கற்பமாவதுபகுதியின்செயலாற்
றுக்கமாய்வருந்திப்பாதலப்புழுவாந் தூயசத்துவங்கொள்சங்கற்ப
மிக்கநற்றருமஞானம்வீடுளதாய்வேந்தர்வேந்தெனமிகவிளங்கும்.

இராசதகுணசங்கற்பமிவ்வுலகிலியல்புறுகுடும்பியாயியங்கும்
விராவியவிந்தமூன்றையும்விட்டுமெய்ம்மையாய்த்தானிலதென்னி
னிராகுலமாகவனையசங்கற்பநிமலமாம்பரபதமடையுங் [த்தி.()
துராசையாம்பார்வையனைத்தையுநீக்கித்துகண்மனமனத்தினுனிறு

உள்ளினும்புறத்துமெழுந்தசங்கற்பமொருக்கிடவொருப்படநினை
யெள்ளருந்தவங்கள்கற்பகோடிகணீயியற்றினும்பாதலம்பூமி [வா
தள்ளருந்துறக்கமேவினுமுனக்குச்சாற்றுசங்கற்பமாய்வல்லாற்
றெள்ளியபரமபதத்தினைமேவத்தியக்கமிலுபாயம்வேறில்லை.(௬௬)

துயர்களும்விகாரங்களுமிலாப்பிரமசுகஞ்செய்சங்கற்பநாசத்தை
முயலுதிநனிசங்கற்பமாங்கயிற்றின்முடிவறுபாவனையெல்லா
மியல்புறுகோவையாலெழுமந்தக்கயிற்றினையெளிதினிலறுத்தான்
மயல்கொள்பாவனைகளெங்ஙனேதுளாய்மடியுமோவறிகிலமைந்தா

துனிசெய்சங்கற்பமின்றிமுன்வந்துதோன்றியதொழில்வழிநிற்பாய்
பனிசெய்சங்கற்பமாண்டிடிலறிவுபார்வைகளனைத்தினும்பற்ருத்
தனியுயர்பிரமபதமடைந்தகிலவிகற்பமாந்தனையெலாந்தள்ளி
யினியனுயேகத்துவத்திலேசுழுத்தியிதயமுற்றின்பமேபெறுவாய்.()

என்னலுமுயர்சங்கற்பமேதென்னவெழுந்ததும்வளர்ந்ததுமாய்ந்து
சன்னமாகியதுமெங்ஙனமென்றுதவஞ்செய்தாசூரனைமைந்தன்



பன்னியேகேட்பவதற்கவனுணப்பான்பரமமாயுண்டெனல்வடிவா
மின்னியசமமாமறிவுகாண்பவற்றின்மேவுறவெழுதல்சங்கற்பம். [ய்
அற்பமாயெழுந்துதானுளதாகியடைவிலேபையப்பையப்பருத்துத்
தற்பரமனமாந்தெளிவறமூடிச்சடத்துவந்திடத்திலுண்டாக [னி
வுற்பவமுகில்போல் வளர்வுறுமைந்தா வுணர்வுகாண்பவற்றினையுன்
நிற்பதாந்தனக்குவேறுபோற்கண்டுநிகழ்த்துசங்கற்பமாய்நிகழும்.

அறிவெனும்விதைசங்கற்பமாமுளையாமனையசங்கற்பமாந்தன்னைப்
பிறிவுறத்தானேசெய்துதான்பிறக்கும்பெரிதுறவளர்ந்திடுந்தானே
செறிதுயரொழியவின்பமொன்றில்லையாதலாற்செப்புசங்கற்ப
நெறியுறநினையேனிற்புறுநிலையினிமிடமும்பாவனைநினையேல். ()

இவ்வளவானபாவனையாலேயின்பமாமினையசங்கற்பந் [த்த
தவ்வுறப்பெரியமுயற்சிகள்வேண்டாந்தாக்குபாவனையெலாமொழி
வவ்வகையாலேயிறந்துபோந்தன்னெஞ்சலர்வுறுபூவினைக்கசக்கிற்
கைவருவருத்தமொன்றுளதாகுங்கழறியவிதற்கதுவேண்டா(க0௫)

எழுந்தசங்கற்பபாவனைவிட்டாலிறந்துபோமிதனையிங்கிதனு, ல
ழுந்துறமாய்த்துமனத்தினுன்மனத்தையறுத்துநின்னறிவினீநிற்பா,
யுழுந்துருள்பொழுதின்முடியுமீதரிதோவுலகமும்வானமுமொக்கு,
முழுந்தியபொய்யாய்ப்போம் விகற்பத்தான் முளைத்தவையன்றிமு
ன்னிலதால். (க0௬)

தண்டுலத்தோலுஞ்செம்பினிற்களிம்புஞ்சகசமாய்த்தொழில்வி
சேடத்தால், விண்டுபோமதுபோற்புருடனுமலத்தைமேவியேபோ
க்குதலியல்பாங்,கொண்டசந்தேகமொழித்துநீமுயல்வாய்குருவின்
வல்லபவிளக்கத்தாற், கண்டனமெனல்வீணுனீதானுங்கண்டனப
ரம்பொருட்பொலிவே. (க0௭)

எனவவருரைத்தயாவையுங்கேட்டவ்விரவிலங்கவனாநனெய்
த, மனமகிழ்ந்தருச்சித்தென்னுடைத் தளிர்மேல்வதிந்தனனிருவரு
மெய்ம்மைக், கனகதைகளினுற்காதலுற்றவர்போற்கங்குலைக்கண
மெனக்கழித்தவ்,வனகனைநீங்கிக்கங்கையுற்றனனுனவன்கதைபோ
லுமிச்சகமே. (க0௮)

தாசூரன்கதைமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-எ௩௬.

# கசன்கதை.

முடிவறுகாலந்தன்னின்மொழிதருமாண்டுநூறு
நொடியளவெனினும்பற்றுதிதனையேநெடிதாய்நோக்கி
யொடிவறுபாரவேட்கையுறுவதென்பொருள்களுன்னிப்
படர்வதாமுள்ளத்தாசைபற்றறவொருக்கிநிற்பாய். (க)

மாலறவெங்ஙனின்றுயங்ஙனேவாழ்வாய்பாரிற்
கோலநன்மணிகள்வேண்டாதிருக்கவுங்குறுகிப்பாயுந்
தூலநன்னிழல்போலுண்டாமாத்திரந்தோற்றமான
ஞாலமும்பரமந்தன்னினலம்பெறத்தோன்றுமன்றே. (உ)

ஆதலாற்பரமந்தன்பாலகர்த்தனேகர்த்தனேயென்
றேதுபாவனைகளுண்டாமுற்றபற்றிலாமையாலே
சாதமிலகர்த்தனுகுஞ்சந்நிதிமாத்திரத்தான்
மேதகுகத்தனுமிவ்விரண்டலால்வேறுமேவா. (ங)

அகத்தனிற்கத்தன்றன்னிலமைந்ததேததனினிற்பாய்
முகத்தமாமிரண்டுமின்றிமுளைத்தெழுமனதைநுங்கி
மிகத்தனிதிரமாய்நிற்றியகத்தனுவிளம்புநேரிற்
சுகத்தனுநிற்றியேனுநன்றிதுதுயரொன்றில்லை. (ச)

முன்னியகத்தனுகியான்சகமுறைசெய்கின்றே
னன்னியநினைவிலாமையாலதில்விகாரமில்லை
யென்னதுநீநான்செய்தேன்செய்திலேனென்னும்பார்வை
யுன்னியபொழுதேதுன்பமுடலைநானென்பாருண்டோ. (ரு)

மொய்யுடனுனேயென்னின்மூவேழுநரகுமஃதே
வெய்யவன்றுயராமேனுமெய்யையானென்னவேண்டா
வையமில்கேள்விநல்லோர்நினைவரோவனைத்தாமூனுங்
கையுறத்தின்பரோனுநாய்ப்பிணங்கவரார்நீசர். (சு)

நாமுடலென்னுமாசான்ஞானக்கண்குருடாய்ப்போகுந்
தோமுறுமதனைத்தூரத்தூர்ப்பரோற்சோதிஞான
மாமுகிலிலாநிலாப்போல்வயங்கிடுமினையகண்ணு
லேமுறுபிறவிவேலையிருங்கரையெளிதுதோன்றும். (எ)



அனைத்தினுங்கத்தனல்லேனவனிவனல்லேனென்ன
நினைத்துளத்துறுதியாகிநிற்றியாலஃதின்றென்னி
லனைத்தினுங்கத்தனுனேயளவறுமதுநானென்ன
நினைத்தசைவொன்றுமின்றிநிச்சயமாகிநிற்பாய். (அ)

அன்றெனிலொன்றுமல்லவொன்றுநாமாகுமென்றே
நின்றவிப்பதத்தினன்றுநின்பதந்தனினீநிற்பா
யொன்றெனும்பதத்தைக்கண்டவுத்தமர்தன்பானிற்பர்
துன்றுவாதனையேபந்தந்தொல்லைவிடதனைத்தீர்தல். (கூ)

புலன்களிற்பழகிச்சித்தம்பூண்டவாதனைகண்முன்னே
யலம்பெறமாற்றிவீட்டிற்கடுத்தவாதனையுந்தீர்வாய்
நலந்திகழருள்சந்தோடநட்புதாசினமிந்நாலு
மலந்தவிர்குணங்களாகமனத்தழுந்தாதுசெய்வாய். (கO)

உள்ளுறுதொழில்கண்முற்றுமொருக்கியோருணர்வைப்பற்றி
மெள்ளவாங்கதுவுமந்தக்கரணங்களுடனேவிட்டுத்
தள்ளுவவெல்லாமெத்தாற்றள்ளினுயதுவுந்தள்ளித்
தெள்ளுணர்வுள்ளஞ்செய்கைதேசிருளனைத்துந்தீர்ந்து. (கக)

வாதனைவடிவமானவிவைகளுமற்றிவற்றைப்
பேதமாய்ப்பழகுவோனும்பிராணனிலியக்கந்தானு
மியாதுமூலத்தோடீர்த்துவிண்ணகமென்னநின்று
லியாதுதீர்சாந்தனுயென்னுயினையதுநீமெய்யால். (கஉ)

உளத்தினிலனைத்துமாற்றியுலகிலோர்பற்றதின்றித்
துளக்கிலாநிலையினின்றோர்துகளறுமுத்தராவா
ரளக்கருமீசராவாரவர்களேசமாதிதானுங்
கொளத்தகுகருமந்தானுங்கூடினும்விடினுமுத்தர். (கங)

இருதயத்தாசையொன்றுமிலாமையாலெண்ணப்பட்ட
கருமங்கள்செய்துந்தீர்ந்துங்கையுறுபயனென்றில்லை
யொருவழிப்படநீள்காலமுளமொருப்படுதலாலே
பெருகுவாதனைதீர்நெஞ்சிற்பேசுநூலனைத்தும்வேண்டா. ()

மறுகுவாதனைகடீர்ந்தமவுனத்தையொழியவேறோ
ருறுகதிநல்லதில்லையுணர்வனவுணர்ந்ததாகும்

துறுதிசைபத்துஞ்சுற்றிமீண்டதாங்தொல்லைஞாலத்
தறுதியாயுண்மைகண்டோர்சிலர்நின்றோரவத்தின்மாய்வோர்

தேகத்தைநோக்கியன்றோசெகமெலாந்திரிவதல்லா
லேகத்தைநோக்கியன்றோவெங்கணும்பஞ்சபூத
நாகத்தைமண்ணைக்கீழைநாடினுமாறுகாணோ
மோகத்தைவிடுதுமென்றேதிடமுற்றார்முழுதும்பற்றார். ௧௬

ஊகமின்மூகர்க்கெல்லாமூழிவெங்கடலாஞ்சென்ம
மோகமிலூகத்தோர்க்குமுன்னுறுகோவின்றாளாஞ்
சோகமின்ஞானிநெஞ்சிற்றொடர்ந்தசிற்றின்பம்பற்றாப்
போகமில்சிற்றூர்ப்புன்பெண்பொலிநகர்விடலைக்கென்னும்.

பிரமமாஞ்சுத்தவேலைநுரைகளாம்பிறங்கலெல்லாம்
பரமவாதித்தன்முன்னர்க்கானலாம்பரவைஞாலங்
திரமதாமிதனைமுன்னேசெப்பினன்வியாழன்றந்த
வரமகன்கசனும்பேரோன்மற்றதுவள்ளல்கேட்பாய். (௧௮)

கசனுயர்சமாதிநீங்கியொருபகற்களிக்குநெஞ்சன்
வசமறத்தழுதழுத்தவசனத்தன்யாதுசெய்கேன்
றிசையுறவெங்குசெல்கேன்றீர்ப்பதென்கொள்வதென்னு
மிசையுயர்கற்பநீர்போன்மேதினியெங்குநானே. (௧௯)

மேனியிற்புறத்தினுள்ளின்மேலொடுகீழிற்றிக்கில்
வானில்வையகத்திலெங்குநானன்றிமற்றொன்றில்லை
யானிலாவிடமுமில்லையெனதிடத்திலாதுமில்லைத்
தானிகழ்பொருள்வேறில்லைசச்சிதாநந்தமென்றான். (௨௦)

கசன்கதை முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-௭௫௯.

# திதிப்பிரகரணம்.

பெறற்கொணாதசத்துவகுணப்பிறப்பினர்புவிமே
னிறத்துவாழ்வதுவான்றிகழ்நிறைமதிநிகராம்
வறக்குந்துன்பத்தில்வாடலரிரவுதான்வரினுஞ்
சிறக்கும்பொற்கமலத்தலர்குவியுமோசிறிதும். (௧)

பருதமன்றியேமற்றுளதொழில்களிற்பற்றார்
தகுதியாகியமேலவர்நெறியிலேசரிப்பர்
மிகுதியானிறைந்தசைவறுமுளத்தினான்மிகுவர்
தொகுதியானநட்பருண்முதற்குணங்களாற்சுடர்வார். (௨)

இயற்கையாகியகுணத்தினரிழிவுயர்விரண்டு
நயக்கலாதவர்சமமுளோர்நன்னெறிநடப்போர்
வியக்குமாறுதன்கரைகடாவேலையையொப்போர்
மயக்கிலாதவரிரவிபோனியதியைவழாதோர். (௩)

கொள்ளற்பாலதுதுயரிலாதவர்நிலைகுறுகத்
தள்ளற்பாலதுதீயவர்நெறியெனுஞ்சழக்கே
யெள்ளற்பாலதாமுலகமேதியாமெவனென்றே
தெள்ளற்பாலதுகுரவராலறிவினாற்றீர. (௪)

வருந்துகிற்பதுதனையறிநெறியிலேமனத்தாற்
றிருந்துகிற்பதுகருமத்திலழுந்திலாச்செய்கை
பொருந்துகிற்பதுதீயவரல்லவர்புணர்ச்சி
யருந்துகிற்பதுநானென்பதாக்குகிற்பதுவே. (௫)

தீர்க்கத்தக்கதுநரம்பெலும்பெனுமுடற்றியக்கம்
பார்க்கத்தக்கதுமுழுதுயிர்க்குள்ளுறைபரம
மீர்க்கத்தக்கதேரிரவியினிடத்திலும்பாரி
னீக்கத்தக்கிலாப்புழுவினுஞ்சித்தொன்றேநிற்கும். (௬)

தாமதத்துடனிராசதஞ்சாத்திகமென்னு
நாமமுக்குணப்பிறவியுமுயற்சியானண்ணுஞ்
சேமமுத்தியைச்செய்திடுஞ்சாத்திகச்செய்கை
யிராமவுத்தமராகவவென்றுமீட்டுரைப்பான். (௭)

திதிப்பிரகரண முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-௭௬௬.

## உபசாந்திப்பிரகரணம்.

# சனகராசன்கதை.

---

சுரர்குருவின்மகனுரைத்தபடியேயிவ்வுலகெலாஞ்சொரூபமாகும்
விரவியநீள்பிறப்பிறப்பாமிகுமாயையிராசததாமதத்தைமேவும்
புருடர்தரித்திடவற்றுய்த்தூண்சுமக்குமண்டபமேபோலநிற்குந்
திரமுளசத்துவகுணத்துன் போல்வார்கள்சநநபயந்தீர்ந்துநிற்பார்.

வழுவறுசத்துவகுணத்தோர்தோலுரிக்குமரவென்னமாயாபாச
நழுவுவரொல்லாம்பிரமநாமதுவேயென்றெண்ணிநாமும்வேறே
முழுதுலகம்வேறென்னுமோகமொழிப்பாய்பிரமமூலச்சித்தி
லெழுவனகற்பனையெல்லாங்கடலிலலைபோலமெய்யாயில்லையன்றே

சோகமில்லைமோகமில்லைபிறப்பில்லைபிறப்பிறப்பிற்சுழல்வாரில்லை
யேகமெனவிங்கென்றுமுள்ளபொருளேயுள்ளதிரங்கவேண்டா
மூகமுறவருவனபோவனநினையேற்றுந்தனைகளொன்றுமில்லா
மாகனசத்துவகுணத்தோடொருவனாயிடரெல்லாமாற்றிநிற்பாய்.()

சமமாகிச்சொரூபத்தேநிலையாகித்திரமதியாய்ச்சாந்தனாகி, யமர்
மனனமௌனியாய்நன்மணிபோற்றெளிந்துதுயரனைத்துந்தீர்வாய்,
நிமலமுறநிகழ்காலத்தொழிற்செய்தியாவையினுநேயமின்றி,நமதெ
னக்கொள்ளுதல்விடுதலிரண்டுமறத்துன்பமெலாநாசஞ்செய்வாய்.

இனிப்பிறவாமுடிவானபிறப்பிலேமெய்ஞ்ஞானமெளிதிலுண்டா
ம், பனிச்சுடர்வெண்ணித்திலங்களுத்தமமாமூங்கிலல்லாற்படுவது
ண்டோ, செனித்தவரின்மேலோராய்நல்லோராய்மித்திரராய்த்தெ
ளிந்தோராகி,யனித்தமறுமுத்தராய்ஞானிகளாங்குணமெல்லாமவ
ணாச்சேரும். (ரு)

மெத்தென்றசரித்திரத்தினவர்தம்மையுலகெலாம்விரும்புந்தன்
மை, கொத்தொன்றுவனமூங்கிற்குழலிசையான்மகிழ்விலங்கின்கூ
ட்டம்போலு, மித்தன்மையாவருக்கும்பொதுமையினாலியம்பியதா
மிதனில்வேறாய்ச், சத்தென்றவழியிரண்டேழ்பவந்தீர்ப்பவர்க்கவ
ற்றைச்சாற்றக்கேண்மோ. (கூ)



தேசிகன்சொற்பிழையாமலனுட்டிக்கிற்பையப்பையத்தியக்கநீங்
கிப், பேசியசென்மத்தாதலடுத்தசிலபிறப்பினாலாதல்பேறும், மாச
றுவிற்பத்திசிறிதுண்டாகுமனத்தாற்றன்மனனத்தாலே, யேசறுமா
காசபலம்வீழ்வதுபோன்மெய்ஞ்ஞானமெளிதிலுண்டாம். (எ)

இவ்விரண்டிலாகாசபலம்போலமெய்ஞ்ஞானமியைந்ததன்மை,
செவ்வியவள்ளான்முன்னோர்கதையாலேயான்செப்பத்திருந்தக்கே
ட்பாய், தெவ்வுலகிலாபத்தென்றொன்றுமிலோன்விதரணத்தோன்
செல்வமிக்கோ,னவ்வியமில்விதேகநாடரசாள்வோன்சனகனெனு
மரசர்கோமான். (அ)

சற்குணத்தாற்கடலனையான்சக்கரத்தானெனவுலகந்தாங்குநீரா
னற்குணஞ்செய்வசந்தனாணறுமலர்சூழ்நந்தனத்தினயந்துமேவி
தற்குரியதந்திரர்கள்புறநிற்பத்தனியனாய்ச்சரிக்கும்வேலை
சிற்குரியமனமுடையசித்தர்கணம்பாடுவபண்செவியிற்கேட்டான்.

வெறியாரும்பொருப்புறைவோர்விழிப்புலத்தின்மேவாதோர்வி
ளம்புகீத,நெறியார்மன்னவன்கேட்டபடியுரைப்பநெடியவனேநினை
விற்கொள்வா, யறிவானுமறிபொருளுங்கூடியகூட்டரவிலெழுமறி
வாநந்தம், பிறியாதவான்மதத்துவத்தெழுந்ததாமதனைப்பேணல்
செய்வாம். (க0)

காண்பானுங்காண்பனவுங்காட்சியும்வாதனையுடனேகழலவிட்
டுச், சேண்பாவுகாட்சிக்குமுதலொளியாமச்சொருபஞ்சிந்தைசெ
ய்வா, மேண்பாலாமுள்ளதிலதெனுமிரண்டினிடையெய்தியிறவிலா
தாய், மாண்பானவொளிக்கெல்லாமொளியாமச்சொரூபத்தைமதி
த்தல்செய்வாம். (கக)

அகமகமென்றனைத்துயிரினிடத்துமிருந்தனவரதமுணாப்பதா
கி, நிகழொளியாயான்மதத்துவமானசொரூபத்தைநினைத்தல்செய்
வாந், திகழிதயகுகையுறையுந்தேவதையைவிட்டயலேதெய்வந்தே
டன், மிகவரியகவுத்துவத்தையெறிந்துசிறுமணிதேடும்வேட்கை
போலாம். (கஉ)

மாளாதகாதலெனும்வற்சநாபிக்கொடியின்வனத்தைச்சுட்டு, நீளா
சையனைத்துமறுத்தவர்க்கன்றேவிப்பயன்றானேராநிற்கும், கோ

ளான பொருளனைத்தின் முன்பொடு பின்பினிமையிலாக் குற்றங்க
ண்டு,மீளாதபாவனையாற்கட்டுண்பார்வேசரியேவேறொன்றன்றால்

எழுந்தெழுந்துசீறுகின்றவிந்திரியப்பாம்புகளையிதயந்தன்னி [ன்ன
லழுந்துவிவேகத்தடியால்வச்சிரங்கொண்டிந்திரன்வெற்படர்வதெ
விழுந்திடமோதுறவேண்டுஞ்சாந்தியினாற்சமமேவியிடர்தீர்நெஞ்ச
முழுந்துசுகவடிவாந்தற்பதநிலையைப்பெறுமிதுவேமுத்தியென்ன.

தெளிவுடையசித்தர்கணந்திகழ்வுறப்பாடியகீதந்தெளியக்கேட்
டுக், களிதருவெஞ்சினக்கருடனொலிகேட்டபாம்பென்னக்கலங்கி
மன்னன்,குளிர்பொழினின்றகமடைந்தானனைவரையும்விடைகொ
டுத்துக்கோயில்புக்கா, னளிர்சுதைசெய்மேனிலத்திலொருவனே
யிருந்துநனிநாடலுற்றான். (கரு)

பறக்கின்றபறவைகளின்சிறகென்னவனவரதம்பதைத்துலாவி,
யிறக்கின்றவுலகநடைநோக்கிவாய்விட்டிரங்கியியம்பலுற்றா, னறக்
கன்றியவத்திலுழன்றலமருமிவ்வுலகிடையானந்தோவந்தோ, நிற
க்கின்றமயக்கத்தாற்கல்லிடைகற்போலுருண்டுநெரிந்தேனந்தோ.

காலமொருகான்முடியாதிதனிடையெண்ணாறுண்டோர்கணமு
மில்லை, சாலவிதுதனைமதித்துவன்காதலிடைவீழ்ந்துதளர்வதேனோ
ன், றாலமதியாற் கெட்டவெனைப்போலவீனரார் சொல்லற்பாற்
றோ, சீலமறுவாணாளைப்பெரிதாகநினைவதேசீசீயந்தோ. (கஎ)

எல்லையிலாவண்டத்திலியானுளும்புவிநோக்கிலிறையுமில்லை,யல்
லலுறுமிதுபெரிதாவாதரித்துநிற்பதேயந்தோவந்தோ,புல்லிமையற்
றினிதாகியுதாரமாச்செயப்படாப்பொருளீதென்னத்,தொல்லுலகி
லொருபொருளுங்காணேனித்தொடர்ச்சிநிலையென்னேயென்னே.

தலைவர்தலைமேலுறைவோர்நாட்களினாற்றாழ்ந்தோர்க்குத்தாழ
வீழ்வர்,நிலையில்பெருமையையுறுதிநினைக்கின்றநெஞ்சேயின்னினை
வீதென்னே, தொலைவில் பெரும்போகங்கள் பெரியோர்கள் கிளை
யோடுந்தோன்றித்தோன்றி, யுலைவுறமாண்டார்முன்னாளிந்நாளிங்
கிவையனைத்திலுறுதியென்னே. (ககூ)

மண்ணுமென்னவருமவர்தனமுமாண்டன நுண்மணலையொக்கும்
விண்ணுமிந்திரருமவர்வாழ்வும்போயினவிண் மீனையொக்கு



மெண்ணும்பிரமருமண்டமும்பூதங்களுமிறந்தவெல்லையில்லைக்
கண்ணுமெவையெங்கேநின்வாழ்க்கைநிலையென்னேகவலுநெஞ்சே

செல்லாதமாயையிருளிரவிலேதேகமயத்தியக்கமான,பொல்லா
தநீள்கனவாஞ் சூனியத்திலிச்சையிறை பூண்டேனென்னிற், கல்
லாதபுல்லியனேன்சீசீநானனவரதங்காணுநாட்க, ளெல்லாம்போ
யினபோமாலிறவாதொன்றாய்நன்றாமெழினாட்காணேன். (உக)

நடுவின்முடிவினிலடியினன்றானபொருளொன்றுஞாலத்தில்லைப்,
படுபொருளெல்லாமிறப்பாமலத்தினாலேபூசப்பட்டதன்றோ, கடு
வினைகணாடோறுங்காய்துயரநாடோறுங்களையொன்றில்லாக்,கொ
டுமைகளேநாடோறுஞ்செய்கின்றாரறிவில்லார்குரம்பைக்கூத்தால்

பாலகனாயஞ்ஞானத்தழுந்துவனற்காளையாய்ப்பாவைமாராற்,
சாலவருந்துவன்விருத்தன்றானாகிக்குடும்பத்தாற்றளர்ந்துசாவன்,
மேலவிவனெக்காலத்தென்செய்வான்மாயக்கூத்திருந்தவாறே,ஞா
லமெலாமாடரங்காய்ப்பொறிமேளமாய்மனப்பேய்நடிக்குமன்றே.()

உள்ளத்தின்முடிமேலேயில்லாமைவீற்றிருக்குமுலகிலென்றுந்
தெள்ளுற்றநல்லறத்தின்சிரத்திலேயெப்பொழுதுந்தீமைவாழு
மெள்ளற்றவின்பத்தின்றலைமேலேதுன்பங்களிருக்குமென்றாற்
கொள்ளத்தக்கனவானகுற்றமிலாப்பொருளேதுகுறிப்புளேற்கே.

விழிப்பதுவுமிமைப்பதுவுஞ்சகத்தோற்றமொடுக்கமாமேலோரு
ண்டாற், பழிப்பரியவன்னார்முன்னென்போல்வாரொன்னென்றுபக
ரலாவ்,ரிழிப்பரியவிசித்திரமாஞ்சம்பத்துமாபத்தாமிதயங்காயி,லொ
ழிப்பரியவிசித்திரமாமாபத்துஞ்சம்பத்தாமுள்ளம்வேண்டில்.(உரு)

வெம்மாயவாழ்வன்றோதுயர்க்கெல்லாம்பிறப்பிடமாய்விளம்புகி
ன்ற, தம்மாவிங்கிதனிடையேயழுந்துமவர்க்கின்பமுளதாவதெங்ங
ன், மைம்மாயையென்னு மரம்பணையிலைபூகாய்பழத்தால் வரம்பற்
றோங்க, விம்மால்செய்மனம்வேராமிம்மனந்தான்சங்கற்பமென்ப
தாகும். (உசா)

சங்கற்பநாசத்தாலெளிதாகமனநாசந்தானேயெய்து, மங்குற்ற
மனமிறக்கிற்சநநமரணங்களெனுமரமுமாயு, மிங்கிப்பாலெனைத்தி
ருடுங்கள்ளனைக்கண்டேன்கண்டேனிவன்பேர்நெஞ்சம், பொங்கு
ற்றநெஞ்சத்தானெடுநாணொந்தேனின்றுபொன்றுவிப்பேன். (உஎ)

இத்தனைநாண்மனமுத்தைத்துளைத்திலேனின்றுதுளைத்தியைந்த
நூலாற், சித்திரமாய்க்கோத்தணிவன்முழுதுணர்ந்ததேசிகராற்றெ
ளிந்தேனெல்லாஞ், சுத்தபரமாநந்தந்தோற்றுவிக்குநல்லறிவாஞ்
சோதிபெற்றேன்,மெத்தவிவனெனதிங்கிவையெனும்பொய்யுள்
ளொழித்தேன்மீண்டுநோடேன். (உஅ)

பேதிக்குமனமென்னும்பெரும்பகையைமுழுவலியாற்பிளந்துவெ
ன்றேன், வாதித்ததுயரொல்லா மாற்றினேனுபசாந்த வாழ்வுபெற்
றேன், சாதித்தவிவேகமேயுனை வணங்கினேனென்றுசனகர்கோமா
ன், சேதித்தமனவலைவெல்லாமொழித்துத்தானேசித்திரம்போனி
ன்றான். (உகூ)

வாளாசித்திரம்போலநெடிதிருந்துசனகர்பிரான்மாய்த்துநெஞ்சை
மீளாநல்லுபசாந்தநிறைநெஞ்சாலுலகியல்பைமேவிப்பார்த்தான்
றாளாண்மையாலியற்றும்பொருளேதுகைக்கொள்ளத்தக்கதேது
கோளானகற்பனையென்சுபாவவறிவாமெனக்குக்குறிக்குங்காலே.

சுத்தமாய்ச்சொரூபமாமென்னுருவலால்வேறுதோன்றக்காணேன்
வத்தியான்வாராதபொருணயவேன்வந்தபொருளனைத்துந்தள்ளே
னித்தமாய்த்தன்னிலையினிற்குமெனதறிவுருவினிலையாநிற்பே
னுத்தவாறேதுவருமதுவருகவென்றழுந்தியொருமையானான்.(ஙக)

வானேகுகதிரிரவிநாளியற்றும்வாறென்னவந்துவந்து [ண்ணித்
தானேதோன்றியதொழிலைப்பற்றின்றிச்செய்துமெனச்சனகனெ
தீனேயவருகாலஞ்செல்காலமிமையளவுஞ்சிந்தைசெய்யா
னானேறுநிகழ்காலத்தோரிமைப்பினகைதலோடுலாவலுற்றான். ()

பேசியதன்விசாரத்தாற்சனகர்பிரான்பெரும்பேறுபெற்றதல்லால்
வாசியுளமற்றொன்றால்வந்ததல்லவாரீசமலர்க்கண்மாலே
யாசிலதாய்ச்செவ்வியதாய்த்தனதானவிசாரத்தாலடைவதல்லாற்
றேசிகரில்லாவீனர்செய்தொழிலாற்பெறலாமோசிற்சொரூபம். ()

புறப்பேறுகளைவேண்டியிபற்றுகின்றபுண்ணியத்தைப்புவியிலு
ள்ளோர், சிறப்பானநல்லறிவு மிகவேண்டுமென்று முதற்செய்யிற்
பேறு, மிறப்பானவாபத்துவிளைநிலமா யிருந்துதுயர்வேலையாகிப்,
பிறப்பானநச்சுமரவித்தாகும்பேதைமையைப்பிளக்கல்வேண்டும்.



இலங்கியசிந்தாமணியாமிதயமெனுஞ்சரக்கறையிலிருக்கும்போ
தங், கலங்கலிலாவிவேகியர்க்குக்கருதுபொருள் கற்பகம்போற்க
ணத்தினல்கும்; துலங்குவிசாரம்படைத்துப்பேதைமைபோய்நல்ல
றிவுதோன்றினோரை, விலங்குகவசத்தோரையம்புகள்போற்காமா
திவிகற்பந்தாக்கா. (ஙரு)

பரமாதித்தனைமறைத்துக்கறுத்தறிவற்றுக்களித்துப்படர்ந்துமீ
ண்டு, திரமானவகங்கார முகில்விவேகக்காற்றாற் சிதறிப்போகும்,
வரமானபதம்வேண்டிற்றன்மனத்தினசைமுதன்மாற்றவேண்டு,மு
ரமானபுவியைமுதலுழுதன்றோவிளைபயன்களுறுகின்றோ. (ஙசு)

சனகராசன்கதை முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - அ0உ.

# புண்ணியபாவனர்கதை.

மோகவற்சநாபிக்கொடிமுளைத்தெழுமூலஞ்
சோகமாசுணமிருந்தரசாள்வதோர்சூழ
லாகமேமுதலியானெனக்காணுமஞ்ஞான
மேகமாகியபராபரந்தோன்றினுவிறக்கும். (க)

அனித்தமிச்சகமென்பதைநாடொறுமகத்தி
னுனித்துநோக்கினர்சனகனைப்போலநுண்ணறிவாற்
றனித்தமெய்ப்பொருள்பக்குவத்தறிகுவர்தனத்தால்
மனித்தராற்கருமத்தினுற்றேவரால்வாரா. (உ)

சனனமஞ்சினர்க்கவருடைமுயற்சியேசரணுந்
தினமுமிங்கிவனெனுஞ்சிறுமைதான்சிதையி
லனகமாயுலகெங்குமாம்விசாலமுண்டாகு
மனனுறத்தனதுயர்ச்சிதான்காண்புறவருமால். (ங)

பற்றுவீடென்றிரண்டிற்பற்றலும்விடுதலுனு
முற்றவைமனத்துருபமுயர்பந்தமதுவேறில்லை
முற்றுறுபற்றுவீட்டின்மோகமுந்துயரும்விட்டுத்
துற்றுளபற்றுவீடுதுடைத்தசையாதுநிற்பாய். (ச)

மயலின்மையநித்தமின்மைமடமின்மைவருத்தமின்மை
செயலின்மைகருமமின்மைதியக்கின்மைவிகற்பமின்மை [மை
பயமின்மைதுவட்சியின்மைபகையின்மைகுறைவொன்றின்
கயமின்மைகடினமின்மைகடினமாய்க்கழறலின்மை. (ரு)

வீடுபெற்றிரண்டுநீத்தமேலவரிடத்துமேவி
நீடுவாதனைகளின்றிநிகழ்த்தியகுணங்கணிற்கும்
பீடுறுநினைவானூலாற்பிணிப்புற்றுப்பிறவிவேலை
யூடுறமயன்மீன்வாருமுயர்ந்தவாதனையாஞ்சாலம். (சு)

வாதனையென்னுமிந்தவலைபுந்திவாளாலீர்ந்து
மோதுசூறைக்காற்சிந்துமுகிலெனச்சிந்திநிற்பாய்
பாதவங்குடாரத்தாலேபடுப்பபோனெஞ்சைநெஞ்சாற்
றீதறமாய்த்துமேலாம்பதத்திலேதிரமாய்நிற்பாய். (எ)

ஏகுதல்வருதறுஞ்சல்விழித்திடலிருத்தனிற்ற
லாகியவெல்லாம்பொய்யென்றழுந்தியுள்ளாசைதீர்வாய்
சேகுறவலையுஞ்சித்தம்பகுதியாற்சித்தின்பின்னே
போகலூன்மணத்தாற்சிங்கந்தனைத்தொடர்பூசைபோலாம்.

மடங்கல்வீரியத்தாற்பெற்றதசைதின்னுமார்ச்சாலம்போற்
றொடர்ந்துசென்மனனுஞ்சித்தாற்றோன்றியபொருளைப்பற்றும்
படர்ந்துகாண்பவற்றைப்பற்றின்மனங்கெடாப்பந்தம்போகாத்,
திடங்கொள்காண்பவற்றைநீக்கிற்சித்தம்போய்முத்தியாகும். (கூ)

யானிவையிரண்டுமில்லென்றெண்ணிமேருவைப்போனிற்பா
யூனிறமில்லாவிண்போலுளத்தனாய்நல்லுளத்தே
தானும்வையமுமாய்க்காண்பான்காண்பனதம்மினூடே
மேனிகழ்காட்சியென்னுநின்னைநீவிடாதுதேர்வாய். (க0)

இனியனவினிமைகொள்வானிரண்டும்விட்டிவற்றினூடே
தனிநிகழினிமைநாடித்தற்பரமயமாய்நிற்பாய்
நனிபலதுய்ப்பான்றுய்ப்பதிரண்டுக்குநடுவேதானே
யனிசம்பற்றின்றிநிற்குமதுபற்றியதனுணிற்பாய். (கக)

காதலாற்கட்டிலுய்யார்கயிற்றினாற்கட்டிலுய்வா
ராதலாலாசைக்கட்டையசங்கற்பத்தறுப்பாய்நானென்



றோதுபாவனையைநானென்றுதோர்வாளால்வீட்டி
யேதமில்சுபாவம்பாவித்தெழுபவமிலாவீடெய்தி. (கஉ)

அனைத்துயிர்க்கச்சமில்லாநிலைநிற்பாயதுலவென்ன
வினைத்தொடரகம்பாவத்தின்வேட்கைதீரொன்றநின்சொன்
னினைத்திடின்மிகவுமாழநீடகங்காரநாசந்
தனைச்செயிலுடலமென்னுமேதுவைத்தவிர்க்கின்றேனால். (கங)

அகமெனலொழிக்கிற்றானேயங்கமுமடியிலீர்ந்த
நகமெனவிறக்குமன்றேயென்றுயர்காதன்கூற
மகமுனியுரைப்பான்வள்ளால்வாதனைமாற்றுமாறு
நிகழ்வுறுதேயஞேயமிரண்டெனநினைப்பர்கற்றோர். (கச)

இந்தநம்பொருட்குவாணாளியாமிவையெமக்குவாணா
ணந்துறுமிவற்றாலன்றிநாமில்லைநம்மாலன்றி
வந்தவிப்பொருள்களில்லையெனுமனத்துறுதிமாற்றிப்
புந்தியாலுசாவியாமும்பொருள்களும்வெவ்வேறென்றே. (கரு)

பொருளினோமல்லநாமுநமதல்லப்பொருளுமென்றே
தெருளுற்றுட்குளிர்ந்தியாவும்விநோதமாய்ச்செய்யுநெஞ்சான்
மருளறுநிச்சயத்தால்வாதனைவிடுதெறானே
யருள்பொழிமேகமொப்பாய்தேயமென்றறிவாயன்றே. (கசு)

தனதுவாதனைமாண்டெல்லாஞ்சமமதாநெஞ்சாற்பண்ணி
யெனதெனாதுடலைநீக்கினிந்தவாசனைநாசந்தா
னனகமாஞேயமாகுமகங்காரமயமதான
வினவுவாதனையைமுற்றும்விநோதமாய்விட்டோர்மேலோர். (கஎ)

தீரராமவரோதேயத்தியாகஞ்செய்சீவன்முத்தர்
வேரறத்தொழில்களோடேவாதனைவிட்டுள்ளாறித்
தூரமாஞேயம்விட்டோர்துகளறுமுத்தராகும்
வீரனேயிவையிரண்டின்விடுதியுந்தம்மிலொக்கும். (கஅ)

தேயஞேயத்தின்றியாகங்கண்முத்தர்பாற்செறிவ
தேயஞேயத்தின்றியாகங்கள்பிரமத்தைச்சேர்ந்த
தேயஞேயத்தின்றியாகங்களிடரெலாந்தீர்ந்த
தேயஞேயத்தின்றியாகங்கள்தேடருஞ்செல்வம். (ககூ)

சூழுறுமின்பதுன்பந்தொடர்வுறிலொருகாலத்து
மாழுதன்மிதத்தலில்லாவவர்களேசீவன்முத்தர்
கேழுயர்மகிழ்ச்சியச்சஞ்சினமின்மைபொருமைகேத
மூழுறுமிவற்றைநோக்காவுளத்தினர்சீவன்முத்தர். (உ0)

சுழுத்திபோலாநின்றபாவனைத்தொழிலினாலே
பழுத்தநெஞ்சதனைநீங்காச்சாக்கிரம்பயில்வோர்நாளும்
விழுத்தகுகலைகள்சூழ்ந்தமதியெனமேலோர்மேவ
முழுத்தமும்பிரிவிலோரோமுத்தரொன்றுரைக்கத்தக்கோர். (உக)

புறப்பொருள்விட்டாலுள்ளேபூண்டமாலென்றுசொல்வர்
மறப்பறவனைத்தும்விட்டான்மாண்டமாலென்றுசொல்வர்
திறப்படவெனக்கீதாகவென்றெழுஞ்சிந்தையாசை
துறப்பில்பொன்விலங்காமித்தைத்துவக்கறத்துடைத்தல்வேண்டும்

சத்தசத்தென்னப்பட்டசகலபாவனையிலென்றுங்
கொத்தறவாசைமாற்றிக்குறைவில்பேருளத்தனாகிச்
சுத்தநல்லுதாரமானசொரூபத்தினிற்பாய்பெத்த
முத்தமாமாசையின்பதுன்பங்கண்முழுதுநீக்கி. (உங)

பேனமுந்திரையுமில்லாப்பெருங்கடல்போலநிற்பாய்
மானவகேண்மற்றென்றுமாசிலாவிசாரமுள்ளோர்க்
கானநிச்சயநாலுண்டாமடிதலைமட்டுநானே
யீனலுற்றவர்தாய்தந்தையென்பதோரறுதிதானே. (உச)

கன்றியபந்தமாகுமிதுமெய்ம்மைகருதாவாற்று
னின்றனவனைத்தின்மேலோனெல்லின்வாலினுஞ்சற்றோநா
னென்றிரண்டாவதானநிச்சயமெய்துமென்னி
லொன்றியமுத்தியுண்டாமுத்தமர்க்குடைமையாகும். (உரு)

புவியெலாமெனதுருபம்பொன்றுதலிலனானென்று
குவிவறக்காண்டன்மூன்றாநிச்சயங்குறைவில்வீடா
மவியுறுமுலகுநானுமனைத்தும்பொய்விண்போலென்றுந்
தவிர்கிலமென்றனுலாநிச்சயந்தனிவீடாகும். (உசு)

பெத்தவாசையதாமுன்னேபேசுநிச்சயமதொன்றுஞ்
சுத்தவாசைகளாமூன்றுநொய்யவாய்த்துகளில்சீவன்



முத்தர்பால்விளங்குமிந்தமூன்றினுளெல்லாநாதியிற்செய்வா
றெத்ததோர்நிச்சயத்தையுறிற்பின்னையுள்ளவருத்தமெனுங் (ஙகூ)

சூனியம்பகுதிமாயைபிரமஞ்சிற்சோதிநாயாவையாவென்னு
மீனமில்புருடனுன்மாவீசானன்சிவமேநீமாற்றானகியெரிமிதி
மானவையென்னலாமொன்றிரண்டெரின்முன்னவனைநோக்
வானுயர்சகம்படைக்கும்விநோதத்தமுன்னோன், மின்னேரு

ஒன்றெனும்பரமரூபத்தொருசத்தியெனயாமல்விதியேசெய்
நின்றெழுகின்றதன்றேநின்னதுபிறரதே. (சு0)

பொன்றியதிருந்ததென்றும்பொருள்களிற்பாய்மூடாவிளவற
லென்றுமின்பத்துன்பங்களிதயத்திலூன்றனைநோக்கிநெ
யாதினுமுயர்ந்துமாளாப்பதம்பற்றியிதயமென்றுநின்பிதாநின்
சீதமாயின்பத்துன்பஞ்சேர்கிலார்பிறப்பிற்சேராவைக்கேளா
சாதுகொள்பகைகொளாத்தல்தஞ்சம்வல்லபங்ாதிலதாம்வீ
ரோதியநெறியிற்செல்லுமுத்தமர்பிறப்பிற்சேரார். (சுக)

இழிவுயர்விரண்டுமெண்ணரிச்சைகோபங்களெய்தாரநவமதுத்தள
தொழிறெழிலிலாமைவிட்டோர்துன்னியபிறப்பிற்சேராதா
றொழில்பெறவிளங்கியார்க்குமினியனவினிதிற்சொல்வோய்
ரழிபொருளனைத்தின்சால்பையறிந்துளோர்பிறப்பிற்சேரார்.

வேறு.

தேயவாதனைநீங்கிப்பூர்ணமாகித்தெளிந்தவிழியிமையாமற்சீவன்முத்தி, யாயபாவனையாலேசொரூபமேவியனவரதமுலகில்விளையாடுவீரா,மாயவாசையைநீங்கிப்பற்றறுத்துவாதனைபோயுள்வெளியாய்வாகியத்தே, மேயவாசாரமெலாமியற்றியென்றும்வேண்டியவாறுலகில்விளையாடுவீரா. (ஙஉ)

சகத்திலேபுறத்தொழிலாரம்பித்துத்தனியிதயத்தாரம்பஞ்சற்றுமின்றி பகத்திலேசெயாதோனாய்ப்புறத்தேசெய்வோனாகியேயுலகில்விளையாடுவீரா, வகுத்தவகங்காரம்போய்ச் சித்தந்தேறிவானம்போனெய்தாகிமாசொன்றற்று, வெகுத்துவமாமடையாளமனைத்துமின்றிவேண்டியவாறுலகில்விளையாடுவீரா. (ஙங)

சூழுறுமின்பதுன்பந்தொடர்வுறிலொருகாலத்து
மாழுதன்மிதத்தலில்லாவவர்களேசீவன்முத்தர்
கேழுயர்மகிழ்ச்சியச்சஞ்சினமின்மைபொருமைகேத
மூழுறுமிவற்றைநோக்காவுளத்தினர்சீவன்முத்தர். (உ0)

சுழுத்திபோலாறிநின்றபாவனைத்தொழிலினாலே
பழுத்தநெஞ்சதனைநீங்காச்சாக்கிரம்பயில்வோர்நாளும்
விழுத்தகுகலைகள்சூழ்ந்தமதியெனமேலோர்மேவ
முழுத்தமும்பிரிவிலோரோமுத்தரொன்றுரைக்கத்தக்கோர். (உக)

புறப்பொருள்விட்டாலுள்ளேபூண்டமாலென்றுசொல்வர்
மறப்பறவனைத்தும்விட்டான்மாண்டமாலென்றுசொல்வர்
திறப்படவெனக்கீதாகவென்றெழுஞ்சிந்தையாசை
துறப்பில்பொன்விலங்காமித்தைத்துவக்கறத்துடைத்தல்வேண்டும்

சத்தசத்தென்னப்பட்டசகலபாவனையிலென்றுங்
கொத்தறவாசைமாற்றிக்குறைவில்பேருளத்தனாகிச்
சுத்தநல்லுதாரமானசொரூபத்தினிற்பாய்பெத்த
முத்தமாமாசையின்பதுன்பங்கண்முழுதுநீக்கி. (உ௩)

பேனமுந்திரையுமில்லாப்பெருங்கடல்போலநிற்பாய்
மானவகேண்மற்றொன்றுமாசிலாவிசாரமுள்ளோர்க்
கானநிச்சயநாலுண்டாமடிதலைமட்டுநானே
யீனலுற்றவர்தாய்தந்தையென்பதோராறுதிதானே. (உ௪)

கன்றியபந்தமாகுமிதுமெய்ம்மைகருதாவாற்று
ணின்றனவனைத்தின்மேலோனெல்லின்வாலினுஞ்சற்றோநா
னென்றிரண்டாவதானநிச்சயமெய்துமென்னி
லொன்றியமுத்தியுண்டாமுத்தமர்க்குடைமையாகும். (உ௫)

புவியெலாமெனதுரூபம்பொன்றுதலிலனானென்று
குவிவறக்காண்டன்மூன்றாநிச்சயங்குறைவில்வீடா
மவியுறுமுலகுநானுமனைத்தும்பொய்விண்போலென்றுந்
தவிர்கிலமென்றனலாநிச்சயந்தனிவீடாகும். (உ௬)

பெத்தவாசையதாமுன்னேபேசுநிச்சயமதொன்றுஞ்
சுத்தவாசைகளாமூன்றுநொய்யவாய்த்துகளில்சீவன்



முத்தர்பால்விளங்குமிந்தமூன்றினுளெல்லாநா[illegible]னன்
றொத்ததோர்நிச்சயத்தையுறிற்பின்னையுள்ள[illegible]சாரா. (உ௭)

ஞனியம்பகுதிமாயைபிரமஞ்சிற்சோதிஞா[illegible]
மீனமில்புருடனான்மாவீசானன்சிவமேரி[illegible]
மானவையென்னலாமொன்றிரண்டெ[illegible]ல்பேதத்தால்
வானுயர்சகம்படைக்கும்விநோதத்த[illegible]ருமொன்றே.

ஒன்றெனும்பரமரூபத்தொருசத்தியெ[illegible]மையாலே
நின்றெழுகின்றதன்றேநின்னதுபிற[illegible]ன்றும்
பொன்றியதிருந்ததென்றும்பொருள்க[illegible]கருமந்தன்னி
லென்றுமின்பத்துன்பங்களிதயத்திலூ[illegible]வண்டாம். (உ௯)

யாதினுமுயர்ந்துமாளாப்பதம்பற்றியிதய[illegible]றுஞ்
சீதமாயின்பத்துன்பஞ்சேர்கிலார்பிறப்பிற்[illegible]ர்
சாதுகொள்பகைகொளொத்தல்தஞ்சம்வல்[illegible]களுள்ளோ
ரோதியநெறியிற்செல்லுமுத்தமர்பிறப்பிற்சே[illegible] (௩0)

இழிவுயர்விரண்டுமெண்ணாரிச்சைகோபங்களெய[illegible]
தொழிற்றொழிலிலாமைவிட்டோர்துன்னியபிறப்பிற[illegible]சர
ரெழில்பெறவிளங்கியார்க்குமினியனவினிதிற்சொல்வோ
ரழிபொருளனைத்தின்சால்பையறிந்துளோர்பிறப்பிற்சேரார்.

வேறு.

தேயவாதனைநீங்கிப்பூர்ணமாகித்தெளிந்தவிழியிமையாமற்சீவன்முத்தி, யாயபாவனையாலேசொரூபமேவியனவரதமுலகில்விளையாடுவீரா,மாயவாசையைநீங்கிப்பற்றறுத்துவாதனைபோயுள்வெளியாய்வாகியத்தே, மேயவாசாரமெலாமியற்றியென்றும்வேண்டியவாறுலகில்விளையாடுவீரா. (௩உ)

சகத்திலேபுறத்தொழிலிலாரம்பித்துத்தனியிதயத்தாரம்பஞ்சற்றுமின்றி [illegible]கத்திலேசெயாதோனாய்ப்புறத்தேசெய்வோனாகியேயுலகில்[illegible]ளயாடுவீரா, வகுத்தவகங்காரம்போய்ச் சித்தந்தேறிவானம்போனெய்தாகிமாசொன்றற்று, வெகுத்துவமாமடையாளமனைத்துமின்றிவேண்டியவாறுலகில்விளையாடுவீரா. (௩௩)

இதமான ரியாய்க்கடிஞசாரமின்றியாசாரங்கட்கெளிதுபின் போய், விதம் வனத்துக்குஞ்சார்பைநோக்கிவேண்டியவாறுல கில்விளையாடுவ் புதனுகிரிராசைதனையுள்ளேதேக்கிப்புறத்தே யாசையிற்றெழு ன்றள்பூண்டான்போலா, யதனுளுட்சீதளமாய்ப்பு நம்வெய்தாகியன ரீங்குலகில்விளையாடுவீரா. (௫௪)

இவன்சுற்றனிவ ழ்ந்த கவனிவனுனென்னுமிவ்வெறும்பொய்யிரா மசியிறையுமெண்ணே லவம்பற்று கொய்யமனத்தவர்க்கிவ்வாறும திந்தோர்க்குச் சகமு முழுதுமகலாச்சுற்ற, நிவந்துற்றபலகோடிபவ மோகத்தானிபகைகு றவென்பர்நிமிடந்தோறு, முவந்துற்றமயக்கி துவாம்பரமார்த்த தானுலகெல்லாம்பகையாகுமுறவுமாகும். (௫௫)

இதுபொருட் ாவிதிகாசமொன்றுகேள்பண்டியைந்ததுகங்கை யின்கரையினி டிமைந்த, ர துலமயேந்திரகிரியினயலேவாழ்வோ ரருந்தவத்தே ார்தீர்க்கதவனளிக்கவந்தோர், சதுர்மறைதேர்புண் ணியபாவன ரென்றுள்ளார் தந்தையொடு கங்கையின்பாற்றவஞ்செ ய்நாளிற், பொதுவுறச்செய்தவப்பயனுற்காலமுற்றிப்புண்ணியனும் ண்ணி யவான்போதம்பெற்றுன். (௫௬)

பு வுங்கவன்பின்னவனுனபாவனென்போனறிவுடைமைபாதியள தலாலே, செங்கதிரோனுதிப்பதன்முன்னருணன்றேன்றச்செ கமலங்கிண்கிணிவாய்ச்செய்வதொத்துத், துங்கவறியாமையுமெய் விடுமின்றித்தோளாவெந்திரம்போலத்துவண்டுநின்றுன், பொங்கு தவத்தீர்க்கதவனென்னுந்தந்தைபோகத்திலிச்சையெலாம்புந்திதீ ர்ந்தான். (௫௭)

காலமேகாரணமாய்க்குடும்பவாழ்விற்காதலொழித்தறச்செறிந் தகாயந்தன்னைச், சாலமிகுதொழிற்பறவைக்கிடமாங்கூட்டைச்சா னவியின்கரைவரையிற்றுனேதீர்ந்தான், கோலியொருசுமைசுமப் பான் குறித்தவெல்லைக் கொண்டுபோய்ப் போடுவபோற்குரம்பைப் போட்டு, மாலுறுபற்றென்றின்றிப்பூவினுற்றம்வானுறல்போற்பர மபதவாழ்வுபெற்றுன். (௫௮)

தொழிலின்றிக்காட்சியெனுந்துன்பமின்றித்தொல்லறிவுதோன் றிடமாஞ்சொரூபம்பெற்ற, வழிவின்முனியிறத்தலுமேயவன்றன் பன்னியம்புயநின்றகலளிபோலங்கம்விட்டாள், விழிகணிகர்தாய்



தந்தையிறப்பக்கண்டுமேற்செயவேண்டியகிரியைவிதியிற்செய்வா ன், வழிபடுபுண்ணியன்முயன்முன்பாவன்முனும்வருத்தமெனுங் கடற்புகுந்துமயங்கலுற்றுன். (௫௯)

அன்னேயன்னேயென்னுமென்னையீன்றவையாவையாவென்னு மந்தோவந்தோ, வென்னேயென்னேயென்னுமாற்றுனுகியெரிமிதி த்தாற்போற்கானமெங்குமோடுந், தன்னேரின்முன்னவனைநோக் கித்தேறுன்றம்பிமிகத்தளர்வுற்றுன்றளராமுன்னேன், மின்னேரு முடற்கிறத்தலியல்பேயென்றுவேறெுன்றுநினையாமல்விதியேசெய் தான். (௬0)

மறைநெறிகண்முடித்ததற்பின்சோகத்தாலேவாய்மூடாவிளவற னைவந்துசார்ந்து, நிறையறிவாம்புண்ணியன்பாவனனைநோக்கிநெ ஞ்சழிக்குந்துயரமைந்தாநீத்தலென்னே, பொறைமிகுநின்பிதாநின் னதன்னையோடும்பொருந்தியிருந்துளபதத்தின்பொலிவைக்கேளா ய், குறைவுநிறைவிலதென்றுந்தனதாய்த்தானுய்க் கோதிலதாம்வீ டெனும்பேர்கூறவற்றும். (௬௧)

அனைவருக்குமேவுமிடமதுவேயாகு மறிஞருக்குமெய்யுருவமது வேயாகுந், தனையகலாவப்பதத்தில்வாழுந்தாதைதனைநோக்கித்தள ருமதுதகவோதம்பி, துனைபுனவினேட்டத்துக்கெய்தும்பள்ளத்தொ குதிபோற்பிறவிதொறுந்தொடர்பாய்ப்போன, வனையுநின்றுய் தந்தைக்கிலக்கமுண்டோமனைமக்கள்சுற்றமொருமட்டுண்டாமோ. (௬௨)

பருவங்கடொறும்பெரியவனத்திற்காய்க்கும்பலங்கள்போற்பவங் கடொறும்பரந்தசுற்றங், கருதுங்காலிறந்தவவர்க்கிரங்கவேண்டிற் கற்பமளவலறினுமோர்கரையுண்டாமோ, சொருபமிலாவஞ்ஞான க்கானன்மேட்டிற்றெடர்ந்த வாதனைக்கோடைச் சுழல்வெங்கான ற், பெருகுநீர்சுகாசுகமாந்திரைகண்மோதிப்பேதமொருகரையின் றிப்பிறழுமன்றே. (௬௩)

இல்லுறவுபகைநேயங் கோபமாசையிழிவுயர்வாதிகள்வடிவாயெ ழுந்தஞாலம், புல்லுறுதன்னுமமாத்திரத்தினலேபொலிந்துவிரிகி ன்றதல்லாற்புறனிலுண்டோ, நல்லுறவாகினைத்திடினல்லுறவேயா வர்நண்ணுராய்ப்பாவிக்கினண்ணுராவர், கொல்லுறுநஞ்சமுதிரண் டின்குணங்கள்போலுங் குறித்திடுபாவனைக்கட்டுக்குலைந்தாலுண் டோ. (௬௪)

ஒன்றிலேதோன்றியனைத்துருவமானவுணர்வுக்குப்பகையுறவெ
ன்றுரைப்பதெங்ங, னின்றியொழிதசைபுண்ணீர்தோல்கண்மேய்
ந்தவெலும்புப்பஞ்சரந்தன்னிலியாமாறொன்று, நின்றிவணீநின்மன
த்தானினைந்துநோக்காய்நிமலமாம்பரமவிழிநெறியானேக்கிற்,பொ
ன்றுதுயர் நீயில்லைநானுமில்லைப் புண்ணியபாவன னெனல்பொய்ப்
போதந்தோன்றும். (௬௫)

ஏகியதீவுகடோறும்பிறந்தசென்மமெண்ணவொண்ணுவிந்நாவற்
பெருந்தீவத்திற், கோகிலமாய்முன்பிறந்தாய்விலங்குமேகங்குன்று
மரமூர்வனபுட்குலங்கடம்மிற், போகிய சென்மத் தொகுதி புகல
வொண்ணுப்பொருந்துமவற்றுன்கிளையாய்ப்போனோர்க்கெல்லா, மா
குலமுற்றிலையென்னீயவற்றின்மட்டோ வனந்ததேசப்பிறவியறை
யக்கேளாய். (௬௬)

கோசலத்துந்தெசார்ணவத்தும்பௌண்டரத்துங்குச்சரத்துந்
துழாரத்துங்கோகனத்தும், போசலத்துமேகையத்துஞ்சாளுவத்
தும்பூபதியாய்வானரமாய்ப்புழுவாய்ப்புல்வாய், மாசலத்திற்கரண்
டமாய்ப்பதங்கமாகிமாசுணமாய்வேசரியாய்மட்டில்சென்ம, நீசகல
வாதனையாற் பிறந்தபோதினின்கிளைஞர்க்கிரங்காதநீதியென்னே.

அளவிறந்தபிறவிதொறும்பிறந்தோர்க்கெல்லாமன்னைதாதையை
யெண்ணிலகன்றகானிற்,கிளர்மரங்கடருஞ்சருகையெண்ணவற்று
ங்கேதமுறக்கணக்கில்லைக்கேளாய்மைந்தா, தளர்வின்றிப்பாவாபா
வனைகளின்றிச்சராமரணமற்றவுனைச்சங்கியாதே, யுளமுறநோக்
காய்துயர்விட் டஞ்ஞானத்தையொழித்துணரிலுள்ளபடியுன்னைக்
காண்டி. (௬௮)

உன்னுருவைநீகாணுஞானக்கண்ணிலொன்றலாவாசையெனுங்
காசமூறு, மன்னதுதீர்த்துளக்கமலத்துள்ளேநொய்யவறிவுடையவு
ன்மனத்தாலுன்னலுன்னை,யின்னபடியெனநோக்கிமயக்கமெல்லா
மிறையுமறவொழித்தின்பமெய்திநிற்பாய், பின்னவனேயெனமுன்
னோனுரைத்தானென்றுபெருந்தகைக்குவசிட்டமுனிபேசினனே.

புண்ணியபாவனர்கதை முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-அ௱௪க.

# மாவலிகதை.

புண்ணியனுரைத்தஞானம்பொலிந்தபாவனன்றனுள்ள
நண்ணியவிடியற்கண்டஞாலம்போல்விளங்கித்தோன்றத்
திண்ணியவிருவர்தாமுஞ்சித்தராய்விவேகஞானத்
தெண்ணியகரையையெய்தியியம்பியவனத்திருந்தார். (௧)

வேண்டியகாலமெல்லாம்விநோதமாம்விளையாட்டெய்தி
யீண்டியகாலஞ்செல்லயாக்கைதீர்வீட்டிலெய்தித்
தூண்டிடுதிரிநெய்யில்லாச்சுடர்கள்போற்சாந்தமுற்றார்
மாண்டிடுமுயிர்கட்கெல்லாமரபிந்தமரபுபோலாம். (௨)

அனந்தமாம்பிறப்புற்றுருக்கிலமுமயலன்றாகிற்
சினந்திடனயத்தல்வேண்டாவாதலாற்செறிந்தவாசைக்
கனந்தனைவிடுவதல்லாற்கதித்துறவளர்க்கலாகா
மனந்தனில்வளர்க்கிற்சிந்தைவன்னிக்குவிறகாமன்றே. (௩)

இச்சையாம்விறகுமாண்டாலெண்ணமாம்வன்னிமாளு
நிச்சயமாகுந்தேயத்தியாகமாநெடுந்தேரோறி
மெச்சியவுதாரக்கண்ணால்வேட்கையான்மிகவும்வாடுங்
கொச்சைஞாலத்தைநோக்கிக்குறைவறவிருப்பாய்தீரா. (௪)

வேறு.

நொய்யதாயொருமயலின்றிநோயெலாநீங்கி
மெய்யதாகியபிரமமாநிலையிதுவீரா
வையமின்றியிந்நிலையுறிலறிவிலரோனு
மையன்மேவலரிராமநீயிவ்வகைவாழ்வாய். (௫)

நல்லபுந்தியும்விவேகமுமெனவிருநண்பா
லல்லறீர்ந்திடுமொருவனாயென்னினுமணுகிற்
சொல்லுபல்பொருட்சுற்றங்கடெக்கறத்தீர்ந்து
புல்லுதிண்மையினலன்றித்துயரொலாம்போகா. (௬)

மயலிலாமையானூல்களான்மகத்துவமுதலா
முயர்குணங்களால்வருந்தியுமனத்தினையுய்க்கிற்

றுயர்கணீங்குமூவுலகுறுசெல்வமுந்தொக்குப்
பயனளிக்கினுமுயர்வுறுமனமெனப்பயிலா. (எ)

மனநிறைந்திடலமுதமாய்நிறைந்திடும்வையந்
தனதுதாட்செருப்புலகெலாந்தோன்முச்சுந்தரம்போற்
கனநிராசையானிறையுநெஞ்சாசையிற்கவிழா
தினமுமாசையானிறைமனங்குறைவென்றுந்தீரா. (அ)

அகத்தியன்கவர்கடலெனநன்னெஞ்சையழிக்கு
மிகுத்தமாவிலாமனமெனநிறைமதிவிளங்காப்
பகுத்தபாற்கடனிறைவுருப்பரிமளக்கோக
னகத்தினையகிதிருமுகநலம்பெறத்தோன்றா. (கூ)

மதியைமேகம்போல்வெண்டலச்சுதையினைமைபோ
லதிகநன்னெஞ்சையாசையாம்பேயழகழிக்கும்
பொதியுமாலெலாநீக்கிவன்பவப்பயம்போக்கி
முதிர்மனத்தின்மால்பிணிப்பறின்முத்திவேறுளதோ. (க0)

இன்னதன்றெனிலிராகவமாபலியென்ன
நன்னதாகியபுந்தியான்ஞானமேநேர்வா
யன்னதேநலனென்றலுமனையதேதென்று
சொன்னமாமுனிதன்னையேயிராமனுஞ்சொன்னான். (கக)

வினாயவள்ளலுக்கருந்தவனுத்தரம்விளம்புந்
தனாதுதோள்களாலுலகெலாமஞ்சுறச்சயித்தோன்
பினாகிசார்ங்கியைமுதலினர்தாழ்வுறப்பெரியோ
னனாதியாமெனப்பாதலத்தரசுசெய்யதுலன். (கஉ)

மாவலிப்பெயரானுயர்விரோசனன்மைந்த
னாவலிப்புறுகோடிபத்தாண்டரசானான்
காவலிற்றிகழ்மேருவின்சிரமணிகதுவு
மேவலிற்பொலிசாளரமேனிலமேவி. (கங)

ஒருபகற்றனியிருந்தனனிவையிவையுணர்ந்தான்
பெருகுபோகங்கண்முனிந்தனன்பிறவியைநினைந்தான்
பொருவின்மூவுலகங்களிற்போகங்கணெடுநாட்
பருகநல்குநம்பேரரசாலென்கொல்பயனே. (கச)



எய்துபோதினிலினியவாயெங்ஙனேயெனினு
னொய்தினீங்குமிப்போகத்தினின்பமேநுவலி
னெய்தனாக்கியரின்பமுநெருநல்போலின்றுஞ்
செய்தசெய்வதேயல்லதுகண்டிலஞ்செயல்கள். (கரு)

உண்டவின்பமேமீளவுமுண்கின்றதொருநாட்
கண்டகாட்சியேமீளவுங்காண்கின்றதுவந்து
கொண்டகோலமேமீளவுங்கொள்கின்றதென்றால்
விண்டமேலவர்நாணுறுதொழிவரோவெறுத்து. (கசு)

அருந்துமட்டினிதென்றதேமீண்டுமீண்டருந்தித்
திருந்திடாதபுன்சிறுவர்போற்செயலறியாது
வருந்துகின்றனநாள்பக்கமாதமாண்டுகெங்கள்
பொருந்திவந்ததேயல்லதுபுதிதொன்றும்வாரா. (கஎ)

செய்யத்தக்கனயாவையுஞ்செய்துமிச்செயலா
லுய்யப்பெற்றதென்செயன்மறுத்திலாததொன்றுலகி
லையப்பாடறயாதினாலெய்துமப்பொருடான்
மையப்போகத்தாலொழிந்துமேல்வருநெறியாதே. (கஅ)

அழிவிலாததாயன்னியமாகியவதுசேர்
வழியதேதெனச்சிந்திப்பான்மனத்தொன்றைநினைந்து
மொழியலுற்றனனறிந்தனமென்றொருநொடியில்
விழிபெருத்திடப்புருவமேலேற்றினன்வியந்தான். (ககூ)

தன்னதுள்ளூறநினைத்ததுவிளம்பினன்றானே
முன்னமிங்கியான்கேட்டனன்முழுதுணர்முதன்மை
யென்னரும்பிதாவிரோசனன்றன்னையிப்படியே
யன்னவன்புகன்றனனெனவிவையெலாமறைவான். (உ0)

ஐயதுன்பமுமின்பமுமென்பனவனைத்தின்
மையலியாவையுமடிந்ததோரிடமெதுமனத்தின்
வெய்யமோகந்தீரிடமெதுவேட்கைகளெல்லாங்
கையறப்பட்டவிடமெதுகருணையாலுணாயாய். (உக)

நிராசையாகியேயிளைப்பெலாநீங்கிடமேது
விராவுபேரின்பத்தழகிதாய்விரிவிடமேது

பராபரந்தெளிந்துணர்ந்தநீபகர்தியென்னெஞ்சை
யராவுதுன்பம்விட்டிளைப்பெலாமாறுதற்கென்றேன். (௨௨)

எந்தையப்பொழுதுரைசெய்வான்மைந்தகேளியம்ப
வந்தமற்றறவிசாலமாயளவறவகன்று
சுந்தரத்ததாந்தேசமுண்டண்டத்தின்றொகுதி
வந்துதித்திருந்திறப்பதற்கிடமதாய்வயங்கும். (௨௩)

ஆயதேயத்திலைம்பெரும்பூதமுமில்லைச்
சேயகுன்றில்லைவனமில்லைத்தீர்த்தங்களில்லைத்
தூயதேவரோமுதலியதொல்லுயிரில்லை
நாயகன்பெருஞ்சுடரொனுமொருவனேநண்ணும். (௨௪)

முழுதுங்காண்பவன்முழுதினுஞ்செறிபவன்முதல்வன்
பழுதில்சாந்தனாய்நிறைந்துவாளாவுறைபண்போன்
வழுவிலாவிவனாக்கியமந்திரிவசத்தாற்
றழுவுசெய்கைகளியாவையுநடத்திடுந்தானே. (௨௫)

இல்லதுள்ளதாமுள்ளதுமில்லதாமிமைப்பிற்
புல்லுமந்திரிநினைத்திடிலிவனொன்றும்புசிக்க
வல்லதில்லையொன்றறிகிலன்மன்னனைவிடாது
செல்லுந்தன்மையாற்கேவலமனைத்தையுஞ்செய்யும். (௨௬)

இந்தமந்திரிதன்னெதிரியாவையுமியற்ற
வந்தமன்னவனென்றுமேகாந்தத்தனாகு
மைந்தவென்றுரைத்தருளியபிதாவைநான்மகிழ்ந்து
புந்தியாலந்தவகையெலாம்வினவினேன்புகழ்ந்து. (௨௭)

அறவிலாசமாயாதியும்வியாதியுமின்றி
நிறைவிதானவத்தேசமேததுதனைநேருந்
திறவியாததுயாதினாலெய்துமத்தேசத்
திறவிலாதவம்மன்னனார்மந்திரியாவன். (௨௮)

புவனமியாவையும்வினோதத்தாலடர்த்தவென்புயத்தா
லவனம்மந்திரியுடனடர்ப்புருவலியமர்ந்த
தெவனறைந்தருள்கென்றலுமென்பிதாவிசைப்பான்
கவனநீள்வலிமந்திரிவேகமார்கடப்பார். (௨௯)



தேவர்தானவரொண்ணறுகோடிகடிரண்டு
மேவவென்றலர்சூலநேமிகண்முதலென்ற
மேவரும்படைக்கலமெலாமவன்மிசைவிட்டான்
மாவருங்கல்லிலறைந்தபூவெனமுனைமடியும். (௩௦)

விளிவருந்திறலந்தமந்திரியந்தவேந்தா
லெளிதுவென்றிடில்வணங்குறுமிவ்வகையின்றே
லளியமேருவையசைப்பினுமசைப்பரிதாகு
மொளிகொளூகபுந்தியினலால்வெலப்படானொருங்கே. (௩௧)

ஊகபுந்தியாலல்லதவ்வமைச்சனையுற்றால்
வேகநாகம்போலெரித்திடும்வேந்தனோடமைச்ச
னேகராச்சியஞ்செய்யுமத்தேசமுமியாவுஞ்
சோகமற்றிடக்கேளெனவிரித்திதுசொன்னான். (௩௨)

முன்னநாஞ்சொன்னதேசமோர்முடிவிலாமுத்தி
மன்னனென்றதுமாசிலாமணியெனவயங்குந்
தன்னில்வேறிலாவாத்துமதத்துவந்தானே
யன்னவேந்தனாலமைத்தமந்திரிமனமாகும். (௩௩)

விடையமியாவையுமொருப்படவொருக்கிநல்விராக
முடைமையாவதுபரமமாம்யூகமென்றுரைத்தேந்
தடையிலாமனம்விராகத்தால்வெலப்பட்டதன்மை
படைசெய்மத்தமாதொழுவத்துளகப்பட்டபண்பே. (௩௪)

கற்றறிந்திலார்மனத்தைநாற்கூறெனக்கற்பித்
துற்றபோகத்திலுபயமுநூல்வழியொன்றும்
பெற்றதேசிகன்பூசையிலொன்றுமாய்ப்பேணிற்
றுற்றகங்குல்போய்விவேகமாஞ்சுடர்வந்துதோன்றும். (௩௫)

சிறிதறிந்தவர்மனத்தைநாற்கூறெனச்செய்து
பொறிவசத்தொன்றுந்தேசிகர்பூசையிலிரண்டு
மறியுநூற்பொருண்மனனத்தோர்கூறுமேயாக்கி
னெறிவிவேகத்தாலொன்றுணர்ஞானமேநிரம்பும். (௩௬)

ஞானமுற்றவர்மனத்தைநாற்கூறெனநாட்டி
யானநூலினும்விராகத்துமனுபவந்தனிலு

மானநற்குருபூசையின்வழியினுஞ்செலுத்தி
லீனமற்றநன்முத்திவந்தெய்திடுமெளிதின். (௩௭)

வேறு.

மிக்கவறிவால்விசாரத்தான்மெய்ம்மையுணர்வுநிராசையுநீ
யொக்கவென்றுங்கைக்கொள்வாயூற்றமானநிராசையினூற்
றக்கவிசாரம்விசாரத்தாற்றவிராநிராசைதம்மாற்றுந்
தொக்குநிரம்பும்வாரிதியுந்தொடர்மேகமுந்துன்னுதல்போலாம். ()

நாட்டினியல்புவழுவாமனட்டோர்க்கிதமாநற்பொருள்க
ளீட்டிமுன்னமதனாலேயினியகுணத்திலுயர்ந்தோரைக்
கூட்டியவராநிராசையினைக்கூடியதனால்விசாரத்தைத்
தீட்டியதனான்மெய்ஞ்ஞானந்தெளிந்தான்முத்திசித்திக்கும். (௩௯)

என்றுமுன்னமென்றந்தையிசைத்தான்றெய்வசகாயத்தா
லொன்றுமொழியாதின்றுணர்ந்தேனுணர்வு'பெற்றேன்போகத்தி
னின்றவாசையின்றொழித்துநிராசையென்னுநிதியாலே
துன்றிநொய்தாயுபசாந்தச்சுவையிற்குளிர்ந்தசுகம்பெற்றேன். (௪௦)

அந்தோவந்தோவிதுநெடுநாளறிந்திலேனின்றறிவுற்ற
சந்தோடத்தையென்சொல்வேன்சகலநினைவுஞ்சமித்தாறி
நொந்தோரின்பதுன்பத்தானோவாதிருக்குமிடமிதுவே
யுய்ந்தோருறையும்பதமிதுவேயுபசாந்தத்தினுயர்விதுவே. (௪௧)

என்னவுரைத்துநானொன்னுருவமேதென்றியான்விளங்கத்
தன்னையறியுஞ்சுக்கிரனைத்தாழ்ந்துவினவித்தத்துவத்தை
யுன்னும்பொழுதேயஞ்ஞானமோடுமென்னவுசனைவை [ல்.
முன்னவேண்டுமெனக்கண் கண்முகிழ்த்துநினைந்தான்முழுதன்பா

மெய்யாகியசச்சிதாநந்தவெளியேவடிவாகியவெள்ளி
யுய்யாநின்றமாவலிமுன்னுதிப்பவவனுமுவந்திறைஞ்சிக்
கையார்மணியாலுயர்மலராற்காலிலருச்சித்துரைசெய்வா
னையாநின்னன்பெனையெழுப்பவடியேனுரைப்பதறிந்தருள்வாய். ()

என்னிங்குள்ளதப்பாலென்னெல்லைசொல்லப்பட்டுளதென்
றுன்னுமெல்லையில்லாதென்சொல்லுநானுர்நீயாரிம்



மன்னுமுலகமேதென்றுமயக்கந்தீரவருளென்ன
வன்னதெல்லாந்தெரியவிரித்தவனுக்கிவனன்றறிவித்தான். (௪௪)

வருங்கற்பகவிண்விரைந்தேகவந்தேன்பலசொல்லியும்பயனென்
சுருங்கச்சொல்லும்பயன்கேளாய்தோன்றவிங்குள்ளதுவுஞ்சித்
தொருங்கப்புறத்துஞ்சித்தெல்லையுள்ளதுஞ்சித்தெல்லையற
நெருங்குற்றதுஞ்சித்தியான்சித்துநீசித்துலகநிறைசித்தே. (௪௫)

இதுவேசுருக்கமிவ்வறுதியிதயங்கொண்டிவ்வகைக்கேற்ற
மதியானின்னைநினைநீயேமாறுதுணர்ந்துநோக்குதியே
லதனாலந்தமாம்பதத்தையடைதியோரேழருந்தவரும்
புதிதோர்தெய்வகாரியத்திற்புகுந்தாரியாமும்போகுதுமால். (௪௬)

என்னுவெள்ளியேகியபின்னெல்லாமறிவாமுலகினைப்பார்த்
துன்னுவொக்குமொக்குமெனக்குசனுவுரைத்ததுண்மையதே
முன்னுமவனிசித்துலகுமூன்றுஞ்சித்துநான்சித்து
நன்னுலானதிசைசித்துநாட்டுகின்றதெலாஞ்சித்தே. (௪௭)

தெரிக்கும்பொருளுந்தரிசனமுந்தீர்ந்துவெறுநின்மலவடிவாய்ப்
புரிக்குமுதயம்விடாதென்றும்பொலியும்பரமப்பொருளானேன்
வரிக்குங்காட்சியிலாவறிவேவடிவாயொருகாலேயெங்கும்
விரிக்குநிறைவாயுபசாந்தவெளியாயறிவாமிகுபொருணேன். (௪௮)

ஓங்குஞ்சின்மாத்திரப்பொருளாமோங்காரத்தையுண்ணினைந்து
தூங்குந்தியானபரனாகித்தொடர்சங்கற்பமெல்லாம்போய்
வாங்குந்தொழிலேடணையையமனனஞானஞேயமிவை
தாங்குஞாதாவனைத்துமறத்தனிச்சித்திரம்போனெடிதிருந்தான்.

காற்றிலாதவிளக்கொளிபோற்கலங்காதிருந்தமாவலிதான்
சிற்றமயநீர்ந்தறநிறைந்துசிந்தையென்னுமாசின்றித்
தோற்றுஞ்சத்தாமாத்திரத்தாற்சுடர்விட்டெறித்தபடிசொல்லி
லாற்றன்முகிநீர்சரற்காலத்தறவேதெளிந்தவிண்போலும். (௫௰)

ஆங்கப்படியேயவனிருப்பவவனதேவற்புரியசுர
ரோங்கற்கோயின்மேனிலத்தையுற்றுருயர்மாவலிதானு
நீங்கற்கரியநிருவிகற்பநிலைகூர்சமாதிநெடும்போது
தேங்குற்றதற்பின்விழித்துணர்ந்துமமதைதீர்ந்தசிந்தையனாய் (௫௧)

பற்றிலாதமனத்தாலேபயின்றிராசகாரியங்கண்
முற்றுமியற்றியாபத்துமுதிர்சம்பத்துஞ்சமமாகக்
குற்றமில்லாக்குறிப்பாலேகுறிப்புற்றின்பதுன்பத்திற்
சற்றுமிதவாதமிழாதுசமபாவனையிற்ருனைன். (௫௨)

ஓவாதவன்றனுள்ளெழுந்தவூகாபோகம்பலகோடி
பாவாபாவம்பலகோடிபரந்ததெல்லாமிளைப்பாறி
மேவாநின்ருனெவ்விடத்தென்விண்ணின்மண்ணில்வேட்கைகளிற்
ருவாநின்றமனந்தன்னைத்தன்னதிதயத்துள்வைப்பாய். (௫௩)

எங்கேயெங்கேமனமோடியிளையோவென்னவீழ்ந்தழுந்து
மங்கேயங்கேநின்றெழுப்பியகண்டவறிவிலடைவிப்பாய்
சங்கேதமதாயிவ்வாறுசாதித்துளமாமதகரியை
வெங்கேதமறத்தளைத்தெல்லாவிசாரத்தாலும்வீடணைவாம். (௫௪)

மாவலிகதை முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௩௦௫.

# பிரகலாதன்கதை.

பின்னுமீதோர்கதைகேட்பாய்பிரகலாதப்பெயரோனுந்
தன்னதுணர்வான்மெய்ஞ்ஞானதத்துவத்தைச்சாதித்தா
னன்னதுரைப்பாமிரணியனுமசுரவேந்தனிறந்தளவே
யின்னல்கூருமவன்மைந்தனிதயநடுங்கியிவையுணர்ந்தான். (௧)

எனதுதாதைமுதலசுரனெனதுகுலத்தோரெண்ணிறந்தோர்
கனகமேருவனுவென்னக்காயநிலைமைபெரிதுடையோர்
வனசயோனியதிகாரமாற்றவல்லோர்தரவல்லோர்
புனைவண்டுளவோனெனுங்கனலிற்பூளைவீபோற்போயொழிந்தார்.

அன்னுரொக்கும்பேரசுரரழியுமூழிப்பெருங்காற்ருற்
சின்னகங்கள்போன்மடிந்தார்செறிநுண்மணலிற்பலகோடி
யின்னுளவனுக்கஞ்சாதாரியாருமில்லையெம்பகையா
மின்னுர்நேமிப்படையோனைவெல்வானுபாயமீதொன்றே. (௩)

எத்தன்மையினுலெண்ணுகினுமிதில்வேறுயர்ந்தநெறியில்லை
தத்துந்திரைப்பாற்கடலுறைவோன்சரணமன்றிச்சரணில்லை



சித்தமிந்தக்கணந்தொடங்கிச்சேர்நாராயணன்சரணம்
பத்தனுகினானவனைப்பகிராதொழிகபாவனையே. (௪)

நயந்ததெல்லாமெளிதருளுநாராயணாயநமவென்னு
முயர்ந்ததிருமந்திரமென்றனுளத்தில்விண்ணின்மாருதம்போற்
பெயர்ந்துநீங்காதுள்ளுறைகப்பேணியரியைப்பூசிப்போ
ரியைந்தவரிதாமப்பூசையியற்றிற்பலனுமலதில்லை. (௫)

அந்தநெறியாலரியுருநானுகியரியைப்பூசிப்ப
னிந்தவுடன்மாதவன்வடிவாமிதனில்வாயுவடிவாகிப்
பந்தமுறுவோன்பராபரனுமிவனேபிராணபவனத்தின்
முந்துமோட்டத்தாலிரண்டாமுகுந்தனுகிப்புறத்துறைவான். (௬)

அவ்வாருனவிவ்வரியையகிலவுபசாரங்களையுந்
தவ்வாமனத்தாலுளதாக்கிச்சதாபூசனையேசமைப்பனெனு
விவ்வாறெண்ணிப்பாரமெலாமெடுத்துச்சுமக்குமனத்தாலே
செவ்வான்மணிப்பாத்திரதூபதீபங்கந்தமெலாஞ்செறித்து. (௭)

மணிப்பூண்களும்பீதாம்பரமும்வாடாமலருநல்லமுதுங்
கணிப்பிலாதபொருளெல்லாங்கருத்தாற்பாவித்தருச்சித்துத்
தணிப்பிலாதவன்பான்முன்றந்தப்புறத்தின்பொருட்டிராளாற்
பணிப்பாயவனையுட்போலப்பரிந்துபுறத்தும்பூசித்தான். (௮)

ஆயவாறக்கணந்தொடங்கியகண்டவடிவப்பரம்பொருளா
மாயனடிகளருச்சித்தானவனைப்போலவாளசுரர்
தீயகுணம்விட்டெல்லோருந்திருமாற்கடிமைத்திறம்பூண்டார்
மேயமன்னன்குணமன்றேவிரிந்தவுயிரின்குணந்தானே. (௯)

திதிகாதலருமவர்க்கரசுஞ்செங்கண்மான்மேற்சினந்தீர்ந்து
புதிதாகியபத்தியிலடிமைபுக்காரென்றுபுரந்தரனுந்
துதிவானவருங்கேட்டலுமேதுணுக்கமோடுவியப்பெய்தி
யதிபாதகர்களெம்பெருமாற்கன்பாகியதென்னெனவயிர்த்தார். ()

திருப்பாற்கடலிற்கண்வளருந்திருமான்முன்புசென்றணுகி
விருப்பாற்றுதித்திந்திரன்முதலோர்மேகமேனியனைநோக்கி
நெருப்பாந்தன்மையசுரரெலாநினைப்பாவித்துநின்வடிவா
யிருப்பாரானுன்மாயையெனவெண்ணினேமீதென்னென்ன. (௧௧)

கொடியகொலைசெய்வல்லசுரர்குணங்களெங்கேபெறவரிய
முடிவதானபிறப்பெங்கேமுகுந்தன்பத்திப்பேறெங்கே
கடியதீயோர்நற்குணங்கள்கலவாவொன்றுகதையல்லா
னெடியமாலேநின்பத்திநீசர்க்கெல்லாநேருமதோ. (௧௨)

என்றவிண்ணோர்க்கெம்பெருமானிமையோரஞ்சாதொழிமின்கள்
வென்றிபயிலும்பிரகலாதன்மீண்டும்பிறவாப்பிறப்புற்றான்
கன்றுதுயர்போய்மெய்ஞ்ஞானக்கண்ணால்வீடுகாண்குவனா
லொன்றுமிதனிற்கைதவமென்றுணரற்பாலதிலதாகும். (௧௩)

நல்லோர்தீமையுறிற்கேடாந்தீயோர்நன்மையுறினன்றா
மெல்லோரும்போமெனவருளியெம்மானுங்கேமறைதலுமே
கல்லோலஞ்சூழ்கடனின்றுங்ககனலயஞ்சேர்ந்தமரொலாம்
புல்லாவொன்றவசுரருடன்புரையிலாததமரானார். (௧௪)

என்புகுளிரும்பத்தியினலிமைப்போதொழியாதெப்போது
மன்புகூரநெடுமாலையசுரர்வேந்தனருச்சித்தான்
வன்புபயிலுமுக்கரணம்வழுவாப்பூசாபலத்தாலே
முன்புவிவேகமாநந்தமுதிர்வும்விராகமுளைத்தெழுந்த. (௧௫)

சாதனங்கண்முதற்குணங்கள்சாலவுண்டாயிவனெஞ்சங்
காதலானபோகத்திற்கவலும்பற்றுக்கழன்றனவாற்
சீதமுத்துமுத்துடனேசேர்ந்தாற்பற்றுச்சேர்வுறுமோ
வாதலாலேபோகத்திலழுந்தாதுள்ளமாறினதே. (௧௬)

பூன்றவடிவுங்காணுமற்போகத்துள்ளுமழுந்தாம
னன்றவூசலாடுவபோனல்லோனுள்ளந்திரிவதனை
மூன்றுசகத்தின்சான்றானமுகுந்தன்றிருவுள்ளத்துணர்ந்து
சான்றகுணத்தோன்பூசிக்குந்தனிமாமனையிற்றானடைந்தான் (௧௭)

மூவராகிநின்றமுதன்மூலமடைந்தபடியறிந்து
தேவதேவன்றனைமுன்னர்ச்செயலினிரட்டிப்பூசனைசெய்
தியாவராலுங்காண்பரியவெம்மானம்மாவெதிர்ந்தனனென்
றுவதானபடியன்பாலவனைத்துதித்தானசுரேசன். (௧௮)

அண்டமென்னுமொருவீட்டிலரியபொருள்சேர்சரக்கறையே
சண்டபானுவெனவுதயாத்தமமற்றொளிருந்தற்பரமே



கண்டவுயிர்களனைத்திற்குங்களைகணானவான்றுணையே
புண்டரீகைநாயகமேபோற்றிபோற்றிமிகப்போற்றி. (௧௯)

மேலோனாகிச்சகம்படைக்கும்விளையாட்டுடையவித்தகனே
நாலோடொருபதெனுமுலகினண்ணுவுயர்ந்தநற்பொருளே
யாலோனாகிக்கண்வளர்ந்தவையாமெய்யாவருண்மூர்த்தி
பூலோகத்தினாயகமேபோற்றிபோற்றிமிகப்போற்றி. (௨௦)

கேதமிகுந்தவசுரரொனுங்கிளைத்தாமரைக்குநெடும்பனியே
வேதநெறிச்செல்லமரொனும்விரிதாமரைக்குவெய்யோனே
பேதமறுத்தோருள்ளமெனும்பெருந்தாமரையிற்பிரமரமே
பூதமனைத்தினாயகமேபோற்றிபோற்றிமிகப்போற்றி. (௨௧)

என்பதானதுதிபலவுமிசைப்பவிதயங்குளிர்ந்தருளி
யன்பமறுத்துப்பிறவாவாறுயவரங்கேளெனக்கருணை
முன்பனுரைப்பவனைத்திதயமுளரியினுஞ்சேர்முதற்பொருளே
துன்பமில்லாவுயர்பதமேததுவேயருள்வாயெனச்சொன்னான். ()

சித்தப்பிரமமெல்லாம்போய்த்தெளிந்தபரமசுகம்பெற்றுச்
சுத்தப்பிரமத்தினைப்பாறமுடிவாம்விசாரந்தோன்றுகவென்
றத்தப்பதுமமமைத்தருளியமலனேகவவன்றுதியான்
மெத்தப்பரவிமலர்தூவித்தொழுதான்விவேகிகளின்மிக்கோன். ()

பனிவார்கடலிற்றிரையென்னப்பரமபுருடன்மறைந்ததற்பின்
னினிதாம்பதுமாதனத்திலிருந்திறைவன்றுதிகளேத்தியபின்
சனியாவிசாரந்தந்தளித்தான்சநநமறுக்குந்தனிமூர்த்தி
நனிநாநம்மையாரொன்றுநாடுவோமுள்ளெனநினைவான். (௨௪)

யானார்முன்னமெவனானேனிந்தப்புவியாடம்பரத்தி
லானதிருந்துநின்றோடியழுதுசிரித்துமகிழ்ந்தயர்ந்தே
னானவானசகமல்லேனகங்கல்புல்லுமண்மரங்க
டானுய்ப்புறம்பாயசேதனமாஞ்சகநானென்னத்தக்கதுவோ. (௨௫)

இல்லாவிடத்துண்டாய்மூகமெனலாய்க்காற்றிலியங்குவதாய்ச்
செல்லாநின்றசிலநாளிற்சிதைந்துசடமாமுடனானே
நில்லாதாய்ப்பொய்க்கேதோன்றிநிராகாரமதாயறிவின்றிப்
புல்லாவறிவிற்செவிக்குணவாய்ப்பொன்றுஞ்சத்தநானுமோ. (௨௬)

தோலிலன்றியறிவரிதாய்த்தோற்றமின்றிக்கணத்திறந்து
கோலுமறிவாலறிந்தறிவுகூடாப்பரிசானல்ல
காவிலசைந்துவசித்துருவாய்க்காதன்மிக்குக்கணத்திறக்குந்
தாலுவுணவாய்த்திரவியத்திற்சனித்துச்சடமாஞ்சுவைநானே. ()

கணத்தினிறக்குங்காண்பவற்றிற்காட்சிதன்னிற்பற்றுகிப்
புணர்ப்பில்காண்பானிடத்திறக்கும்போதமில்லாவொளிநானே
குணக்குழூக்காமசேதனத்தாற்குறிப்பதாகிச்சடமாகி
மணக்குநொய்ம்மைநியமங்கள்மருவுகந்தநானுமோ. (௨௮)

எனதற்றெண்ணமெல்லாம்போயிளேப்பற்றைந்துபொறிமயல்போ
யனகவறிவாய்த்தொழிலின்றியறியும்பொருடீரறிவேயாய்க்
கனமாயுள்ளும்புறம்பினுநிட்களமாயுண்டாமாத்திரமாய்ச்
சநநமரணமிலாவென்னைத்தயங்கக்கண்டேன்சத்தியமே. (௨௯)

ஆவாவிப்போதுள்ளபடியறியுநெறியிலெனையறிந்தே
னேவாவிகற்பமற்றறிவுள்ளொளியாஞ்சீவனுருவிதுவோ
தாவாதெங்குமுளநானுந்தத்துவத்திற்சகமெல்லா
மேவாநின்றவிரவிமுதற்கடமீருகவிளங்கியதால். (௩௦)

உள்ளிலொளியாற்கனற்பொறிகளொளிர்வதென்னவைம்பொறியு
தெள்ளியறியுமென்னுலேசெறிசித்திரமாய்த்திகழ்ந்தனவாற் [ந்
றள்ளிலயனேடுட்பட்டதனிக்கற்பாந்தத்துயிரனைத்தும்
வெள்ளவெளியாமப்போதுமீளாதொளிருமென்வடிவே. (௩௧)

இவனுனென்றுள்ளேபற்றுமெண்ணமெங்கேயெல்லையறப்
புவனமெல்லாநிறைந்தொளிரும்போதவடிவாமென்றனக்குக்
கவருமனப்பாவனைதானேகருதிலுண்டோமுடிவில்சுகத்
துவமையில்லாவுபசாந்தவுணர்வாங்கண்ணேயுலகெங்கும். (௩௨)

நோக்கப்பட்டநோக்கெல்லா நுண்மையறிவாநோக்கொன்றே
யாக்கப்பட்டவுயிரனைத்தினகத்தாயறிவதிலாவறிவாய்த்
தாக்கப்பட்டதொன்றில்லாத்தனித்தத்துவமாய்த்தனையன்றிப்
போக்கப்பட்டதில்லாவெம்பொருட்டுவணங்கிப்புகழுதுமால். (௩௩)

அறவுநொய்தாய்ச்சமமாகியவிகாரமதாயதீதமதா
யிறவுநிகழ்வோடெதிர்வென்னவெண்ணுங்காலமூன்றிலதாய்ப்



பிறவுநினைக்குநினைவின்றிப்பேதமற்றவறிவாலே
நிறைவிதானசத்தியெலாநேரோசெய்யப்பட்டனவே. (௩௪)

தாக்கற்றென்றிலறிவுக்குச்சமமேயொழிந்துகண்டதிலை
வாக்குக்கெட்டாமையினுலேவசனங்களினுற்சமந்தோன்று [த்
நோக்கற்கரிதாம்பொய்ப்பொருள்போனெய்தாயழியாநிராசைதனை
தேக்கிற்சமபாவனைதானேதிரைதீர்கடல்போற்சேடிக்கும். (௩௫)

செயலுஞ்செயலிலாமையுமாய்த்தியங்குஞ்செயலிற்சேரறிவு
பயிலும்வலையிற்புட்போலப்பந்தமடையுமாதலினுன்
மயல்வெங்கோபமிரண்டாலும்வருந்தொந்தனையாமயக்காலே
யுயிர்களெல்லாநிலப்புழுப்போலொன்றுமகலாதாகுவதாம். (௩௬)

நீடத்தகுமன்னுயிர்க்கெல்லாநெஞ்சத்துறைவாய்நெடுநாளாக்
கூடப்பெற்றேனுனையிந்தக்குறைவில்பேற்றையார்பெற்றுர்
தேடப்பட்டாய்பெறப்பெற்றுய்தெரியநின்றுய்விகற்பமெலாம்
வீடப்பட்டாயெதுவானுயதுவாய்நின்றுய்மிகத்துதிப்பாம். (௩௭)

நானேநீயாய்நீநானுய்ஞானவடிவாய்முடிவின்றித்
தானேயாகியண்டத்தின்றலையாய்ப்பரமதத்துவமாங் [போ
கோனேயுன்னைத்தொழுகின்றேன்கொண்டன்மறையாநிறைமதி
லானேர்நினைவுகளின்மறையாவொளியாமுருவேயுனைப்பணிகேன்

உன்னலென்னுமாவரணமொன்றுமில்லாவெளியாகித்
தன்னதானசுகவடிவிற்றுனேவிளங்கித்தன்வசமா
மென்னதுருவையான்பணிகேனிருந்துநடந்துஞ்சாந்தமுற்று
மன்னதன்னதிலதாகுமனைத்துஞ்செய்தும்பற்றிலதாம். (௩௯)

பல்லவங்கடனையசைக்கும்பவனன்போலமனமுதலாய்ச்
செல்லுங்கரணங்களையிந்தச்சித்தாம்புருடனசைத்திடுமால்
வல்லபாகர்நடத்துகின்றவாசித்திரள்போற்றனதான
வல்லன்மேவப்பொறியெல்லாமவனேபரிக்குமநவரதம். (௪௦)

இவனேதேடப்படுகிற்போனிவனேதுதிக்கப்படுகிற்போ
னிவனேதியானிக்கப்படுவோனிவனுன்மரணமயக்கொழிந்த
திவனேயெளிதினெய்திடுவோனிவனேநன்றுயறிகிற்போ
னிவனேயெல்லார்மனக்கமலத்திடையிலிருக்குமிசைவண்டே. ()

மேவலுற்றபோகத்தில்விருப்புவெறுப்புமெனக்கில்லை
யாவதெய்துமதுவருகயாதுபோகுமதுபோகப்
பாவமிகுமிவ்வஞ்ஞானப்பகைவனாலேவிவேகமெனு
மேவமில்லாப்பொருளெல்லாமிழந்தேனுணர்வாலவைபெற்றேன்.

துனையுமனத்தான்மனமறுத்துத்துயர்செய்யகங்காரந்தீர்ந்து
நினைவானினைவுபோயசையாநிலைக்கேதனிக்கேவலநின்றேன்
வினையாநினைவற்றகங்கரம்போய்மேவுமனம்போய்த்தொழிலின்றித்
தனையேநிகர்கேவலத்தொடர்ச்சித்தத்துவத்தென்வடிவிருக்கும்.()

காதலென்னுங்கட்டறுத்துக்காயமென்னுங்கூடகன்று
சாதன்மேவுமகங்கரமாந்தனிப்புள்ளெங்கேபறந்துளதோ
வேதமறுநீஞானியென்னுமொருமையிருமையதா
யோதும்விதியான்மீண்டொன்றியுயர்நீஞானியானேம். (௪௪)

ஒழிவிலுலகின்சீரெல்லாமுண்டாயிருந்துநீயிலையேல்
விழியிலவர்க்குப்பேரொழில்கூர்மின்னாைப்போல்விளங்காதால்
வழுவிறேவேசயசாந்திமன்னுமிடமேசயவேத
முழுதுக்கயலேசயவேதமுளைத்தவிடமேசயவென்னா. (௪௫)

பிறக்குமுதலேசயவென்றும்பிறவாமுதலேசயநாளு
மிறக்குமுதலேசயவென்றுமிறவாமுதலேசயவென்று
சிறக்குமனத்தாற்சிந்தித்துச்செம்பொற்பெயரோன்றிருமதலை
பறக்கும்விகற்பமில்லாதபரமசமாதிச்சுகமுற்றான். (௪௬)

நிருவிகற்பசமாதியிலேநிகழ்சித்திரம்போனிலைபெற்று
வருடமையாயிரஞ்செல்லமாறுவொருபார்வையினிற்ப
வருணமணிசூழ்பாதலத்திலரசிலாமலசுரரெலாங்
கருடன்முதற்புள்ளினங்கவரக்கலங்குகுளமீனினமொத்தார்.(௪௭)

ஆவதாயகாலத்திலனைத்தாமுலகினெறியனைத்துங்
காவல்புரியுந்திருநெடுமால்கடல்வாய்விழித்துக்கண்வளர்வான்
றாவல்வருடக்கார்நாளின்றுயிலைத்தவிர்ந்துவொருகாலைச்
சேவல்கூருந்திருவுளத்திற்செகத்தினெறியைச்சிந்தித்தான்.(௪௮)

பேதமில்லாச்சாந்திபதம்பிரகலாதன்பெற்றிருப்ப
வே,தன்சிருட்டியழிந்துளவால்வெவ்வாளசுரரிலாமையினா



லேதவசுரரில்லையெனிலிகலற்றிமையோரெல்லோரும்
போதவுபசாந்தியராகிப்பொருவில்வீடுபொருந்துவரால். (௪௯)

தேவருபசாந்தியையடையிற்செந்தீவேள்விதவமெல்லாம்
போவதாகிப்பயனெல்லாம்பொருந்தாதெவையும்பொன்றிடுமா
லோவலுற்றகிரியையெலாமொழிந்தாற்பூமியொடுங்கிடுமாற்
கேவலத்திற்புவியொடுங்கிற்கிளருஞ்சிருட்டியற்றிடுமால். (௫௦)

இன்னசிருட்டிசூனியமாயிரவிமதியோடெலாமிறக்கிற்
பின்னர்யாமும்வடிவொழித்துப்பேதமில்லாப்பதமடைவோஞ்
சொன்னகாலத்தலாதிடையேதொல்லைஞாலமெலாமிறக்கி
லுன்னநலங்காண்கிலமிதனுக்குறுதியுபாயமுணர்ந்தனமால். (௫௧)

தானவருய்கவுய்ந்தாற்சமருண்டாஞ்சமருமுண்டேல்
வானவருண்டாமுண்டேன்மகந்தவமுண்டாமுண்டே
லானதோர்சிருட்டியுண்டாமன்றெனிற்சிருட்டிமாளு
மூனமிலசுரர்கோனிவ்வுடலொடுமூழிவாழ்க. (௫௨)

பரமமாமீசனாலேபாலிக்குங்கடவுணீதி
திரமுறவிவ்வாறென்றுசிந்தித்தசெங்கண்மாய
னரவணைப்பாயனீங்கியசுரர்கோனருகுசேர்ந்தான்
பிரமலோகத்தையொக்கும்பெரியபாதலநகர்க்கே. (௫௩)

கருடவாகனத்துறைபவன்கவரிசேர்செங்கைத்
திருமடந்தைவாழ்வலத்தினனைம்படைசெறியு
மிருபுறத்தினன்றேவருமுனிவருமிறைஞ்ச
வருளுநாயகனசுரனையுணர்தியென்றருளி. (௫௪)

வலம்புரித்தொனிகிளப்பின்மாதிரம்பிளப்ப
நிலம்பிளப்புறநெடுந்திசைபிளப்புறநிமிர்ந்த
வலம்புமோதையான்மெல்லெனமெல்லெனவறிந்தா
னலம்பயப்புறுதற்பதத்தொன்றியநல்லோன். (௫௫)

பிராணசத்திதான்பிரமரந்திரநின்றுபெயர்ந்து
புராதனப்படிநாடிகளாலெங்கும்பொருந்தி
விராவலுற்றனவொன்பதுதுவாரத்துமேவப்
பராபரத்தினையறிந்துளோனறிவுசம்பவித்த. (௫௬)

அறிவுதோன்றியுட்பிராணதர்ப்பணநிழலாகி
யறிவதாம்பொருளுக்குற்றதன்னதாமறிவு
பிறிவதாமறிபொருளிலேமனத்தன்மைபெற்ற
பிறிவிலாமுகந்தர்ப்பணத்திருமைபெற்றதுபோல். (௫௭)

அற்பமுள்ளமங்குரித்தலுமரும்பவிழ்வுற்ற
வுற்பலங்கள்போன்மெல்லெனமலர்வுற்றவொண்கண்
ணிற்பதாய்நரம்புறுபொறியறிவுகணிறைய
நற்பிராணனுமபானனுமெங்கணுநடந்த. (௫௮)

அமைவில்காற்றுற்றபதுமம்போலசைவினையடைந்தா
னிமைகளுக்கிடையளவிலேமனந்தடித்தெழுந்த
சமைவுறத்தெரிகண்மனம்பிராணன்மெய்தயங்கக்
கமையின்மிக்கவன்விளங்கினன்கருணைமால்காண. (௫௯)

பரந்துநாட்டங்களுக்கினமனனமும்பருமை
நிரந்தரித்தனவவ்வயினவன்றனைநெடுமால்
சுரந்தவன்புடனோக்கியேயருள்செய்வான்றூயோய்
புரந்தரன்புகழுனதுசீர்நோக்குவாய்புரிந்து. (௬0)

உடலைநோக்குதியகாலத்திலுன்னுடையுடலை
விடநினைப்பதென்பற்றுதல்விடுதல்சங்கற்பம்
படர்கிலாவுனக்கபாவமும்பாவமுமுடலிற்
றொடரிற்சேதமென்னெழுதியாலிருத்தியாற்றூயோய். (௬௧)

சீவன்முத்தனாநீயிந்தவுடலொடுஞ்செங்கோற்
காவலாளனாய்ச்சுமையறக்கற்பமட்டிருப்பாய்
பாவகன்சுடப்பன்னிருகதிர்சுடவுலகம்
யாவதுங்கெடாதிருப்பநீயிறப்பதென்வாளா. (௬௨)

ஓங்குமாசையாம்பாசத்தாலுறப்பிணிப்புண்டு
வீங்குமுள்ளுணர்வதன்வழியோடியேமெலிந்து
தாங்குசெய்கையான்மனமிகச்சலிப்பவர்க்கன்றோ
தீங்குமேவியமரணந்தான்சிறப்பதுசகத்தில். (௬௩)

அகங்காரத்தினையகற்றியோர்பற்றின்றியனைத்துஞ்
சுகந்தருஞ்சமமானவராயுவேசுகமா



முகந்தவாசையுஞ்சினமுமற்றுட்குளிர்மதியாற்
செகங்களின்கரியானவராயுவேசிறக்கும். (௬௪)

பற்றுவான்பற்றுபொருளிரண்டும்பயில்பந்த
மற்றபோதுபசாந்திதோன்றிடுமதுநிலைமை
பெற்றபோதுவிடெனும்பெயரந்நிலைபெறுமால்
வெற்றிவீரசிங்காதனத்திருத்தியால்விளங்க. (௬௫)

குரைசெய்சங்கினதோசையாற்குமுறுறவந்த
புரையில்வானவர்மங்கலப்பணிசெய்துபுகழ
விரைவிலின்றுனைமாமுடிமிலைச்சுவனானே
யரசுசெய்கநீயூழியினளவெனவருளி. (௬௬)

மங்கலப்புனல்கொணர்கெனமஞ்சனமாட்டிச்
சங்குசக்கரந்தரித்தனகைகளாற்றானே
புங்கவத்திரள்போற்றிடப்பொன்முடிசூட்டி
யங்கணச்சுதனசுரர்கோனுக்கிவையறைந்தான். (௬௭)

தள்ளின்மேருவும்புவனமுமருக்கனுஞ்சசியு
முள்ளநாளெலாமரசுசெய்துயர்கெனவருளிக்
கள்ளமாயையின்சிருட்டியொன்றொளித்தல்போற்கணத்தில்
வெள்ளவானவர்குழாத்தொடுமறைந்தனன்விண்டு. (௬௮)

என்னவோதியவசிட்டனையிராகவனோக்கி
யன்னதானவர்க்கரசனாய்வீடுற்றவறிஞன்
தன்னதுள்ளமெய்ப்பரத்திலேதன்மயமான
பின்னர்மால்சங்கினோசையாற்பிறந்ததெப்பரிசோ. (௬௯)

எனவினவலுமிராமனுக்கருந்தவனுரைப்பா
னனல்பயின்றவித்தாமெனவமலவாதனைதான்
கனமில்சீவன்முத்தருக்கெலாமிதயத்தின்கண்ணே
சனனவங்குரமீண்டிலதாகியேசாரும். (௭0)

சுத்தமாய்ப்பரமமாகித்தோற்றஞ்சாலுதாரமாகிச்
சுத்தமாஞ்சாத்திகத்தைத்துன்றியேவிடாமலொன்றிச்
சுத்தவாத்துமத்தியானமயமதாய்த்துவக்கொன்றில்லாச்
சுத்தவாதனைகணித்தஞ்சுழுத்திவாதனைபோனிற்கும். (௭௧)

ஆயிரவருடஞ்சென்றுமங்கமேயிருக்கினுள்ளே
மேயதாமவ்வவத்தைமெல்லெனவொருபானின்று
தேயலதாகித்தோன்றுஞ்செறியுமவ்வவத்தையாலே
தூயநற்சீவன்முத்தருணர்ச்சியைத்தொடர்வரொன்றான்(எஉ)

பிரகலாதன்கதை முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கூஎஎ.

# காதிகதை.

பிறப்பிறப்பாம்பெயருடையவிந்தமாயைப்பெருமையினைமுடிவு
பெறப்பேசவொண்ணு, வறப்பெரியதன்மனத்தைவென்றான்மாளு
மல்லதொருவகையாலுமகற்றலாகாச், சிறப்புடையவன்மாயைவி
ரிவினுள்ளசித்திரந்தோன்றிடவுனக்குச்செப்புங்காதை, மறப்பறு
சிந்தையனுகிக்கேட்டியென்னுமனுகுலநாயகனுக்குவசிட்டன்சொ
ல்வான். (க)

மண்ணுலகிற்கோசலமாமண்டலத்தின்மறையவர்கோன்காதி
யெனவழங்கும்பேரோ, னுண்ணினைந்தோர்கருமத்தைக்கிளையை
நீங்கியொருவனம்புக்கொருவாவியுதகத்தூடே, நண்ணியணிகழுத்
தளவாயமிழநின்றுநற்றவஞ்செய்தெண்டிங்கணடந்தவெல்லை,கண்
ணருளான்மாயவன்வந்தவன்முன்றோன்றிக்கருத்தென்கொலளித்
துமெனக்கழறலோடும். (உ)

சலநின்றுங்கரையேறிக்காதியென்னுந்தவமறையோன்கைதொ
ழுதுசகமண்டத்தி, லலகிலுயிர்மனக்கமலத்தகலாவண்டேயச்சுத
னேயநந்தாவென்றன்பாற்போற்றிச், சலனமறுதற்பரத்திற்சம்பந்
தித்துச்சநநமரணத்துருவாற்சகங்களாகி, யலமருநீடாச்சரியஞ்செ
ய்வதாய்நீயளித்தமாயையைக்காணவருடியென்றான். (ங)

அந்தணன்வேண்டலுமாயைகாண்டிகண்டாலகற்றுதியேலகற்
றுகெனவருளிமாயன், கந்தருவநகரம்போன்மறைதலோடுங்கருணை
மூர்த்தியைக்கண்டகளிப்பினுலே, சந்ததமுட்குளிர்காதியந்தக்கா
னிற்றவத்தொடுசின்னுளிருந்துதானேயோர்நாட், சிந்தனையிலரியு
ணாத்தவுணாயைநாடித்தேமலரோடையின்மூழ்கச்சென்றானன்றே



வனம்படிந்தங்கதனுட்செய்விதிக்கேவேதமந்திரமுந்தியானமுந்
தான்மறந்துகாதி, யினம்பயிறன்மனைக்கேதான்றன்னைநோயாலிற
ந்தவனாகக்கண்டானினத்தோரொல்லாங், கனம்படமொய்த்திருபுற
த்துமலறத்தேவிகாற்கடைக்கேவீழ்ந்தலறக்காதன்மாதா, தனம்ப
ருகத் தருவனபோ லணைத்துக்கொண்டு தழன்மிதித்தாள் போற்ப
தைத்துத்தளரக்கண்டான். (ரு)

ஆமளவிலடுத்தனசெய்தழுஞ்சுற்றத்தாரனல்கொளுத்தச்சாம்ப
ராயங்கமெல்லா, மீமமுறக்கண்டானச்சலத்தினூடேயிருக்கின்ற
காதிதனிதயத்துள்ளே, தோமுறுமாகுலமிகுந்தபுந்தியாலேதுக
ளறத்தன்பாற்றன்னுற்றோன்றக்கண்ட, வேமுறுசெய்கைகண்மே
லுமுள்ளவெல்லாமிராகவகேளெனமுனிவனிசைப்பதானுன். (சு)

இப்பாரிலூணநாட்டோரூரினெல்லையிருக்கின்றநீசனுய்க்கறிப்
போர்தங்கண், மைப்பாவையொருத்திவயிற்றொருசூலாகிவருந்தி
வளர்ந்துறுகாலம்வந்தவெல்லை, கைப்பாலனுய்ப்பிறந்துவளர்ந்து
வெந்தகரிக்கட்டைபோனிறத்துக்காளையாகி, யொப்பாகினுய்க்கறி
ப்போர்குலத்தில்வந்தவொருகடைச்சிதனைமணஞ்செய்தொருமை
யானுன். (எ)

வரைகளினும்வனங்களினுமுதலாயெங்குமனமுமுயிரும்போல
வாழுநாளிற், றரமிசைதன்குலம்விளங்கமைந்தர்தம்மைச்சனிப்
பித்தான்சிலநாளிற்சராவந்தெய்தி, நரைபெருகவருதலுமேதழை
யாற்செய்யுநன்மனைதூரத்தியற்றிநண்ணலுற்றான், புரையறுமாத
வர்போலங்குறையுநாளிற்புத்திரர்க்குஞ்சராவந்துபுகுந்தன்றே.

மனையவட்கும்புத்திரர்க்குந்தனக்குஞ்சேரவார்த்திகம்வந்தது
நோக்கிவருந்துநாளிற், றனையொழியவனைவரையுங்காலன்மாய்ப்ப
ச்சந்ததம்வாய்விட்டலறித்தனியாற்றாது, நினைவழிந்தோராசையு
மற்றநேகதேசநெடிதுழல்வான்கீரமெனுநீதிநாட்டிற், புனைமுடிம
ன்னவனகரிற்புகுந்து வானிற் பொற்றெருப்போலொரு தெருவிற்
போகும்போதில். (கூ)

இறையவன்மாண்டனனுலகங்காக்கவேறோரிறைவனைக்கொண்
டேகுதியென்றேவிச்செம்பொ, னிறைமணியாலலங்கரித்துவிடுத்
ததந்திநிருபதியாரொனத்தேடிநேரேபோதக், கறைவடிவோடிவன்

கண்டானிவனையந்தக்கறையடிகாணலுங்கரத்தாற்கழுத்திலேற்றவுறைதருபானுவினுடன்செல்லுதயநாகமொத்ததுபல்லியஞ்சூழ்ந்துவரியொத்த. (௧௦)

எண்டிசையுஞ்சயசயவென்றிறைஞ்சவந்தானிவனிறையென்றலங்கரித்தாரெழில்கொண்மானார், பண்டையமைச்சருஞ்சேனைத்தலைவர்தாமும்பணிதலைக்கொண்டார்தரணிபாலனாகி,மண்டலமெங்கணுஞ்செங்கோன்முறையினோச்சிமரபினாற் கவலனெனும்வண்பேர்பெற்றுத், தொண்டையிதழார்விரும்பக்கீரநாட்டிற்சுடர்மணிச்சிங்காதனமேற்றோற்றமிக்கான். (௧௧)

நாலிரண்டுவருடமுயர்கவலனென்னுநாய்க்கறிக்குங்கடையனரபதியாய்வாழ்ந்து, மேலதற்பின்னொருநாளிற்றனியனாகிமெய்யலங்காரங்களெல்லாம்விட்டுத்தானே, காவினடந்துயர்மனையின்புறமுற்றத்திற் கடைவேடத்துடனுலவுகாலையாங்கே, நீலிமையாநிறத்தோர்நாய்க்கறிக்குநீசர்நேர்வந்தார்வீணையிசைநிரப்புங்கையார்.()

யாழுடையகாளைக்குண்மேலாமற்றோரிருண்டநிறச்சிவந்தவிழிவிருத்தனெய்திக், காழுடையநற்கிரமகிபன்றன்னைக்காண்டலுமேகாதலுடன்கடைஞ்சனென்னு, மூழுறுதொல்பெயர்வினவிநெடுங்காலத்தினுறவாநீயெங்ககன்றாயுறைவதெங்ஙன்,சூழுறுநல்விதியாலேகண்டேனென்னாத் தொடர்பெல்லா முள்ளபடிதோன்றச்சொன்னான். (௧௩)

அதுபுகன்றவவன்றன்னைக்கவலனானவரசனிகழ்ந்ததிர்ந்துரப்பியவணின்றாங்கே, கதுமெனவுள்ளேகுதலுமிவற்றையெல்லாங்கனங்குழையார்சாளரத்திற்கண்ணிற்கண்டார், புதுமையினானின்றார்நின்றுழியேகண்டு பூபதியாமிவன்கடைஞ்சப்புலையனாமே, லெதுசெயப்பாற் றினியென்றே துணுக்குற்றேங்கி யிடருற்றாரிவன்கலங்காதிதயத்தெண்ணி. (௧௪)

அறியான்போலவற்றையெல்லாமறைத்துமுன்போலாதனத்திருக்கவுமங்கவனைமுன்னஞ், செறிவானவஞ்சியர்மந்திரியர்யாருந்தீண்டாதசவத்தைப்போற்றெரிசியாராய்ப், பிறியாதுநின்றனரச்சனத்துட்சேர்ந்தும்பேதமாயிவன்றனித்தபெற்றிகூறிற், பொறியாருங்கல்விதனமியாதுமின்றிப்புறநாட்டிலுறும்பதிகன்போலுமன்றே



ஆயிடையாவரும்புலைநாய்க்கறிப்போனாலேயநேகநாட்பாதகமேயடைதலானோம்,போயினியோர்சாந்தியினுமுய்யமாட்டோம்புனிதமாம்படிதீயிற்புகுதுமென்னாத், தீயில்விழநிச்சயித்தந்நகரோரெல்லாஞ்சிசுக்கண்முதல்விருத்தர்கடைசேரக்கூடி, வீயிலுறைவண்டுகள் போலெரியில் வீழ்ந்தார் வேந்தனும் புலைக்கடைஞ்சன் மிகவுநொந்தான். (௧௬)

நல்வினைஞ்சேர்தலிற்சித்தந்தெளிந்துநன்றாநாய்க்கறிக்கும்புலைநிருபனாடுகிற்பான், புல்லியநந்தொடர்பாலித்தேசத்துள்ளோர்பூரியராயனல்புகுந்துபொன்றிப்போனா, ரல்லலுடனினியமையுமென்னநாடியாவிவிடத்துணிந்தனலில்வீழும்போதிற், பல்லவம்போலெரிகடைஞ்சனுடலிற்றாக்கப்படிபுனலுட்காதியுடல்பதைத்ததன்றே. ()

மாமாயைநின்றகன்றுதெளிந்தகாதிவருமுகுர்த்தமோரிரண்டின்மயக்கநீங்கி, யாமாரொன்காண்கின்றோமென்செய்தோமென் றெல்லாமுண் ணினைந்து சலத்திடை நின்றேறி, யாமாவிப்படியன்றோவுயிர்களெல்லாமரணியத்துட்சினப்புலிபோலவாவியோடித், தோமாருநெடுமயக்கின்மனமோகித்துத் துவள்கின்றாரெனக்கருதித்துயரந்தீர்ந்தான். (௧௮)

அக்கருத்தினுடன்சிலநாளகற்றிநின்றானாச்சிரமத்தவ்வயினோதியெய்த, மிக்கமகிழ் வுடன் றேன்காய் விரும்பியூட்டி வெய்யவன்போஞ்சந்தியிற்றம்விதிகள்செய்து,தக்கசயனங்கள்பயின்றிருவர்தாமுந்தத்துவநூற்கதைகண்மொழிசமயந்தன்னி, லொக்கவுறையதிதிதனைக்காதிநோக்கியுத்தமநின்னுடலுணங்கியோய்ந்ததென்னோ. ()

கூறுவாயெனுங்காதிக்கதிதிசொல்வான்குவலயத்துத்தரதிசையிற்குலவுசெல்வந், தேறுபுகழ் கீரமெனுந்தேசந்தன்னி லியான்மாதமொன்றிருந்தேனினியோர்வேண்ட, வாறுறயானுறைநகரிலொருவனென்பானணுகியுரைப்பானிந்நாட்டரசாயிவ்வூர், மாறுபடாதெட்டாண்டிங்கொருவன் வாழ்ந்துமற்றவனாய்க் கறிப்பவனாமரபுதோன்ற. (௨௦)

வேறு.

அனையவன்கனல்புக்கிறந்தனனாங்கேயந்தணரனல்புகுந்தவிந்தா, ரெனையவொன் றிசைக்கேனென்றலு மதுகேட்டியம்பிய தேசம்விட்

டேகிக், கனதிைாக்கடவுட்புனற்பிரயாகைக்கரையிலப்பாதகங்கழி
ப்பான், றனேிகர்மறையாற்சாந்திகள்செய்துசாந்தராயணஞ்சரித்
திளைத்தேன்.

என்றுகொண்டதிதியம்பலுங்காதியெம்முடைச்சரிதையீதெ
(உக)
ன்னுத், தன்றனியுளத்திலதிசயமிக்குத்தன்னுடைப்புலைச்சரித்திர
மாய், முன்றிகழியற்கைகாண்பதுவிரும்பிமுந்துள்நாடுகளகன்று,
சென்றுபுக்கூண்மண்டலந்தனிற் ருன்செனித்துன்றயிடமெலாங்க
ண்டான்.

முந்துதான்கண்டபடியெலாங்கண்டுமொய்சடைமுடிமிகத்துளக்
(உஉ)
கிச், சிந்தையில்வியந்துநான்முகன்விவிதச்செய்கையைநோக்கிமே
ற்சென்ரு, னந்தல்லூணமண்டலநீங்கியணிதிகழ்கீரநாடணுகி, வ
ந்துதான்முன்னஞ் செய்தனவெல்லர்ம் வழுவறக்கண்டுகேட்டறிந்
தான்.

இதுகொலோமுன்ன்மியம்பியமாயேர்னெமக்கறிவித்மாமாயை
(உங)
புதுமையாமிதனைந்ன்குறவறிந்தோம்புந்தியர்லென்பதுகருதிக்
கதுமெனவந்தத்தேசநின்றகன்றுகனவரைச்சாரலினணுகி
யதுலமாதவனேரங்கைநீருணவாயரிமகிழருந்தவம்புரிந்தான்.(உச)

ஆண்டுசென்றளவேயம்மலைச்சாரலருந்தவனுச்சிரமத்தி, னீண்
டமானீலமுகிலெனத்தோன்றிநிறைதவக்கர்தியைநோக்கி, யீண்டி
யவெமதுமர்யையின்பெருமையியல்புறக்கண்டனையினிமேல்,வேண்
டியதென்னைக்கிரித்தடத்தியற்றுமெய்த்தவமெதுபொருட்டென்ன.

அதித்தனனிறைஞ்சித்தொழுதனன்கரியதுங்கமாமுகிலினைக்க
ண்டு, கதித்த சாதகம்போற் களிப்புறுகாதி கருணையங் கண்ணனை
நோக்கி, விதித்துநீகாட்டும்வினையிருண்மர்யைவிளங்குறவிதுவென
க்கண்டேன், மதித்தவம்மாயைமருமகானறியேன்மயக்கமெய்யான
தென்னென்ருன்.
(உரு)

மாலதற்குணப்பானந்தணுவிந்தமண்முதலியாவையுமனத்தின்
பாலுறவிருப்பதன்றியேபுறத்திற்பயில்வதோர்காலமுமில்தர்
மூலமில்கனவுமயக்கமுமதமுமுதலியநெறிகளிலியாருஞ்
சீலமாய்நோக்கியனுபவிக்கின்ருர்சிந்தையுட்சகமிருப்பதுவே.(உஎ)



அனந்தமாய்விரிந்தசகத்திரளெல்லாமயர்வறவமர்வதற்கிடமா,ம
னந்தனுவிந்த நாய்ப்புலைத்தன்மை வெளிசெயின்மற்றிதில் வியப்பெ
ன், கனந்தருபத்திப்பாச்சலின்வயத்தாற்கடைப்புலைத்திறந்தெரிந்
துளதா, முனந்தொடரதிதிதானுமப்படியேமோகங்கண்முழுவதுங்
கண்டான்.
(உஅ)

கண்டவப்படியேநாய்ப்புலைத்தன்மைகாகதாலீயயோகத்தால்,வ
ண்டுறையூண ரேமண்டலத்தோர் மனத்தினும் பத்திபாய்ந் துளதா,
லெண்டருபத்திப்பாச்ச லொன்ருெருகா லெண்ணறுபெயர்க்குமு
ன்ருேன்றும், விண்டநெஞ்சியற்கைகாகதாலீயநிலைமைபோல்விசி
த்திரகதியாம்.
(உகூ)

அப்படியன்ருேசொற்பனமொன்றையநேகமானிடர்தனிகாண்பர்
கைப்படுவிநோதமொன்றிலேமகிழ்வர்காதலரநேகமானவர்கள்
செப்பியகடைஞ்சனுனவப்புலையன்றிருமனையூணமண்டலத்தே
தப்பறவந்தக்குறியினுன்முன்னேசனித்துளனப்படித்தானே. (ஙo)

அத்திறந்தானேதமரொலாமிறப்பவன்னியதேசத்தையடைந்தான்
சத்திரநிழற்றக்கீரதேசத்திற்றலைவனுய்ப்பின்கனல்புக்கா
னுத்தமமாநின்னுளத்திலேவெறிதேயுன்னுசம்பந்தமாயதனுற்
பத்திபாய்ந்துளதாலப்படியாகப்பகர்புலைக்கடைஞ்சனதியற்கை.()

இவனவனுனீததுவெனதென்றேயிடரின்மூழ்குவரறிவில்லா
ரவனியாமுழுதுநாமெனுமுண்மையறிந்தவரழுங்கிநின்றயரார்
பவனமார்பொருளிற்புகிர்வுறுமனர்த்தபாவனைபுந்தியிற்பொருந்திக்
கவருருரதனிலிவர்கண்மோகத்திற்கவல்வுருர்தத்துவங்கண்டோர்

ஞானபூரணமெய்தாமையான்மனத்தினண்ணியமோகத்தைநாடி
யீனமென்றகற்றவறிகிலையிதனுலிந்தமோகத்திலேகணத்தி
னீநனியமிழலுற்றனையிந்தநெடியமோகத்திகிரிக்கு
மானதந்தானேயச்சதாமதனைவலிந்தடர்வுறிலதுநலியா. (ஙங)

எழுதிநீகிரியின்முழையிடைவருடமீராந்துதவநனியியற்றின்,மு
ழுதுமாய்முடிவொன்றிலாதமெய்ஞ்ஞானமுற்றுதியென்றுபின்முகு
ந்தன்,றெழுதகுதோற்றமெழுந்துழிமறையத்துயருறுமோகங்கணீ
ங்கிப்,பழுதறுகாதிகற்பனையெல்லாம்பற்றறுத்தருந்தவம்புரிந்தான்

வருடமோர்பத்தின்ஞானபூரணனய்வாழ்ந்தனன்பின்னரோதனதாம், பொருவில்சற்பாவமடைந்துயர்ந்தோனய்ப்பொருந்தியபயந்துயர்நழுவிப், பருகுறுபோகத்திச்சையற்றுள்ளபடியிலேசந்ததஞ்சுகமே, யுருவமாஞ்சீவன்முத்தனயாறியுவாமதியெனவுளநிறைந்தான். (ருரு)

காதிகதை முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-க0கஉ.

# உத்தாலகன்கதை.

இவ்வகையேயிம்மாயையறநெடிதாய்வெலற்கரிதாயேறித்தாழ்ந்து
வெவ்வியமாமோகங்கள்விளைவித்துப்பரமத்தின்மேவிநிற்கு [மைப்
மவ்வகையாலுணைக்கின்றேனநவரதஞ்சொரூபத்தையடையாதா
பவ்வமெனவருந்துயரின்மூழ்குவிக்குமிம்மாயைப்பண்புதானே. (க)

சித்தசயமாத்திரமாந்தெய்வமருந்தாலன்றிச்சென்மவெங்நோய்
சத்தியமேபிறமுயற்சியாவையினுந்தீராதுதகைமைமிக்கோய்
வைத்தநிகழ்காலத்துக்கணத்தில்வருமியல்புறவாகியத்தாற்பற்றி
யொத்துவருமெதிர்காலமிறந்தகாலங்கருதாருளமிலாதார். (உ)

சங்கற்பம்வேட்கையனுசந்தானங்கணந்தோறுந்தவிர்த்தியென்னி
மங்குற்றமனேலயந்தானதுவாகுமனேலயத்தைமருவுபோதம் [ன்
பங்கற்றபிரத்தியச்சேதனமாகுமதற்குமனேபாவமென்ப
தங்குத்தானிலாவியல்பாமாதலினன்மனேவிகற்பமின்றிப்போமே()

அற்றமறுசத்தியமுமுயர்சிவமுந்தற்பரமவவத்தைதானு
முற்றறிவுநிறைசுகமுமலமறலுமனப்பந்தமுழுதுந்தீர்த
லுற்றவவிவேகத்தையொழித்துறுதியூகத்தாலுறுதியாகக்
குற்றமறுசற்புருடர்கோதறுநூல்களின்மனத்தைக்கூட்டியென்றும்

அனவரதமுணாத்தல்விடல்பற்றலிமைப்புறல்விழித்தலனைத்துஞ்செய்து, மனனமறுசுகவானய்ச்சற்சின்மாத்திரபானய்வாழ்திமைந்தா, கனமலமாங்காண்பவைதீர்ந்துள்ளத்தின்மலமறுத்துக்காதற்பாச, மெனவுயர்கோணாயையறுத்துநின்னறிவிற்றற்பரனயிருத்தியன்றே. (ரு)



நலனிழிவாஞ்சங்கேதத்தாசையெனும்விடுசிகையைநண்ணயாகிச்
சலனமுறுவிருப்புவெறுப்பறவுணர்வின்சாரபரந்தானய்வாழ்வா
யலகறநானிவனவனீததுவெனதாம்வாதனைகளறுத்தொன்றென்றே
நிலவியநிட்டையிலாறிச்சற்சின்மாத்திரபரனய்நின்றுவாழ்வாய் (சு)

எனதுபிறரதுவென்னுமெண்ணமறச்சகநிலையிலிரண்டற்றொன்ரு
கனவயிரத்தம்பமெனவுணர்வுருவைப்பற்றிநிலைகண்டுநிற்பா [ய்க்
யனகமுடனமலமாயகண்டமாந்தன்னறிவிலமைவென்றுண்டாஞ்
சனனமயக்கத்துக்குக்காரணமாம்பிரிவன்றுதவிர்ந்துபோமே. (எ)

பேரானந்தத்தின்பநிலையினியல்பினைநோக்காய்பின்னைநிற்கும்
வாராதநல்லமுதம்வந்தாலுமுயிர்தொலைக்கவருநஞ்சொக்குஞ்
சோராமெய்யுணர்வுடைமைதூரிதாமனந்தடித்துத்துன்றுமாகிற்
காரானமுகில்சூழமறைத்தாலுண்டோமதியங்கண்ணின்காட்சி. ()

சரீரமாத்திரத்தாசைபுந்தியாற்றனல்லாதனதானென்றே [ம்
பரிவுறலான்மக்கண்மனைகுடும்பமெனும்பாவனையாற்பருக்குமுள்ள
விரியுமகங்காரவிகாரத்தினன்மமதைமலவிநோதந்தன்ன [னே.
லூரியவென திதுவென்னும் பாவனையான் மிகப்பருக்குமுள்ளந்தா

ஆதிவியாதியின்விரிவாலவைமாறித்தேறுதலாலகற்றல்பற்ற
லூதியமாமுயற்சியினற்பிறவிதொறுமிகப்பருக்குமுள்ளமைந்தா
மாதர்மணிதனமுதலாஙேயத்தாலாபத்தால்வருலோபத்தாற்
போதுபொழுதிவைநன்றுநலத்தினற்பருத்துள்ளம்பூரிப்பாமே. ()

துராசையெனும்பால்பருகித்தொல்போகமெனுங்காற்றுற்றுடர்மொய்ம்புண்டா, யிராகமுறுவழியுலவிமனப்பாம்புமிகப்பருக்குமிராமகேளாய், புராதனவுத்தாலகன்போலைம்பூதத்தையும்பொடியாப்போகப்பண்ணி, நிராகுலமாம்புந்தியினலிதயத்தேநினைத்தியெனநிகழ்த்தலோடும். (கக)

அருளியவுத்தாலகனரொந்நெறியாலைம்பூதமறுத்துத்தன்னுட்
கருதியதென்னென்றிராகவன்கேட்பவசிட்டமுனிகருணைவள்ளால்
பெருகியவைம்பூதத்தைவிசாரத்தாற்பேதித்துப்பிரமமெய்தி [பாய்
யொருமைபெறுநிலையுடையவுத்தாலகன் கதையாமுணாப்பக்கேட்

கந்தமாதனமென்னுங்கனவனையிற்கற்பூரங்கமழாநின்ற
கொந்தலர்சோலைச்சாரலுறைபவனுத்தாலகப்பேர்கோதிலாதோ

னந்தமுனிவரன்முன்னேசிற்றறிவன்விசாரத்தோனகண்டவாழ்விற்
சிந்தையிடர்தீரவிளேப்பாருதோன்புந்திகலந்திருந்தப்பெற்றேன் ()

பூதநெறியாற்றவத்தானூற்பொருளால்யமநியமம்பொருந்துநீராற்
றீதறுநல்விவேகந்தான்சேர்தலுமேயவனினையசிந்தைசெய்தான்
கேதமறவிளேப்பாறும்பதமேதுமறுபிறவிக்கேடிலாத
மேதகையபதமேதிங்கிதுவன்றேமுதல்வினைவின்மேவற்பாற்றே.

உளநினைவிலாவிமலபரபதத்தேநெடுங்காலமொன்றியொன்றுய்க், கிளர்கனகவரைச்சிகரத்துறைமுகில்போவிளேப்பாறக்கிடைப்பதெந்நாட், டளர்வறவீதியற்றினமேலெவையியற்றத்தக்கதெனச்சவித்துச்செல்லு, மளவறுபோகச்செல்வமெனதுளநின்றெக்காலம விழ்ந்துபோமே. (கரு)

மனனமெனுந்திரைமோதிமதத்தெழுந்தபேராசைவாரிதன்னிற்
புனிதமுறும்புந்தியினலழுந்தாமற்கரையேறிப்போவதெந்நா
ளனவரதந்தொழிறெழிலிலாமைகள்போய்ப்பற்றுவீடின்றியுள்ளே
தனதொளியாம்பதமேவியெக்காலமகிழ்வுறுவேன்றளராநின்றேன்.

கருதுநினைவொழித்தொடுங்கிக்கார்வரையின்முழையிடத்திற்கருங்கற்போல, நிருவிகற்பசமாதியினலெக்காலமசைவற்றநிலையினிற்பே, னொருமைபெறுதியானத்தாவிளேப்பாறுமென்னுடையவுச்சிமீதே, குருவியினங்கூடமைத்துக்குடியிருப்பதெக்காலங்குஞ்சியாலே

வேறு.

ஊகத்திவ்வாறுன்னிமிகவுத்தாலகனுட்பரவசனு
யேகத்தியானஞ்சாதிப்பானிருந்தவிருந்தவிடந்தோறும்
வேகத்துகளுமனக்குரங்குவிடயக்கொம்புகளிற்பாயச்
சோகத்திறந்தீர்மகிழ்ச்சிபெறுஞ்சொரூபசமாதிபெற்றிலனல். ()

நிறனுர்கானிலிவ்வகையேநிலையற்றலேவோன்பின்னெருகாற்
புறனுர்காட்சியொழிந்திடலாற்பொல்லாமனமாம்வன்குரங்கு
திறனுரிருண்மூடியதென்னத்தியானங்களிலேயுள்ளழியா
வறனுர்கிரியிலுலேந்துழல்வுற்றறவேவாடியலமந்தான். (கக)

யாருமின்றியாராலுமெய்தற்கரிதாகியமுழைதான்
சாருமுத்திப்பதமெனலாந்தன்னிலொருகாற்றனிமேவி



யாருமலேக்குன்றியின்றழைமேலருணச்சருமம்விரித்ததன்மே
லோருமனத்தின்செயல்குறுக்கியுணர்வான்புத்தன்போலாகி. (உ0)

புண்டரீகவாதனத்திற்புத்தன்போலுத்தாமுகனு
யண்டமிரண்டுமிருகுதிமேலாக்கிப்பிரமாஞ்சலிபண்ணி
மண்டுகின்றவாதனையின்மருளுமனத்தைமீள்வித்துத்
தண்டலில்லாநிருவிகற்பசமாதிப்பொருட்டிவ்வகைநினைந்தான். ()

வாரர்ய்மூடமனமேநின்மாயவாழ்க்கைகளிற்பயனென்
றீராவிடரேமுடிவில்வருஞ்செயலிற்பெரியோர்சேருவரோ
வாராவமுதாஞ்சாந்தியைவிட்டழியும்போகமாதரிப்போ
ரேரார்மலர்க்கற்பகக்கான்விட்டெரிகூர்விடவெங்கானுறுவார். ()

அயனுடற்றுய்பார்தலத்திலணுகினுயாகிலுஞ்சாந்தி
வியனூமுதையொழிந்தமிக்கநிருவாணம்பயிலாய்
பயனுயதுபோல்விசித்திரமாய்ப்பர்வாபாவமயவடிவே
யியல்பர்மிந்தச்செயல்கள்பெரிதிடராமென்றுமினிதாகா. (உஙு)

சத்தர்திகளாமித்தொழில்கடம்மான்மண்டூகம்போலப்
பித்தர்ய்மூர்க்கமனமேயேன்பிரமிக்கின்றுய்விடாதவமே
யெத்தாற்சிறிதுதனையடைந்தாயெதிலேயின்பமுறுகின்றுய்
நித்தர்ரமுதாய்ச்சமமாகுமதினீநிலேசேராநெறியென். (உச)

வேறு.

படர்மூர்க்கமாமனமேவீணுய்த்தோன்றிப்பருக்கின்றசெவித்தொழில்கள்பயின்றுசத்தந், தொர்டர்கின்றபுந்தியினல்சுணமாப்போற்றுஞ்சுறவேண்டாதோவின்றெ டைமையறிவு யடர்பரிசமூகமாமதனுற்றுன்பமடியாகப்பிடிக்கன் சாந் ... பால, மடமைமிகுமூர்க்கமாமனமேயென்றுமாரு ... த்தைமருவவேண்டாம். (உரு)

ஒளியுருவத்திர ணுக்குவிழியின்செய்கையுற்றுநீவெவ்விளக்கையுணராதாகி, விளிதலுறும்வி டில்போல்வேகவேண்டாவெய்யமனமோநாவின்விருத்திமேவி, யெளிதருந்தியுணவுகளின்மணத்தினுலேயிரைத்தூண்டிற்கவர்மீன்போலிறக்கவேண்டா, நளின்விதயத்தளுயிர்நெறிபோய்க்கந்தநாட்டத்தாற்கட்டுண்ணேனவண்டே போல். (உசு)

உரைத்தவசுணங்களிறுவிட்டின்மீன்றேஞேசையூருெளியிரதநாற்றமென்ன,நினைத்தவிவற்றுென்றுென்றுன்மாய்ந்துபோகுநிலையழிக்குமவையைந்துநேரோகூடிக், கரைத்தலுறுபவர்க்கின்பமெங்கேயுன்றன்கட்டுக்குவாதனையேகயிற்றுச்சாலம், புரைத்தெழுநெஞ்சேயதுவேபோகுமாகிற்பொருவில்சயமஃதுனக்குப்புகலுங்காலே. ()

வேறு.

எதுபயனுகநிற்கிங்கித்தண்டமியான்செய்கின்றேன்
முதுவிசாரத்தின்மிக்கமுதன்மையோர்க்குளமொன்றில்லை
யதிகமாமுடிவில்சித்துக்கற்பமாநிலையென்னெஞ்சில்
விதியதாயுளதோயானைவில்வக்காய்புகுதலுண்டோ. (௨௮)

தசைபயில்பாதந்தொட்டுத்தலைமட்டும்வெவ்வேறுய்ந்து
மிசைவுறயானங்கில்லையானெனுநிலையெங்குண்டோ
திசையெலாம்விழுங்கிமேலாஞ்சித்ததாய்க்காண்பதின்றி
யசைவறவெங்குந்தானுமென்றுலகனைத்துங்காண்கேன். (௨௯)

உயர்வுறுமதற்குநாமகற்பனையொருமைபன்மை
வியன்மகத்தணுவென்றேதும்விதமுறுகுறிகள்காணே
னியலறிவாதலாலேயான்காணுமென்பானீயே
துயர்தருமேதுவாகத்தோன்றினைபேதைநெஞ்சே. (௩0)

முதுவிவேகத்தாற்போதமொய்ம்பினுலிந்தவுன்னைக்
கதுமெனக்கொல்லாநின்றேன்காணுதிகவலைநெஞ்சே
யிதுதசையிதுபுண்ணீரீதென்பிவையுளவுயிர்ப்பாய்ப்
பொதுளியவாதமிங்கேயகமெனல்பொருந்திற்றெங்கே. (௩௧)

தசைகள்வேறுதிரம்வே[illegible]விடயக்கொ[illegible]றுமெய்யி
லசைவுவேறறிவுவேறுவகமென்[illegible]ஞ்சொரூ[illegible]ந்திற்றெங்கே
விசைவிழியிதுதோலீதுவியன்செவியிது[illegible]ன்னீது
பசைவுறுநாவிதிங்கேயகமெனல்பயின்றதெங[illegible]க. (௩௨)

அகமெனலெங்குமாகுமற்பமிங்ககம்[illegible]ருகு
நிகழுமிந்நல்லநோக்கேநோக்கயனெறிவேறில்லைப்
புகரில்சின்மயனுமென்னைப்போதமிற்றூர்த்தநெஞ்சே
மிகவருத்தினையான்கன்றைவனச்செந்நாய்வெருட்டுமாப்போல். ()



தெய்வயோகத்தாலின்றுதேறினன்சொரூபச்செம்பொன்
கைவழிகவராஞ்ஞானக்கள்வன்மீண்டிவனைச்சேரே
னைவகைப்பொறிகளொன்றுவாதனையற்றிருந்துந்
தைவருபுறனிற்றத்தம்புலன்களிற்றுவாநின்ற. (௩௪)

வாதனைபொறிகட்கெல்லாமன்னுகாரணமன்றுகு
மாதலான்மூர்க்கமானவைம்பொறிகாள்நெஞ்சி
னேதவாதனைகண்மாற்றிக்கருமங்களெல்லாஞ்செய்வீர்
வேதனைத்துன்பமொன்றுங்கிஞ்சிலுமேவாதென்றும். (௩௫)

வேறு.

கூடுசெயுந்தன்வாயினுலாற்பொன்றுங்கோசகாரக்கிருமிக்கூட்டம்போல, வோடுபொறியெனுஞ்சிசுக்காள்மயலால்வீணேயுலர்ந்திடுவீர்பொறிக்கெல்லாமுறையுளான, நீடுமனனேயொடுங்கிப்பொறிகளோடுநீவேறற்றுத்துமதத்துவத்தைநேரே, நாடுதிபற்றறற்றுென்றுய்முத்தியானஞானவடிவினைநிலையாய்நண்ணுவாயே. (௩௬)

ஆசகலாவிடயவிடவிடுசேயாகியனந்தமாநானெனும்வாதனையைத்திர, மாசறவிட்டிச்சையெலாமொழிப்பதென்னுமந்திரயுத்தியினுலேமறுசென்மம்போய்த், தேசமுறுபகவானுயச்சமெல்லாந்தீர்விடமாவாய்மனமேதிரள்சங்கற்பம், வீசுதருமயல்கொடியாய்நீயாங்காட்டைவெட்டிநெடும்பூமியிலேவிநோதஞ்செய்வேன். (௩௭)

வேண்டியவாவிளையாடித்தற்பதத்தைமேவினன்கேவலமானேன்வெற்றியுற்றேன், னீண்டுவுயர் நிருவாணமானேன் செய்வதிலதானேன்பிறிவற்றேனிடம்வேறற்றேன், னீண்டதெளிவுடைமையொளியுடைமை யுண்மைநிகழ்வுடைமை யறிவுடைமை நீங்காமெய்ம்மை, மாண்டகுசுகமுடைமை யுபசாந்தநீர்மைமகிழ் வுடைமைநிறைவுடைமைமகிமைபான்மை. (௩௮)

ஆவரணமில்லாமையுதாரத்தன்மையழியாததேசுடைமையகண்டநீர்மை, யாவதுந்தானுமுறைமையச்சமின்மையேகமாந்தன்மைமனமெழுந்தோடாமை, யோவலிலாதுடனுறையிக்குணங்களென்னுமுத்தமிகள் சுமங்கலிகளொப்பிலாதார், பாவனையொன்றுஞ்சொரூபமடைந்தேற்கென்றும்பன்னியராயுளங்கவரும்பாவைமாரோ

தேங்காதுதன்வசமாய்விரிந்தபுந்திச்செயலாலேயிவ்வாறுதிறத்தி லெண்ணிப், பூங்காவிசிறிதலர்ந்தாற்போலப்பாதிப்புனைவிழியோன் புண்டரிகாதனத்திற்புல்கி, யோங்காரமேனேக்குந்தொனியதான வுத்தமனீண்முழக்காலேயுச்சரித்தான், பாங்காகநாவறையுமணியி னூடெயின்றுதடையற்ருேசைபடர்வதேபோல். (சு0)

சான்றபிரணவமோதுமவன்றன்சித்துத்தற்பதத்தைநோக்குத லுந்தனியோங்கார, மூன்றறவெவ்வளவுமேலுற்றுநின்றதுயர்ந்தக ன்றுவிமலமாமுணர்வின்கண்ணே, மூன்றனைமாத்திரையுடையபி ரணவத்தின்முற்கூறுவெளியாகமுழங்கியெங்கு, மான்றபிராணங் கடொனிகிளப்புமெய்யிலழகிதாய்க்கிளர்ந்தோங்கியதிருமெல்லை.()

இன்னுயிரைப்புறத்தகற்றவல்லதானவிரேசகப்பேர்கிரமந்தானி யாக்கைமுற்றுங், கொன்னுறுபாழாக்கினதானிறைந்துயர்ந்தகும் பமுனிகுரைகடலைக்குறைத்ததேபோற், பின்னமில்சிற்சுவைநிறை ந்தவாகாசத்திற்பிராணனிறைந்துளவிதயப்பெருந்தீமண்டி, யன்ன வுடன்முழுதுமெரித்துளதோங்காரத் தாதியாங்கிரமத்தி லவத்தை யிதே. (சுஉ)

அவ்வவத்தைவேண்டளவுநிகழ்ந்ததன்றேயடையோகத்தாலல லவடையோகந்தான், வெவ்விடர்நல்குவதன்ருேவதற்குப்பின்பு வியனேங்காரத்தினதுவேற்றுக்கூறு, தவ்வலறச்சமநிலையாமவதர த்திற்சலனமிலாக்கும்பகப்பேர்தரிக்கப்பட்ட, வெவ்வமறுகிரமமு ளதானதன்றேயியம்பியவிப்பிராணங்களெல்லாற்றிற்கும். (சுங)

புறத்தகத்துங்கீழ்மேறிக்காகாசத்திற்புரிந்தசையாப்பிராணங்க ள்புரணமாகித், துறத்துருத்தியிடைதடைப்பட் டனபோனின்று தோன்றிமுதலேயுடலைச்சுட்டவங்கி, நிறத்தவிடிபோற்கணத்திலவி ந்ததன்றேநீகாரவெளிறெனவெண்ணீருயங்க, முறத்தெரிந்ததால தற்கேயுடலென்பெல்லாமொழுங்காகத்தோன்றிநரம்புடனேநின்ற. சுகமாயகருப்பூரப்பாயறன்னிற்றுயில்வதுபோலெலும்புநிரைதோ ன்றிற்றன்றே, மிகமோதுபவனத்தாலந்தநீறுவிசைந்தெழுந்துகண ப்போதில்விசும்பைச்சுற்றித், திகழ்வானசரற்காலந்தன்னின்மேக ஞ்செறிபனிபோலோரிடத்திற்சென்றுசேர்ந்த, விகலாதவிவ்வவத் தைவேண்டுமட்டுமியலோங்காரத்திரண்டாங்கிரமத்தெய்த. (சுரு)



அவத்தையிதுநிகழ்ந்ததடையோகத்தன்ருலடையோகம்பேரிட ரையளிப்பதன்ருே, வவற்றினிற்பின்பிரணவத்தின்மூன்ருங்கூரு யமையுமுப சாந்திதருமவதரத்தி, லுவப்புறுபூரணத் தாலேபூரகப் பேருளகிரமம்பிராணங்கட்குண்டாயிற்றன்றே, யுவத்திரமிலாவங் தவவதரத்திலுயிரெல்லாமுணர்வினமுதத்துட்புக்க. (சுசூ)

உகுபனிதோய்ந்தாலொப்பவதிசீதத்தையுற்றபிராணங்களெலா மொழுங்கினலே, ககனமுறுபுகைதண்காராகுமாபோற்ககனநடுவு றமதியாய்க்கலையின்கூட்ட, மிகவுநிறைந்தந்தமதிமண்டலத்தில்வி யன்சுதைதாரையையுயிர்கண்மேவப்பெற்ற, திகழ்விசும்பினின்றி ழிந்தவமுததாரைசேடமாமுடனீற்றிற்சென்றுவீழ்ந்த. (சுள)

அரன்சிரநின்றிழியமுதகங்கைபோன்றவமுததாரையினலேயம லமாகிக், கரங்களொருநான்குடன்வெண்மதித்தேசாகிக்கருணை மால்வடிவென்னக்காணலாகி, யுரங்கிளருத்தாலகன்மெய்தோன்றி ற்றன்றேயுயரமுதமயமானவுயிர்களெல்லாங், குரம்பையதுதனைநி றைத்துச்சூழ்ந்துள்ளானகுண்டலிமற்றினைப்பூசைகுயிற்றிநின்ற.()

இத்திறத்திற்பங்கயவாதனத்திருந்தோனியாக்கைநிலையழியா மலியற்றிப்பின்னர், மத்தமுறுபிரமரம்போற்சுழலுநெஞ்சைவன்பி னுற்றகைவுற்ருன்மவுனியாகி, மெத்துபிராணுபானவேகநோக்கி மெல்லெனவுண்டாக்கினன்வல்விடயநின்று, தத்துபொறிகளைவரு ந்திவேறுசெய்தான்சற்றுமறப்புறப்பரிசந்தள்ளினனே. (சுகூ)

பற்றறுதிண்ணியமதியோனுள்ளேதோன்றும்பரிசமெலாந்தள்ளு கின்றபார்வையாலே, யற்றனவாக்கினன்மூலவாயில்செம்மியங்கத் தொன்பதுவாயிலனிலமெல்லாங், குற்றமறமுகமடைத்தாற்புறத் துவாரங்கும்பத்துக்கடைபடல்போற்குறித்தடைத்தா, னுற்றலய மெனுங்குணத்தைச்சேர்ந்தநெஞ்சையுயரிதயவாகாயத் தொடுக்கி னனே. (ரு0)

உரத்தமதகரியையுபாயத்தால்விந்தத்துட்குழியிற்சேர்ப்பதுபோ லொடுக்கிநெஞ்சைச், சரற்ககனம்போனிமலதெளிவைச்சேர்ந்து தள்ளினன்பற்றிபாய்தன்மையாலே,வரத்துடையவிகற்பமெலாமீ ளமீளவருவனவேண்டினபடியேவந்துதோன்ற, பரப்புறுதோற்றங்

கனைவன்னெஞ்சான் மாய்த்தான்பகைவரை வாளாற்சூரன்படுப்ப
தேபோல். (௫௧)

விகற்பமெலாமிறத்தலுமேயிதயவிண்ணில்விவேகபானுவைம
றைத்துவிரிந்தகங்குல், சகத்தினினுளஞ்சனத்தின்பார்த்தப்போ
தேதன்னுள்விவேகத்தாலேதவிர்த்தானத்தை, யகத்திருணன்று
ய்க்கெடலுஞ் சுடர்வந்தெய்தவம்முனிவ னதனையுங்கண்டகற்றிமா
ய்த்தான், நிகழ்ச்சியொளியகலுதலுஞ்சுழன்றுநெஞ்சநிசியினடுப்
போலுறக்கநேர்ந்ததன்றே. (௫௨)

போகாததுயிலினையுமறுத்தான்றூக்கம்போகுதலுமாகாசபோத
ம்வந்த, தாகாசபோதமழிந்திடலும்வல்லையவன்மனமோகஞ்சேர்ந்
தவந்தமோக, நோகாமன்மனத்தினைவிட்டேகுமாறுநூக்கினன்பே
ரிதயநோக்குமிக்கோ, னேகாதவிரவுதருமந்தகாரமிவ்வுலகினின்ற
கற்றுமிரவிபோல. (௫௩)

வேறு.

அன்னகாலையிலிருள்சுடர்துயில்மயக்கனைத்தையுமறுத்தோட்டி
மன்னுமோரவத்தையையடைந்தொருகணம்வருத்தமாறியதுள்ள
மின்னநீர்ந்துடனேயனைத்துருவமாமறிவையெய்தியதன்றே
நன்னெடுங்கரைதடுக்கநின்றெதிர்த்துமுற்றலநிறைந்திடுநீர்போல்.

விஞ்சுநீள்பகற்பரிசயத்தாலுந்தன்மெய்யறிவுணர்வாலும்
நெஞ்சுசின்மயமடைந்ததாலிரணியநிகழ்சிலம்பாமாபோல்
வஞ்சவன்மனத்தன்மைபோய்ச்சின்மயமருவியமனந்தீரச்
செஞ்செவ்வேவல்லைவேற்றுமையானதாற்சேற்றினுட்குடமென்ன

தங்குகாட்சிவிட்டமலமாய்ஞானத்தின்சமமடைந்ததுபோதம்
பொங்குவாரிதிதிரைமுதற்பகிர்ச்சிபோய்ப்புனல்சமமடைந்தென்
வெங்குமோர்மதியாயறிவுற்றவனீறில்போகத்தெண்ண [ன
மங்கியாண்டண்டம்பரித்துயர்ந்தமலசின்மயவிசும்புருவானன். ()

அவ்விடத்தினிற்காண்பதுகாட்சியற்றனந்தமாநல்லின்பஞ்
செவ்வியாநந்தமுற்றனனமுதமார்தெண்கடற்குளித்தென்ன
மெய்விடக்கழன்றதீதனுயொருதலமேவினன்சதாநந்தப்
பௌவமாயினனெங்கணுமொத்தசற்பாவமேவடிவானன். (௫௭)



அந்தணன்றனதறிவெனுமன்னமாநந்தமாநிலையோடை, வந்தம
ர்ந்ததுசரற்ககனத்திலேவயங்குமாமதியென்ன, வுந்துகாற்றிலாவி
ளக்கெனவோவியத்துருவெனத்திரையில்லாச், சிந்துவென்னநீர்க
ருக்கொண்டுபொழியலாச்சேண்முகிலெனநின்றான். (௫௮)

இந்தமிக்கபேருலகினிற்றற்பதத்திருக்குமம்முனியைக்கண்
டந்தரஞ்செறிசித்தர்விண்ணவர்குழுவற்புதப்பலபேரும்
வந்துசுற்றினரரம்பையர்நிரம்பினர்வாசவன்றனிமூதூர்
தந்தளிப்பவனங்கவையனைத்தையுந்தள்ளினன்விருப்பின்றி. (௫௯)

அலங்கன்மாதரிங்கிதங்களைச்சைசவத்தறிகிலானெனச்சற்றுங்
கலங்கலாதகெம்பீரமாமதியினன்கடவுள்வான்பேற்றெண்ணம்
விலங்கியன்னதன்னநந்தவீட்டிலேமேவினன்மதியாறு
துலங்கியோங்கியவுத்தராயணத்திலேசுடர்விடுகதிரொன்ன. (௬௦)

மூவராகியமுதல்வருமமருமொய்த்தசித்தரும்வாழுஞ்
சீவன்முத்தியாம்பதமடைந்தருந்தவன்செறியுமாநந்தத்தி
னேவலின்றியநிறைவினலாநந்தமுதிர்ச்சியாம்பதமுற்று
னுவதானபேராநந்தமதுவிலவ்வறிவினுற்றிகழ்வுற்றான். (௬௧)

ஒருகணஞ்செறிவருடநூறென்னினுமுயர்ந்தவப்பதமுற்றோர்
வருபவந்தருமேதுவாய்க்காண்பனமருவுமிவ்விழிமேவார்
பெருமையானவிப்பதத்திலுத்தாலகன்பிறைகளோராறுலே
யருகுருவகைசித்திபூமியைக்கடிந்தமைந்திருந்துணர்வுற்றான். ()

விழித்துநோக்கினன்சித்தரையவர்களுமிக்குயரிவன்றன்னைப்
பழிச்சியன்பொடுபகவநீகாண்டியெம்பணிதல்பொன்னுலகத்தி
விழிச்சுமிவ்விமானத்துவந்தேறுதியிந்திரபதத்தின்பங்
கழித்தபூமிகளனைத்தினுமில்லதோர்கற்பமப்பயன்றுய்ப்பாய். (௬௩)

பகவசெய்தனதவமெலாமிந்திரபதமுறற்பொருட்டேயென்
றகமலர்ந்துரைபன்னியசித்தரையதிதியொனநோக்கி
முகமலர்ந்துபூசித்தனன்மயங்கலன்முந்துறுபெருஞ்செல்வ
மிகவிரும்பலன்வெறுக்கலன்றிண்ணியோன்விபுதரோகுதிரொன்றான்

மொய்த்தகூட்டத்தைவிடுத்தனன்றன்செயன்முயன்றிருந்தனன்
பெத்தநீங்கியவவனையச்சித்தரும்பின்புசின்னுட்பேணி [போக

சித்தம்விட்டனர்தாங்களேயகன்றனர்சீவன்முத்தனுங்கானின்
மெய்த்தமாதவரிடங்களிற்சுகத்திலேவேண்டளவுலாவுற்றான். ()

ஒருதினத்தெல்லையொருமதியெல்லைமற்றோர்வருடத்தெல்லை,
பெருகுமாண்டெல்லையெல்லையோரோர்காற்பேதமிற்றியானத்தின்
மருவியொன்றிடும்விழிக்குமக்காண்முதல்வருந்தொழில்களிற்சேர்
ந்து, நிருவிகற்பமேயாயினனொருமையாய்நின்றனன்சித்தோடும்.()
பரந்தவுள்ளத்தினொருமையின்செறிவினைப்பழகலாற்பெருஞ்சித்து
நிரந்தரித்தெங்குஞ்சமமதாயினன்புவிநிறைவுறும்வெயிலென்னத்
திரந்தருஞ்சித்தினொருமையைநெடும்பகற்செறிபரிசயஞ்செய்ய
வரந்தைதீர்ந்தசற்பாவசாமானியமடைந்தனனதனாலே. (சுஎ)

தெரிவதாமிவற்றுதயமத்தமமுற்றான்சித்திரரவிபோலப்
பெரியதாய்ச்சமவின்பமாம்பதவியின்பேற்றினாலுபசாந்தி
புரியுநெஞ்சினன்பிறவியுமையமும்போய்ச்சரற்ககனம்போல்
விரியுநின்மலசாந்தமெய்யொளிநிறைவேதனவடிவானான். (சுஅ)

வேறு.

என்றவசிட்டன்றனைவள்ளலெதுசத்தாசாமானியமென்
றன்றுவினவவவனுரைப்பானகல்சிற்சாமானியவடிவா
யொன்றுவொன்றாயில்லாமையுறுபாவனையினுறைப்பாலே
தன்றனுள்ளங்கரைந்தேகிற்சத்தாசாமானியமதுவே. (சுகூ)

தேற்றமாங்காண்பனநீங்கிச்சித்தினிடையேசித்திறக்கிற்
சாற்றுமுயற்கொம்பெனநொய்தாஞ்சத்தாசாமானியமதுவே
தோற்றும்புறனுள்ளாய்ப்பலவாய்த்துவக்குமாகுமிவையனைத்து
மாற்றியகன்றுமனநிற்கிலதுசத்தாசாமானியமே. (எ௦)

உன்னுவெதிர்காண்பனவொன்றுமொழியாதியாமையுறுப்பென்னத்
தன்னுற்றன்பாலிறக்குமெனிற்சத்தாசாமானியமதுவே
முன்னுமுடல்சேர்முத்தருடலிலதாமுத்தரிருவர்க்கு
மென்னுளினுஞ்சேர்பெருங்கண்ணீதிதன்பேர்துரியாதீதபதம். ()
அறிந்துசமாதியடைந்தோர்க்குமனுபூதியினின்றெழுந்தோர்க்குஞ்
செறிந்துதோன்றுமூடர்க்குத்தெரியாதாமிப்பெருங்கண்ணு
முறிந்துபிறவியறுஞ்சீவன்முத்தரானசித்தரொலாம்
பிறிந்திடார்விண்பயில்காற்றும்பெரிதாமண்ணிலிரதமும்போல். ()



மூவர்முதல்வானவரொன்னைமுதனாரதனைமுதன்முனிவர்
மேவலுற்றதிப்பெருங்கண்வேற்றுப்பதமெல்லாகசிப்பித்
தோவலில்லாவிப்பதத்திலுத்தாலகனுற்றிருந்தனனு
லாவதீர்வதெவ்வளவவ்வளவுஞ்சகமாமகத்திடையே. (எங)

காலமநேகஞ்சென்றதற்பின்கந்தமாதனக்கிரியிற்
கோலமுழையிலம்முனிவன்குரம்பைவிட்டுக்குரம்பையிலாச்
சீலமுத்தனுயிருப்பேன்றீர்வென்றென்றேசிந்தித்துச்
சாலநல்லதளிர்த்தவிசிற்றளைத்தபதுமாசனத்திருந்தான். (எச)

அரைநோக்காகநோக்கியிருந்தபானவாயிலடைத்ததனுற்
புரையொன்பதுவாயடைத்துளத்தாற்பொறியும்புலனுமொன்றாக்கி
திரையில்கடல்போற்றன்சித்தின்செறிவைப்பாவித்தாருயிரின்
விரைவைநிறுத்திவணங்காமன்மேனோக்கியகந்தரத்தினனாய். (எரு)

நாவினடிச்சென்றுறச்செறியுண்ணாவினடியையுடையோனா
யோவின்முகக்காந்தியனாகியுள்ளிற்புறனின்மேற்கீழில்
வாவும்விடயத்தினிற்பாழின்மனமுங்கண்ணுமுறானாகி
வீவதானவெயிற்றினிரையெயிற்றினிரையைமேவானாய். (எசு)

அங்கத்துயிரின்மிகுதிதகைந்ததனானெய்தாயவிர்முகத்தோ
னங்கத்துருவுள்ளுணர்வுருவேயாகியெழலாற்புளகிப்போ
னங்கத்துருவுள்ளுணர்வுருவேயாகிப்பழகியறிவொன்றா
யங்கப்பொழுதப்பழக்கத்தாலகத்துத்தமமாஞ்சுகமடைந்தான். ()

ஆனந்தத்தின்பெருக்கைநுகர்ந்ததனாற்சிற்சாமானியம்போய்த்
தானந்தமறவெலாம்பரிக்குஞ்சத்தாசாமானியமடைந்தான்
றீனந்தவிர்சமனாயிருந்தான்சிந்தாகுலமெல்லாந்தீர்ந்தான்
மானந்தருமாநந்தமிலாமகாநந்தத்தான்முகமலர்ந்தான். (எஅ)
அனகபதமுற்றுடல்புளகமாறிநெடுநாளிற்கரைந்து
மனமும்பிறப்பின்மயக்கமும்போய்மகாசத்துவமாயோவியம்போற்
கனமில்ககனத்துவாமதிபோற்கதியிற்சின்னாளினிற்சுவறி
யினனதொளியான்மரப்பசைகளிறப்புப்போலாயிறப்புற்றான். ()

உத்தாலகன்கதை முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-க௦சுக.

# சுரகுகதை.

இந்தவொழுங்காலுணர்வையுணர்வினாலுணர்ந்துலகிலியங்காநின்றே, யந்தமறும்பெரும்பதத்தேயாறுதியாற்காண்கின்றவனைத்துமாளச், சந்ததஞ்சாதித்ததனைப்பெறுமளவுநூல்குரவன்றனிநெஞ்சாலே, பந்தமறுதத்துவத்தைவிசாரித்தேபெறவேண்டும்பதுமக்கண்ணாய். (௧)

மயலின்மைசாதனைநூற்பொருட்போதங்குருயமமாம்வழிகளாலே
யுயர்பதவிபெறலாகுமன்றியுணர்வொன்றினாலுறுதற்காமா
லியலுபதேசம்பெற்றுக்கூரியதாய்க்களங்கமிலாதிருக்குமாகில்
வியனுறுசாதனமுழுதுமிலதேனும்புந்தியினால்வீடுகூடும். (௨)

என்றானைமுகநோக்கியிகத்தொழிலோடிருந்தேயுஞ்சமாதியெய்தி, யொன்றானவுணர்வுற்றான்போலிடர்தீர்ந்தானொருவனொருவன்செய்கை, யின்றானாய்த்தனியிடத்திற்சமாதியடைந்தானிவரின்மிக்கோனேவ, னன்றாகவருளுகெனவிராகவன்கேட்டலும்வசிட்டனவில்வதானான். (௩)

ஆற்றுமதத்துவமன்றான்முக்குணத்தால்வருஞ்சகமென்றறிந்தோர்க்குள்ளே, தோற்றுகின்றசீதளமேததனையேசமாதியெனச்சொல்லுமன்றே, யூற்றமறக்காண்பவற்றோடுறவுநமக்கிலதென்றேயுரத்துத்தண்ணென், றேற்றசமாதியிலிருப்பனொருவனொருவன்றொழிலோடிருப்பனன்றே. (௪)

இவ்விருவரிதயமுந்தண்ணென்றிருக்கில்வேற்றுமையோரிறையுமில்லை, யவ்விதயசீதளமேயநந்தவப்பயனாமவ்வனுபூதிக்கே, கவ்வியிருப்போனுள்ளங்காரியத்தாலலையுமெனிற்கவலையாகுஞ், செவ்வியவச்சமாதானமுன்மத்தநடனம்போற்சிறப்பின்றாகும். (௫)

வருத்தமிலாவுன்மத்தநடத்தினன்வாதனைமாய்ந்தமனத்தோனாகிற், றிருத்தமுறவவன்கூத்துத்தெளிவுற்றோன்சமாதிக்குத்தீரநேராம், பெருத்ததொழிற்சேரறிஞர்பெரியவனஞ்சேரறிஞர்பேதநாடி, லொருத்தரொருத்தனைவிஞ்சாரிருவருமொத்தையமில்வீடுற்றாரன்றே. (௬)



சாலவும்வாதனைபோகிலிம்மனஞ்செய்தொழில்புரிந்துந்தான்செய்யாதாஞ், சீலமனநெடிதகலிலருகிருந்தார்செப்புமொழிதெரியாதாப்போற், றாலமனந்தொழில்விடினுஞ்செய்ததாம்வாதனையேதுன்னுமாகிற், கோலவுடலசைவறினுங்கனவிலேவரைநின்றுங்குழிவீழ்வார்போல். (௭)

தொலைவிற்றொழிற்செய்யுமனந்தொழினீங்கிலதுதானேசுகசமாதி
யலைவறுகைவல்லியமும்பரமாநந்தமுமென்றேயறிவாய்நெஞ்சி
னாலைவுதிரமெனுமிரண்டுமெத்தியானந்தியானமெனுமுபயத்துக்கு
நிலையுறுகாரணங்களாமாதலிலிம்மனமுளைக்குநீர்மைதீர்ப்பாய். ()

சிந்தனைவாதனையின்றித்திரமானமனத்தினையேதியானமென்ப, ரந்தவுபசாந்தமுமக்கேவலத்தன்மையுமென்றுமதுவேயாகு, மிந்தவுயர்பதப்பொருட்டுவாதனைசாலவுநேர்மையெய்தவேண்டுஞ், சந்ததம்வாதனையில்லாமனந்தொழிலில்லாப்பதத்தைச்சாருமத்தால்.

நெருக்கமுறுவாசனையேநெஞ்சினதுதொழிற்றிரமாநீங்காத்துன்பம், பெருக்கவிடுமாதலினால்வாதனையைமிகநேர்மைபிறக்கச்செய்வாய், வருக்கமுறுபலபொருளினானெனும்பாவனைமனத்தான்மாற்றியெங்ங, னிருக்குதியங்ஙனமிருப்பாய்வனாயிலேமனையிலேயெங்கேயேனும். (௧0)

இல்லுறைவோர்சமாதானவிதயத்தோரகங்கரமாமேதந்தீர்ந்தோர், புல்லுமனையேகாந்தவனமாகுங்கடைவீதிபுக்கிக்காண்போர், செல்லவரவுலாவியும்பற்றாமையினாற்கடைவழிச்செல்லாதார்போல்வார், நல்லறிவுநிறைந்தோர்க்குமப்படியேகாடொக்குநாடுதானே. ()

துயில்விழிப்புச்சொலல்செலவுதொடர்ந்தாலுமகமுகமாந்தொடர்பாலென்றும், பயின்மனையூர்நாடெல்லாம்பழுவம்போற்காண்பவரேபரமசீலர், செயிரிலாவகமுகத்தாலெல்லாமாகாசமாய்த்தீருஞ்சித்த, முயிரனையாய்சீதளம்வந்துண்ணிறையிற்சீதளமாமுலகமெல்லாம். (௧௨)

இதையமயலாலெரியிலுலகெலாங்காட்டெரிபோலெரிந்துதோன்று, முதையமுறுமுயிர்க்கெல்லாமுள்ளிருப்பதேபுறத்துமுண்டாய்நிற்குஞ், சுதைபயிலூர்புவிகால்விண்டொகுவனாநீணதிதிக்குச்சு

ழ்ந்தவெல்லாம், புதைதலுறுமுட்கரணதத்துவத்தின்பங்குகளாய்
ப்புறத்தினிற்ப. (கங)

உள்ளுணர்விலின்புறுவோன்பொறிகளாற்கருமங்களுய்ப்போனு
யுந், தள்ளுசுகதுக்கவசஞ்சாராதோனநவரதஞ்சமாதியுற்றோ,னுள்
ளுகின்றதனைப்போலெவ்வுயிருமெனப் பிறர்பொருள்களோடேயெ
ன்ன,வெள்ளுபயத்தாலன்றியியல்பாலேகண்டானேயெல்லாங்கண்
டோன். (கச)

இன்றிறவுவந்தாலுங்கற்பாந்தத்தெய்துகினுமிலங்குஞானி, கன்
றியசேற்றுறுபொன்போற்களங்கமுறானெல்லாமாய்க்கண்ணுயாறி
ப், பொன்றலடிமுடிவின்றி யொன்றாயின்பத் தளவாய்ப்பொலிதே
சாகித், துன்றியகாட்சிகளில்லாக்குறியுடைத்தாமெனச்சுருதிசொ
ல்லுமன்றே. (கரு)

எல்லாமென்றுரைத்ததெலாமறிவித்தற்பொருட்டேயாமிசையச்
சொன்ன, சொல்லாலென்வீணன்றேயாதலினாலோமென்றுதுணி
கவித்தை, நல்லாயிங்கிதற்குமுதனுளுளதோரிதிகாசநவிலக்கேட்
பாய், புல்லாரொன்வேடர்குலச்சுரகுவப்பேரோன்சரிதைபுதுமைத்
தன்றே. (கசு)

இமகிரியின்கோடானகைலைவரையினிலேமசடர்களென்னு
மமர்வரிவில்வேடருளரவர்க்கரசன்சுரகுவெனுமசையாவீரன்
சமநிலையாற்கோமுறையாலருண்முனிவாலுலகநெறிசமைக்குநாளி
னமதுவலியாலுலகைநலிகுதுமேலவர்சோகநமக்கேயன்றோ.(கஎ)

அல்லாதுதண்டமுறையியற்றோமேலுயிர்காப்பற்றவத்தின்மாயு
ம், பொல்லாதிவ்வரசென்றேயூசலாடுளத்தினனாய்ப்புந்திநைந்தா
ன், மல்லாரும்புயத்தவன்பான்மாண்டவியமுனிவரலும்வணங்கிப்
போற்றி, நல்லாயுன்வரவினான்மிகவாழ்ந்தேனல்லோரினுட்டப்ப
ட்டேன். (கஅ)

தருமமுழுதையுமுணர்ந்தபகவநீநெடுங்காலந்தளர்வுதீர்ந்தா,யரு
வினையேனையப்பாடறுத்தியாலையம்போலரந்தையுண்டோ, விருநி
லத்தென்கோற்கீழோரொன்கருணைமுனிவுகளாலின்பதுன்ப, மருவு
கின்றகவலையைக்கண்டரியேற்றின்முன்கரிபோன்மறுகுகின்றேன்.



அருணன்வெயில்போலெங்குநிறைசமமென்மதியிலேயணுகுமா
று, கருணையினாலுணர்த்தியெனுங்காவலற்குமாண்டவியன்கழறு
கிற்பான், பொருவறுதன்விசாரத்தாலிமைப்போதின்மனவழுக்கு
ப்போகாநிற்கும், வருசரற்காலந்தோன்றுமாத்திரத்துமூடுபனிமா
ய்வதேபோல். (உ௦)

யானாரிச்சகமெங்ஙன்பிறப்பிறப்பெங்ஙனமென்றேயிதயத்துள்ளே
யானுமலிப்படியேயாராயின்மகத்துவமேயடைதிசாலத்
தானானசுபாவனாயிருந்துளநின்விசாரத்தாற்றானேநெஞ்ச
நீகாடும்படிதோன்றித்தன்னுருவிட்டிளைப்பாறித்துன்பநீங்கும். ()

வெம்புதல்போய்த்தண்ணென்றவுன்மனதுக்கிவ்வுலகின்வியாபா
ரங்கள், செம்புகர்வேழத்தினுக்கான்குளப்படிபோற்றோன்றுமாநீ
னநெஞ்சுக்,கம்புவியிற்றொழில்சிறிதேயாகினுநீந்திடவரிதாமாவின்
பாதப், பைம்புனலுங்கிழக்கொதுக்குக்கெல்லைகளைகாணாதபரவைய
ன்றோ. (உஉ)

எத்தனையெத்தனைநீத்தாயகிலத்தைப்பரஞ்சுடராயெறிக்குஞ்
சோதி, யத்தனையத்தனைதோன்றுமெங்காண்மட்டனைத்தும்விடாய
ங்காண்மட்டுங், தத்துவமாம்பொருளெய்தாச்சகலமும்போனாற்சே
டந்தானுஞ்சித்தந், தொத்தறவேற்றுமையெல்லாம்போகாதேற்ச
மமானசோதிதோன்றா. (உங)

பேதமுறுபொருளொருமைதோன்றாதேற்றன்னைத்தான்பெறுவ
தெங்கே, யாதலினாற்றனைப்பெறுதற்பொருட்டாகவனைத்தினையும
கற்றல்வேண்டு, மேதமறவனைத்தையும்விட்டாயென்னிற்சேடித்த
திறவாவீடா, மேதகையபதமதுவாஞ்சுரகுவெனும்பெயர்கீர்த்தி
வேடர்வேந்தே. (உச)

வேறு.

சகலகாரணகாரியபரம்பரைத்தன்மையாஞ்சகமேவி
மிகவளர்ந்தவத்துவின்மலவாதனைமனத்தினைமிகநீக்கித்
திகழுமங்கமாமதையுமேல்விடுதியேற்றீதறுநலனுண்டாம்
புகழ்நராதிபவென்றுதன்னிடமுறப்போயினன்றவப்பாலன். (உரு)

முனியகன்றபின்னெயினர்கோன்றனியிடமுந்திநன்மதியாலே
யனிசநானென்பதாரொனநாடினனடிமுதன்முடியீறுந்

தனியுடம்பைநானென்பதுபுதுமையாஞ்சடவுடல்காண்கேனுன்
றுனிசெயிவ்வுடலசேதனந்தசைமுதற்றுன்னுமாதலினன்றே. ()

கரணமீரைந்துமன்னியஞ்சடமெனுங்கணக்கினுனன்றித்
திரளெனக்கிலவுடன்முதனுனலன்சேடமேதெனநோக்கில்
விரவுசீவனேசேடமாமின்னதும்வேறென்றுற்றெரிகின்ற
துரவிதானவேறென்றினுற்றெரியுமீதுயர்ந்ததத்துவமாகா. (உஎ)

தெரிவதாகியவிதனையுமகற்றுவன்றெரிபொருணுனமோ
பெரிதுசேடமாய்விகற்பமற்றமலமாம்பேரறிவியானுகு
மரியயன்சிவனிந்திரனந்தகனுதியாமிடந்தோறுஞ் [ம-
சுரிகொண்முத்தினுண் ணூலெனநிற்குமாற்றேன்றுமிவ்வுயர்போத

பகவனுகுமிவ்வாத்துமதத்துவம்பரமமாஞ்சிற்சத்தி
சகநிகழ்ச்சியாநோயின்றிவெருவுறுந்தனிவடிவுடைத்தாகிக்
கருபமுற்றையும்விழுங்கியெப்பொருளினுங்கலந்துநுண்ணியதாகி
மிகுமபாவபாவங்களற்றயனுறைவீடளவுளதாகி. (உகூ)

சத்தியாவுக்குமுறைவிடமாமிதுதனித்தனிச்சத்தாகிப்
பத்தியாகியிச்சகத்தினிற்காண்பனயாவையும்பலவாகச்
சித்தசைந்துளவிசாலமாமல்லதுசிறிதும்வேறிலதாகுந்
தொத்துபற்றின்றிக்காண்பதற்றெழுபவந்தொடர்மயக்கமுமற்றே.

சுழுத்தியிற்றிரமுற்றவன்றெழிலெனத்துகளறுசமனுகி
யழுத்தமாகியவாத்துமதத்துவத்தமர்ந்தனனெனத்தீர்ந்து
விழுத்தகும்பதமெய்தினன்விவேகத்தின்மெய்மைநிச்சயத்தாலே
வழுத்தருந்தவக்கவுசிகன்விப்பிரமரபினையடைந்தென்ன. (ஙக)

வரகுணங்களாமனைத்துமிற்றுயில்பவன்மனத்தொழினிகராகி
சுரகுவென்பவனசைவறுசிகையினுற்றுலங்குறுசுடரொத்தான்
விரவுநல்லருளருளின்மைவிருப்பொடுவெறுப்புமச்சரந்தொந்தம்
பரவுநன்மதிமூடமென்றினையவும்பயில்வறநிகழ்வுற்றுன். (ஙஉ)

வேறு.

ஒன்றுயுணர்ந்தசுரகுப்பெயருத்தமற்கும்
பன்னுதனெனும்பெயர்ப்பார்த்திபமாமுனிக்கு



நன்றுனவன்பால்வருநன்மைநயந்துகேட்பாய்
குன்றுர்புயத்தாயெனமாதவன்கூறலுற்றுன். (ஙங)

பாரக்கர்குலப்பரிகப்பெயர்பாரின்வேந்தாம்
வீரக்கழலோன்சுரகுப்பெயர்வேந்தனண்ப
னீரைக்கனமாரிமறுத்தலிலியாருந்துஞசக்
கோரக்கனன்மண்டுதல்கண்டுகுலைந்துநொந்தான். (ஙச)

இன்னுதனநாடுவிட்டேகிவனத்திலெய்தி
யன்னுதரம்போய்த்தவஞ்செய்தவிழ்பன்னமூணுய்ப்
பன்னுதநாமம்படைத்துத்தவப்பான்மையாலே
நன்னுதலும்பெற்றனனற்றவமொப்பதுண்டோ. (ஙரு)

ஒருமூவுலகென்னுமடத்தொருமித்திருந்தான்
பொருண்மேவுகின்றசுரகுப்பெயர்பூபன்றன்பால்
வருவானெதிர்தோன்றலுமற்றவனன்போடெய்தி
யிருவோருமன்புற்றிருந்தின்னனபேசலுற்றூர். (ஙசா)

நினையிப்பொழுதெய்தலினீங்கருமின்பமுற்று
வினையற்றதென்றசுரகுப்பெயர்வேந்தைநோக்கி
யுனையுற்றுமாண்டவ்வியனேதியஞானமொப்பத்
தனையுய்க்குமெய்ம்மைப்பதஞ்சார்ந்தனனியானுமென்னு. ()

வேறு.

மிகத்தெளிந்துகெம்பீரமாய்ச்சமமதாம்விழியா
லிகத்துறுந்தொழின்மன்னவவியற்றுதிகொல்லோ
பகுத்தகாலத்தையறிவுறுநினதுபாவனைதான்
றெகுத்தவாதியும்வியாதியுந்தொடர்கிலைகொல்லோ. (ஙஅ)

அடையும்போதினிதாகியபோகத்திலழுந்தா
திடைநிலாய்கொலோசங்கற்பமற்றிளைப்பாறித்
தடையில்சாந்தமாய்முத்தியாய்ச்சலனமொன்றில்லா
நடையின்றுயர்சமாதியைநண்ணினைகொல்லோ. (ஙகூ)

வெறிதிருக்கினுந்தொழிலினைமேவினும்விடாம
லறிஞனென்றுதான்சமாதிவிட்டகன்றவனுகுஞ்

செறியுஞானஞ்சேர்மனத்தினர்சகத்தொழில்செயினும்
பிறிவிறத்துவநிட்டராய்ச்சமாதியிற்பெயரார். (௬௰)

பிரமவஞ்சலியுடன்பதுமாதனம்பெறினும்
விரவசாந்தர்கள்சமாதியின்மேவலராசைத்
திரணபாவகனுகியசிற்றுணர்வொன்றே
வரசமாதியாம்வெறிதிருக்குமஃதன்றுவள்ளால். (௬௧)

ஒருமையாயென்றுமனமிறந்துண்மையையுணரில்
வரசமாதியாஞ்சொல்லினர்மனத்தினினிறைந்தோர்
மருளின்மெய்ம்மையோர்மதிதம்மைமறக்கிலாசிறிதுந்
தருந்தொழிற்றிறமறக்கிலாக்காலமேசமமாம். (௬௨)

நெறிகொள்காற்றுத்தன்கதியினைமறப்பிலாநெறிபோ
லறிஞர்புந்திவேறறிவதில்லறிவையேயயரார்
பிறிவில்புந்தியிலொருமையோர்சமத்துவப்பெரியோர்
செறிதொழிற்பிறிவகற்றினோர்தற்பதம்பெற்றோர். (௬௩)

ஆதலாற்பன்மையொருமையாமுடற்றொழிலனைத்திற்
போதுசெய்கிலாவுத்தமவாக்கினாற்பொலிந்த
சேதனத்தவரொங்குளர்சித்திரமாகப்
பேதமற்றறிவறிந்தனைதற்பதம்பெற்றாய். (௬௪)

உள்ளூறக்குளிர்ந்தனையுவாமதியெனவுள்ளத்
துள்ளகங்கரத்துயரறத்துரிசறநிறைந்தாய்
தள்ளலாநிலைபெற்றெங்கும்விளங்குதிதானே
தெள்ளியோயென்றபரிகற்குச்சுரகுமேற்செப்பும். (௬௫)

பரந்தசொற்களாற்பயனென்கொல்பயனெலாம்பாறி
நிரந்தரஞ்சமமாய்மனந்தன்னுளேநிகழ்ந்து
சுரந்தவின்பமாய்நிகரிலாவொருவிழிதோன்றித்
திரந்தனிற்றெரிகின்றதாலென்றனன்றெளிந்தோன். (௬௬)

சுரகுகதை முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-௧௧௩௭.

# பாசவிபாசர்கதை.

இத்திறஞ்சுரகுபரிகனென்றிசைத்தவிருவருஞ்சகத்தொழுங்கெ
ண்ணிப், பத்திசெய்தொருவர்க்கொருவர்பூசித்துப்பரிந்துதம்பணி
தலைநின்று, ரத்தியாத்துமமேநித்தமும்வடிவாயகமுகமாய்மகிழ்வெ
ய்திச், சித்தினைவிடாமலனுபவிப்பவர்க்குச்சிறிதுமோராகுலஞ்சே
ரா. (௧)

ஆசைவன்பாசத்திரளினாற்கட்டுண்டரும்பிணியீக்கடிக்கணுங்கி
யேசுறுபோகக்கதைகளான்மொத்துண்டிச்சைமுட்கோலினாலுலைங்
காசுறுகருமச்சேற்றிலேயழுந்திக்கடுஞ்சகக்காட்டிலேசுழன்று [து
வீசுமாமோகத்தளிர்நிழற்றுயிலும்வீரனேசீவனாமெருது. (௨)

மேவுறுதுன்பப்பெருஞ்சுமைசுமந்துமீட்சிபோக்கிவையுடற்புண்ணு
யீவறுபிறவிக்குழியில்வீழ்சீவவெருத்தினையிக்குழிநின்று [தே
மோவலின்முயல்வாலெடுப்பதேவலியாமுயர்ந்தஞானிகளுறவுள
ளுவிகர்நாவாய்தருவபோலூகநல்குவர்பவக்கடல்கடக்க. (௩)

எவ்விடத்திலைநல்லஞானிகளாமீர்ங்கனிமலர்குளிர்சோலை
யவ்விடங்கானன்மேடதாமாங்கேயமர்பவரறிவிலாரன்றோ
கவ்வியசெல்வநட்புநூல்சுற்றங்கருமமாதிகளெலாமுதவாச்
செவ்வியமனமேயுதவுறல்வேண்டுஞ்சீவனைச்செல்கதியேற்ற. (௪)

நெறியுறவிடாமலுடனுறைநட்பாநெஞ்சமாத்திரத்தினைக்கூடிச்
சிறிதுநாடுதலுஞ்சீவனுய்வுறுமாற்சிங்கியாமிந்தவூனுடலை
முறிதருகாட்டமோட்டினேராகமுற்றுறுகருத்தினானோக்கி [வை.
யறியிலிவ்வளவாலறிந்துசேர்ந்திடலாமண்டருமிறைஞ்சுபேரறி

நிறைபெருங்கடலொத்துளாயெலாங்கடந்துநிகாரறப்பற்றறவெறி
தாய்க், குறைவில்சிற்சுடரின்கொழுந்துடன்கூடிக்கோதறவசைவ
றக்குலாவு, மறைவறுதுரியவிழிவெளிப்படுமேன்மற்றதனுடனதுநி
கரா, முறைமையிற்றுயில்வோர்க்கண்ணிதாவுவமைமொழியலாய்
த்தோன்றிடுமன்றே. (௫)

ஆனவவ்வவத்தைவடிவெலாம்பரிக்குமம்பரம்போலகன்றுளதா,மீ
னநெஞ்சுடன்சேரகங்கரமிறந்தாலெப்பொருளிடத்திநுமிருக்குந்,

தீனமில்பரமானந்தமாய்த்தோன்றுந்திகழ்பரமாத்துமவடிவாந், தானனிமுயலிற் கிடைத்திடுந்துயில்வோர் தன்மைபோற் றம்மினுடுவதாம். (எ)

உரைகளுக்கெட்டாதுளத்தனுபவிக்கினுறுவதாமுரைத்தவத்துரியங், கரையறுமிவைகண்முழுதுமப்பொருளாங்கனபரிணுமியாமுள்ளம்,வரைவறவொடுங்கினுட்புறமெங்குமன்னியசராசரவடிவாம், புரையறுதேவதேவனும்பரமப்பொருளனுபவப்படுந்தானே. (அ)

அதற்பின்விடயவாதனைகளறுவதாகுமதற்பின்னர்
விதப்பிலாதபொருளினுடைவிளக்கமாகுமதற்பின்னர்
சுதப்பண்பில்லாச்சமத்துவத்தாற்சொரூபந்தன்னிற்பரிணும
மிதத்தினுளதாமுயர்ந்தோர்க்குமெண்ணவொண்ணுவடிவிதுவே.()

மனத்தைமனத்தான்மாய்வித்துமாசில்பொருளுணக்காரேலோர்
தினத்துமுலகின்றுயர்மாயாச்சித்தமிறக்கிற்செறிசுகத்தாற்
கனத்தவுணர்வின்மதிநிகழுங்கழறுமிதற்கோரிதிகாச
மினத்திலினியாய்கேட்டியெனவிசைத்தான்வசிட்டனிராமனுக்கே.

சையமென்னுநெடுங்கிரிமேற்றவவத்திரிமாமுனியுறையு
ளுய்யவதன்பாவிருமுனிவர்சூழலொன்றினுறைகிற்போர்
மெய்யராகுமவ்விருவர்க்கிருவர்பிறந்தார்வியன்புதல்வர்
செய்யவிபாசன்பாசனெனச்செப்பும்பெயரோர்செறிநண்போர்.()

ஒழுங்கால்விருத்திபெற்றிருந்தோரொன்றேயிரண்டாயினவென்ன
வழுங்காவுளத்தோரவர்தந்தையன்னையென்போருயிரிறப்ப
விழுங்காகின்றபொருமலொடுமேற்செய்பிதாக்கள்விதிகண்முடித்
தெழுங்காதலினுனைந்திரங்கியிருபாலகன்றாரிருவருமே. (கஉ)

அளவில்காலம்வனத்துறைந்தாரரியதவத்தாலுடல்வாட்டிக்
கிளருமாசைவிட்டகன்றார்கிட்டப்பெற்றார்கேண்மையினு
ளுளமுங்கண்ணுங்களிப்பெய்தியுயர்ந்தவிபாசனுரைசெய்வான்
வளருமுலகினல்லுறவேமன்னுமுயிர்போல்வந்தனையால். (கங)

இதுநீள்காலமெங்குறைந்தாயிதயவிடர்தீர்ந்தனைகொல்லோ
பொதுவாயுனைநீயறிந்தனையோபோதவிஞ்சைபலித்தனவோ



சதுராநலனுண்டாயினையோசாற்றுமென்றமொழிகேட்டு
முதுவாய்மையினுற்பாசனிவைமொழிந்தான்விபாசன்முகநோக்கி

உயிர்போலுறவேவிதிவயத்தாலுன்னைக்கண்டேனுளங்குளிர்ந்தே
செயிர்சேர்பிறப்பிலுழல்வேற்குச்சிறந்தநலனுந்திறனெங்கே [ன்
பயில்வதறிவதறிவளவும்பாயுமுள்ளங்கெடாதளவும்
வெயில்வெம்பவநீங்காதளவுமிக்கநன்மைத்திறமெங்கே. (கரு)

மனத்தின்முளைக்குமாசையெலாம்வடித்தகுடாரத்தான்மரம்போற்
கனத்தவேரோடறுமளவுங்கண்ணுஞானம்பெறுமளவு
மனத்தபேதம்போய்ச்சமமாமளவும்போதமுறுமளவுஞ்
செனித்துமரிக்குந்துயரல்லாற்சிறந்தநன்மைத்திறமெங்கே. (கசு)

மடமைநோய்க்குமாமருந்தாய்வருமாத்துமதத்துவப்பேற்றை
விடநின்றவர்க்குவன்பிறப்பாம்விடேசிமேன்மேல்வந்திடுமோ
விடரின்பத்தினிடைப்பட்டுமிறப்புப்பிறப்பில்வீழ்ந்தலைந்துந்
தடமாருலகிலுழலுயிர்கள்சருகினுலர்வரொன்றிசைத்தான். (கஎ)

பாசவிபாசர்கதை முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-ககருச.

# வீதகவ்வியன்கதை.

இன்னணமேநன்மைவினுத்தம்மிற்றுமியம்பியுறையிருவருக்கு, முன்னியநற்காலத்தான்முத்திதருமெய்ஞ்ஞானமுந்திற்றன்றே,யன்னதினுலுரைக்கின்றேன்வெம்பவத்தைஞானத்தாலன்றிமாய்க்கப், பின்னையொருநெறியில்லைப்பாசத்தாற்பிணிப்புண்டபிணிநெஞ்சுக்கே. (க)

பற்றிலதாய்நின்மலமாமனம்விவகாரம்பயின்றும்பந்தமேவாப்,பற்றுளநெஞ்சளவிறவம்படைத்தாலும்பந்தமேபயிலுமுள்ளிற், பற்றிலதாயினியதொழில்பயில்சீவன்புறத்தொழில்கள்பண்ணினுலும்,பற்றறப்பண்ணுவிடினும்பண்ணுவோன்புசிப்போனும்பான்மைமேவா.

என்னலுமேபற்றுவதெத்தன்மையெப்பற்றுலெய்தும்பந்தந், துன்னரும்வீடெப்பற்றுலெய்தலாந் தொடர்பற்றைத் துடைக்குமாறென், பன்னுகெனுமிராமனுக்குமுனிபகர்வானுடலுயிரைப்பகுப்

பதொன்று, முன்னாகிலாதுடலினைநம்புதல்பற்றாமதனாலேயுளதாம் பந்தம். (௩)

ஈதனைத்துஞ்சொரூபமேயானிங்கெத்தையிச்சிப்பேனெதையிகழ்வேனெனல்பற்றின்மை, மாதுயர்தீரிதுசீவன்முத்தர்மெய்யின்மன்னுமாவியானில்லைப்பிறருமில்லை,மேதகுமின்பங்களெலாமேவின்மேவமேவாதேன்மேவாதாயிடுகவென்றே, யோதியவாறுள்ளேபற்றின்மையுண்டேலுயர்வீட்டுக்கிதுநெறியென்றுணர்தியன்றே. (௪)

கருமமிலாமையைவிரும்பார்கருமம்பற்றார்கருதுபலன்விட்டிரண்டுங்கண்டாலொப்போர், மருவியபற்றிலாதவரொன்றுரைப்பர்மேலோர்வருகருமபலாதிகளைக்கருமத்தாலே, யொருவலறமனத்தாலேநிபுணமாகவொருவுதல்பற்றின்மையெனவுணர்தியித்தாற், பெருகவளர் தொழிலனைத்துங் குற்றந்தீர்ந்துபெறலரிய முத்தியையும் பேறாநல்கும். (௫)

புழுமுதலாம்பல்பிறப்பிற்றோன்றிப்பல்காற்பூதமெலாங்கடற்றிணைபோற்பொன்றுந்தன்மை, பழுதுதரும்பற்றினதுபடர்ச்சியாகும்பற்றுத்தானிருவகையாமவற்றினொன்று, நழுவுபயனிலியொன்றுவணங்கற்பாற்றாநவின்றபயனிலிமூடர்நண்ணற்பாற்றாம், வழுவறுதத்துவமுணர்ந்தோர்க்குடைமையாகவணங்கற்பாற்றாம்பற்றுமருவுந்தானே. (௬)

ஆத்துமதத்துவவுணர்வால்விவேகந்தன்னாலடைவாகவுண்டாம்பின்பணுகாச்சென்ம, மேற்றமுளதொழுதகையபற்றீதாகுமீதன்றிப்பயனிலியாம்பற்றேதென்னி, னூற்றமுறுமுணர்வின்றியுடலமுன்னாமுறுபொருளினாலுண்டாமுலகந்தன்னிற், றோற்றமுறுபிறவிமீண்டுள்ளதாக்குந்தோன்றலேயிவையிரண்டுந்துணிந்துகொள்ளே.

வளையாழிகைதரித்தசெங்கண்மேனிவணங்கப்பாற்றாம்பற்றின்வசத்தினாலே, யிளையாமல்விவிதமாந்தொழிலினாலேயெவ்வுலகுநன்றாகவிரங்கிக்காக்கு,முளையாதவிஞ்ஞானக்கதிசேர்சித்தருலகபாலகராதியுரைத்தவாறே, விளையாடிவணங்கப்பாற்றென்னும்பற்றால்விரிந்தசகமூர்த்தத்தின்மேவிநின்றார். (௮)

கேடானநல்லதெனுநினைவினாலேகிளர்போகவசத்தாலேகிட்டிநெஞ்சம், வீடாதபயனிலியாம்பற்றினாலேவெறும்பிணத்துக்கழுகு



போல்வீழுமன்றே, பாடானபயனிலியாம்பற்றுளோர்க்குப்பன்னரகங்களும்வீடாய்ப்பண்ணப்பட்ட,வீடானபயனிலிப்பற்றுள்ளோரொன்னுமிளவிறகானரகவெரியெரியுமன்றே. (௯)

விச்சையெனும்விழிநன்றாய்விளங்கப்பட்டுவெம்மாயவிடயத்தின்மீட்சியெய்தி,யிச்சையுறுபற்றென்பதெங்குமில்லாவியன்மனத்தோடிருப்பவரோயிறவாமுத்தர், நிச்சயமாயெப்போதுமெவற்றின்பாலுநிற்பவனாயனைத்துடனுநிற்போனாகி, யெச்செயலுஞ்செய்வோனாஞ்சீவன்முத்தனியற்றியவிம்மனத்தின்றனியல்புகேளாய். (௧௦)

தொழிலினினைவிற்பொருளில்விண்ணின்மேல்கீழ்சூழ்திசையிற்புறப்போகத்தொகுதிதம்மி, விழிதருமைம்பொறிநடையிலுள்ளினிற்குமின்னுயிரிற்சென்னியிலாநத்தினாவி, லழியும்விழிகளின்மூக்கிற்புருவந்தன்னிலகங்கரத்திற்சீவனினுள்ளாகாசத்தில், விழிநனவிற்சொப்பனத்திற் சுழுத்திதன்னில்வெள்ளை முதனிறமைந்தின்வியன்வண்ணத்தில். (௧௧)

சலனத்திற்றிரத்திலடிநடுவிலீற்றிற்சமீபத்திற்றூரத்திற்சரீராங்கத்திற், பலபண்டந்தன்னிற்சேதனத்திற்சத்தபரிசாதிகளின்மகிமைபயிலின்பத்தி, லுலவுவரத்திற்போக்கிற்காலப்பண்பிலொருசிறிதும்பற்றாமலுணர்விலாறி, நிலவியகாண்பனசிறிதுபயின்றுமெங்குநிராசையாய்ப்பரசுகத்தினிற்குநெஞ்சே. (௧௨)

செப்பியவத்திறநின்றுபற்றொன்றின்றிச்சீவத்தன்மையைச்சேராச்சீவன்முத்த, ரிப்புவியிற்றொழிலெல்லாஞ்செய்கதீர்கவின்பவுணர்வன்செய்கையியற்றினாலுந், தப்பறவேவிட்டாலுந்தொழில்கடன்னாற்றருபயன்களொருசிறிதுந்தாக்கமாட்டா, மைப்புயல்கள்பலவிதமாயெழுந்தபோதும்வானகத்திற்பற்றாதவகையேபோல. (௧௩)

அன்றியேயதுதனையுந்தீரநீக்கியறிபொருளின்முடிவானவறிவாற்றுன்னி, யொன்றுமுபசாந்தனாய்ப்பளிங்குபோலுள்ளொளிமேவிச்சீவனொருமித்துநிற்ப, னன்றுணர்சிற்சுகராகிப்பெரியோராகிஞானபரராய்ப்பரமாநன்றாய்ப்பெற்றோர், நின்றசைவார்புறத்தின்மயிற்பீலிபோலநிலைகலங்கார்மேருவைப்போனெஞ்சினுள்ளே. (௧௪)

அறிபொருளைவிட்டகன்றாலழியுஞ்சித்தமந்தநிலைவியாபாரமனைத்துமில்லாச், செறிநனவிற்சுழுத்தியாமிதனைநாளுந்தீராதபரிசயமேசெய்யச்செய்யப், பிறிவின்முதுதுரியமாமென்பர்மேலோர்பிழையிலாவிதனிலேநிலைமைபெற்றுக்,குறியறுமாநந்தமேகாந்தசீலக்கொள்கையாலனாநந்தங்கூடுமென்றே. (௧௫)

அந்தவனாநந்தமாநந்தமென்னுமறிவினதீதந்தன்னையடைந்துளோனைத்,தொந்தமிலாயோகியெனச்சொல்லலாகுந்துரியாதீதந்தனையுந்துன்னினோனும், பந்தமுறுபவம்போய்த்தாமதத்தால்வந்தபலவபிமானங்கள்போய்ப்பரமவின்ப, நந்தவிற்றன்மயமாஞ்சற்பாவந்தன்னினன்னீரிலுப்புப்போனன்றாயொன்றாம். (௧௬)

சடமசடமெனுநோக்கமிரண்டினூடேதனியாகிநின்றபரதத்துவத்தை, யிடவியபோதாரண்யமுதலாம்வேதமிராமனேபலகாலுமியம்புமன்றே, படருறுகாண்பனகாட்சிமேவும்போதிற்பரம்பொருளின்பற்றாகிப்பயின்றவின்பந், திடவநுபூதியின்வடிவாமாதலாலேதிகழ்பிரமசாரமெனச்செப்புந்தானே. (௧௭)

தெரிபொருளுந்தரிசனமுஞ்சேரும்போதிற்சேர்ந்தசுகவறிவுமிகச்சிறந்ததாகுந், தெரிபொருளால்வளைப்புண்டாற்பந்தமாகுந்தெரிபொருளைவிட்டகன்றாற்றிடங்கொள்வீடாந், தெரிபொருளுந்தரிசனமுஞ்சேரும்போதிற்சேர்ந்தவநுபூதியிடர்தீர்ந்ததாகுந், தெரிவுறவாங்கதுபற்றிநிற்பாய்நீநின்றிரநிலையாஞ்சுழுத்திதனைச்சேருவாயே

அதுதுரியநிலையடையுமடைந்தபோதிலான்மாத்தான்றூலமலவணுவுமல்ல, திதமுறுமுன்னிலையல்லப்படர்க்கையல்லச்சித்தசித்துண்டில்லையெனுந்திறங்களல்ல, வுதிதமுறுநானல்லப்பிறனுமல்லவொருவனலவநேகனலவுலகமென்றே, யிதுவெனக்காண்பனவாகிச்சித்தமாதியிருமூன்றிந்திரியத்துக்கிடமாய்நிற்கும். (௧௯)

ஆங்கதுவேயதீதபதமாதலாலேயதுகிஞ்சிலன்றெங்குமதுவேயாகும், பாங்குறுவீடென்றும்பருலகிலில்லைப்பாதலத்திற்பூதலத்திற்பார்க்கிலில்லை, வீங்கியவாசைகளெல்லாமிறந்தகாலைவிரிந்தமனமிறப்பதுவேவீடென்றோது, மோங்கியவீடெனக்குளதென்றுள்ளேயெண்ணமுண்டாகின்மீண்டுமனமுற்பவிக்கும். (௨௦)



நினைப்புமிகிலிவனுக்குப்பிறப்பிறப்புநீங்காதுவன்பந்தநிலையதாகு, மனைத்தினுக்குமதீதமாயுருவமெல்லாமாகியகன்றாத்துமதத்துவமேநிற்கில், வினைத்தொடராம்பந்தமெதுமுத்தியேதுவேரறச்சிந்தையைக்கெடுப்பாய்மேலதாகத், தனைத்தெளிந்துநிறைந்தமலநெஞ்சாய்நல்லசாந்தியையுற்றோர்விரும்பார்சற்றுமொன்றும். (௨௧)

வெந்தோடுமோபத்தாங்கருவேற்காட்டைவெட்டுமழுப்பரமசுகமேவுந்தானஞ், சந்தோடஞ்சாந்தியெனுமரப்பூங்கொத்துச்சாற்றுறுமிந்நிராசையுறிற்றளர்வுதீரு, மந்தோபார்குளப்படியாமுளையாமேருவாசைகுருவிக்கூடாமவனிமூன்றும், வந்தோர்புன்றுரும்பாகுநிராசைபூண்டமாறாதவலங்காரவடிவுளோர்க்கே. (௨௨)

காயத்தில்வேறாகத்தன்னைக்கண்டோன்காயமீரினுமறியான்கன்னற்கட்டி, தீயிற்காயினுமரிந்தபோதுமின்பந்தீராதவாறுபோற்றெளிந்தஞானி, மாயத்தின்மோகத்தாற்பேதமாகான்மணந்தபரபுருடன்மேன்மனஞ்சேர்மங்கை, நேயத்தான்மனைத்தொழில்கள்செய்யுமாப்போனிகழ்தொழிற்செய்யினும்பரத்தினிலைமைநீங்கான். (௨௩)

பண்டத்திற்பற்றின்மையாலேசித்தம்பயில்சாந்திமுத்திதரும்பகர்ந்தமுத்தி, பிண்டத்தோடிருந்தாலுமிராவிட்டாலும்பேறாகும்பற்றறுத்தபெரியோர்க்கென்பர், மண்டுற்றநேயமறவாழ்வோரின்பம்வருஞ்சீவன்முத்தராம்வளர்நேயத்தாற், றொண்டுற்றுவாழுமவர்பந்தமுற்றோர்சொன்னமூன்றாமவனேதூயமுத்தன். (௨௪)

வருதொழிலின்விருப்புறான்வத்தமானவழிநிற்பன்சென்றவற்றைமனத்தினெண்ணான், கருமமுழுவதுமியற்றுந்தொடர்பந்தத்திற்கலந்தவர்பான்மனம்பற்றான்கவலைகூரான், மருவியவோர்பத்தர்பாற்பத்தனாகும்வஞ்சகர்பால்வஞ்சகனும்வாலர்தம்பாற், பருவமுறாவாலனும்விருத்தரானோர்பால்விருத்தனுந்தீரர்பாலுமாங்கே. (௨௫)

விடலைபால்விடலையாந்துயருற்றோர்பால்வெந்துயரமுறுநிலைமைவிடாதபுந்தி, திடமுளதாமாநந்தநிறைந்துதோன்றுஞ்செவ்வியனும்புண்ணியர்தஞ்சிறப்பேசெய்யு, மடமையிலாவறிஞனுந்தெளிந்தோனாகுமதுரமுளனுந்தீனமனமில்லோனுஞ், சுடர்குளிரின்மதிகருகிலெரிகீழ்நோக்கிற்றுளங்கிவியவான்சீவன்முத்தன்றூயோன். ()

